# திருமுறையில்
# இயற்கையும் இறைமையும்
## Thirumurayil Iyarkaiyum Iraimaiyum



THIS BOOK IS
PUBLISHED WITH THE FINANCIAL ASSISTANCE OF
TIRUMALA TIRUPATI DEVASTHANAMS
UNDER THEIR SCHEME
'AID TO PUBLISH RELIGIOUS BOOKS'

"செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே!
நெடியானே! வேங்கடவா! நின்கோயி லின்வாசல்
அடியாரும் வானவரு மரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேனே"

— பெருமாள் திருமொழி

டாக்டர் இரா. இலட்சாராமன்,
எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
**Dr. R. Laksharaman,**
M.A., M.Phil., Ph.D.,

# திருமுறையில் இயற்கையும் இறைமையும்

டாக்டர் இரா. இலட்சுமணன்,
எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
விரிவுரையாளர் - முதுநிலை
ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் தமிழ்க்கல்லூரி
மயிலம் - 604 304

பேரா. பொன். சௌரிராசனார் நூலகம்
மனை எண் 8, திருநகர் - விரிவு
கிழக்குப் பாண்டிசாலை
விழுப்புரம் - 605 602

# நூல் விளக்கக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | திருமுறையில் இயற்கையும் இறைமையும் |
| ஆசிரியர் | : | டாக்டர் இரா. இலட்சாராமன், எம் ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி., |
| பொருள் | : | இலக்கிய ஆய்வு |
| பதிப்பு | : | முதற் பதிப்பு |
| பதிப்பு ஆண்டு | : | 1995 |
| வெளியீடு | : | பேரா. பொன். சௌரிராசனார் நூலகம்<br>மனை எண் 8, திருநகர் – விரிவு<br>கிழக்குப்பாண்டி சாலை<br>விழுப்புரம் |
| உரிமை | : | பேரா. பொன். சௌரிராசனார் நூலகத்திற்கே |
| தாள் | : | 10.6 |
| அளவு | : | கிரவுன் $\frac{1}{8}$ |
| எழுத்து | : | 10 புள்ளி |
| பக்கங்கள் | : | 196 + 20 |
| விலை | : | ரூ. **40-00** |
| படிகள் | : | 1000 |
| அச்சிட்டோர் | : | சபாநாயகம் பிரிண்டர்ஸ்<br>73-A, கீழரதவீதி, சிதம்பரம். |

திருமலை திருப்பதி தேவஸ்தான நிதியுதவி பெற்றது.

# நூல் காணிக்கை

இந்நூலை
என்னை வாழ்விக்கும்
திருக்கயிலாய பரம்பரை மயிலம் பொம்மபுர ஆதீனம்
அருண்மிகு குருமகா சந்நிதானம்
பத்தொன்பதாம் பட்டம்
ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள்
திருவடித் தாமரைகளுக்குக்
காணிக்கையாக்கி வணங்குகிறேன்.

"பைந்தா துகுக்கும் நறுங்கொன்றைப்
பனிமா மலருங் குழவியிளம்
பயில்வெண் மதியுந் துளையெயிற்றுப்
பாம்பும் சுமக்கும் அன்றுநீ
செந்தா மரைச்சே வடிநோவத்
திரும்பித் திரும்பி யோரிரவிற்
சேல்வென் றகன்ற வரிமதர்க்கண்
சிலைக்கூன் புருவத் தரளநகை
நந்தா விளக்கின் திருமனைக்கு
நாவல் நகரின் வன்றொண்டர்
நடத்த வொருதூ தாளாகி
நடந்த வுனக்கின் றடியேம்பால்
வந்தால் வருமோர் பழியுண்டோ?
மதுரக் கனியே! வருகவே
மயிலை வரையிற் சிவஞான
மணியே! வருக வருகவே."

— ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள்
ஸ்ரீ சிவஞான பாலய தேசிகர் பிள்ளைத்தமிழ்

# பொருளடக்கம்

## நினைக்கிறேன்...
## நெஞ்சம் நெகிழ்கிறேன்...

ஒளிரும் விளக்குக்குத் தூண்டுகோலாய், ஆய்வுப் பணியில் ஊக்கப்படுத்தி, ஆசிரியப் பணியை அருளி, ஆசியுரையும் வழங்கிய மயிலம் பொம்மபுர ஆதீனம் அருண்மிகு சந்நிதானங்களின் திருவடித்தாமரைகளை...

சமய, சமுதாயப் பணிகளில் தம்மை முழுமையும் ஈடுபடுத்தி, அவற்றின் முன்னேற்றத்திற்குப் பாடுபடும் சட்ட ஆலோசகர் சிவத்திரு. குமாரசிவ. இராசேந்திரன் பி. காம், பி. எல்; அவர்களை...

வாடிய பயிருக்கு வான் மழையாய் விளங்கி, என் ஞானத் தந்தையாய், எப்போதும் எல்லாவகையிலும் உதவி, ஆய்வுநெறிக்கு மட்டுமல்லாமல் வாழ்வுநெறியின் வழிகாட்டியாக விளங்கி வாழ்த்துரை வழங்கிய என் பேராசிரியப் பெருந்தகை டாக்டர் பொன். சௌரிராசனார் அவர்களை...

என்னைத் தன் குடும்பத்துப் பிள்ளையாகவே வளர்த்த அன்னை. திருமதி சந்திரா. சௌரிராசன் அவர்களை...

தமிழ் இலக்கிய உலகில் நான் நிலைநிற்க அன்றைக்கே அடிப்படை அமைத்துத் தந்த, என்னை எப்போதும் எழுதிக் கொண்டேயிரு என வழிப்படுத்திய, எழுதுவதையே தம் வாழ்க்கையாக்கிக் கொண்ட, தொல்காப்பியச் செம்மல்,

என் ஆசான், மதிப்புரை வழங்கிய பேராசிரியர் ஆ. சிவலிங்கனார் அவர்களை...

எனக்காகவே வாழ்ந்து, வானுறையும் தெய்வமாய் அமர்ந்து, என்னை வாழவைக்கும் என் அன்னை திருமதி சரோசினி அவர்களை...

மகனுக்காகவே தன் வாழ்வினை அமைத்து வாழும், தமிழக அரசின் நல்லாசிரியர் விருதுபெற்ற வித்துவான் சு. இராமகிருட்டினன் அவர்களை

ஆங்கில நூல்களில் ஏற்படும் ஐயங்களை நீக்கிய தமிழாக்கம் செய்துதவிய என் மனைவி திருமதி. இல. சாந்தி அவர்களை...

நூலாக்கத்திற்குப் பல்வேறு நிலையில் ஊக்கப்படுத்திய எம் கல்லூரி முதல்வர், டாக்டர் சு. திருநாவுக்கரசு, மற்றும் பேராசிரியர்களான டாக்டர் க. விநாயகம், டாக்டர் மா. சற்குணம், திரு. அ. கிருபாநந்தம் ஆகியோரை...

திருவேங்கடத்தான் திருவருள் இல்லையெனில் இந்நூலே இல்லை, இந்நூல் வெளிவர நிதியுதவி செய்த திருமலை திருப்பதி தேவத்தானத்தை... சிறப்பாகச் சப்தகிரி இதழ் தலைமைப் பதிப்பாசிரியர் திரு. இராமமூர்த்தி அவர்களை...

நினைக்கிறேன்... நெஞ்சம் நெகிழ்கிறேன்,

உ

போன்: மயிலம்: 223

சிவமயம்
ஸ்ரீ பாலசித்த குருவே நம: புதுவை: { 24208 / 22049



திருக்கயிலாய பரம்பரை மயிலம் பொம்மபுர ஆதீனம்

**ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் திருமடம்**

**மயிலம் - 604 304 & பொம்மையபாளையம் - 605 114**

**விழுப்புரம் ராமசாமி படையாட்சியார் மாவட்டம்.**

## ஆசியுரை

உலகிலுள்ள உயர்தனிச் செம்மொழிகளுக்குள் "பக்தி மொழி" என்று போற்றப்பெறும் பெருமைக்குரியது அமிழ்தினும் இனிய நம் தமிழ்மொழியாகும். இதனுள் பக்திப் பொருண்மையை உள்ளீடாகக் கொண்ட நூல்கள் பலவற்றுள் சைவத் திருமுறைகள் பன்னிரண்டும் குறிப்பிடத்தக்கனவாகும். இவை, வேதத்தின் ஞான காண்டப் பொருளை உள்ளவாறு உணர்த்துவனவாகும். இவற்றை யருளிய திருமுறையாசிரியர்கள், பதிஞானம் வாய்க்கப் பெற்ற செம்புலச்செல்வர்களாவர். இவர்களுள் பெரும்பாலோர் தலங்கள் தோறும் சென்று, மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகியவற்றின் பெருமைகளைப் பண்ணாரும் இன்தமிழில் பாடிப் பக்திநெறியை அறிவுறுத்தி, மன்பதையோர் இருமைநலமும் எய்த வழிவகுத்துள்ளனர். மேலும் இவர்கள் இயற்கைப் பொருள்களில் இறைமையைக் கண்டனர்; கண்டவாறே தம் பாடல்கள் வாயிலாகக் காட்டியும் உள்ளனர்.

இயற்கை, செயற்கை என்னும் இருவகைப் பொருள் களும் நமக்குப் பலவகையில் அறிவு விளக்கத்தை ஊட்டு

கின்றன. உயிருக்கு உடல் இடமாதல் போல, கடல், வானம், மலை, ஆறு, காடு, மேகம் முதலான இயற்கைப் பொருள்கள் யாவும் – இறைமைக்கு இடமாக அமைகின்றன. இவ்வியற்கையின் அழகினைக் "கைபுனைந்தியற்றாக் கவின்பெறு வனப்பு" என்பார் நக்கீரர்.

திருவிளக்கானது இறையைக்காட்டுகின்றது; இறையாகவும் வணங்கப் பெறுகின்றது. அதுபோலவே, இயற்கைப் பொருள்கள், இறையின் விளக்கங்களாகின்றன; இறையாகவே உணரவும் பெறுகின்றன. கோடையிலே இளைப் பாற்றிக் கொள்ள உதவும் குளிர்தரு, அத்தரு வழங்கும் நிழல், நிழல்கனிந்த கனி, தீஞ்சுவைத் தண்ணீர், அதனிடை மலர்ந்த நறுமணமலர், மேடையிலே வீசும் மெல்லிய பூங்காற்று, காற்றில் விளை சுகம். சுகத்தில் உறும்பயன் ஆகிய இயற்கைப் பொருள்கள் யாவற்றையும், இறைவனின் அருள் விளக்கங்களாக வள்ளலார் துதிக்கின்றார். அறிவாற் சிவனேயாகிய மாணிக்கவாசகர், தாம் அருளிய திருவெம் பாவைப்பாடல் ஒன்றினுள் பொய்கையின் இயல்பினை "எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றிசைந்த பொங்கும் மடு" என்று போற்றுகின்றார். இவ்வாறே கொன்றைமரம் சொரிகின்ற பொன்போலும் மலர்களை, அம்மரத்தின் அருகிலுள்ள கைபோலும் காந்தள் மலர்கள் ஏந்தி நிற்கும்நிலை, சிவபிரான் "நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறி, நற்கனகக் கிழி தருமிக் கருளியதை" நாவுக்கரசர்க்கு நினைவூட்டியதாக, அவர்தம் பாடல் வழி அறிகிறோம். இவ்வாறு, காணும் கரணங்கள் எல்லாம் பேரின்பம் எனப்பேணும் பெருமை மிக்க திருமுறையாசிரியர் கள் இயற்கையின் வாயிலாக இறைமை உயர்வுகளையும், உலகியல் அறவுணர்களையும் திருமுறைகளின் வாயிலாக உணர்த்தியுள்ளனர்.

எல்லாத் துறைகளிலும், எல்லா நிலைகளிலும் இக்கால மக்கள், இயற்கையை மறந்து, செயற்கையில் மயங்கி, மூழ்கி

ஓர் இயந்திர வாழ்க்கையை மேற்கொண்டு வாழாமல் வாழும் அவலநிலையைத்தான் காணமுடிகின்றது. ஆனால் திருமுறைகளோ, "இறைகளோடிசைந்த இன்பம், இன்பத் தோடிசைந்த வாழ்வு" என்பதனை விளக்கிக் காட்டி மக்களை நன்னெறிப் படுத்துகின்றன. இத்தகைய திருமுறை ஆய்வுச் சிந்தனைகள் இக்காலத்துக்குத் தேவையாகும்.

சமய நூல்களை அணுகி ஆய்வதும், அவற்றுள் நுணுகித் தோய்வதும் எல்லோர்க்கும் எளிதில் வாய்ப்பதன்று. "திருமுறைகளின் இயற்கையும் இறைமையும்" என்னும் இவ்வாய்வு நூல் வாயிலாகச் சமுதாய நலத்துக்குத் தொண்டு செய்துள்ளார் நம் ஆதீனத்துக் கல்லூரியின் முதுநிலை விரிவுரையாளர் டாக்டர் இரா. இலட்சாராமன் அவர்கள் திருவருளும் குருவருளும், நிறைந்த மயிலத்தில் இளம்பருவமுதற்கொண்டே நடைபயின்றவர் இவர்.

காலம், பொருண்மை ஆகியவற்றின் அடிப்படையில் வரையறுக்கப் பெற்றுள்ள சங்க இலக்கியங்கள், நீதி இலக்கியங்கள், காப்பிய இலக்கியங்கள் திருமுறை இலக்கியங்கள் ஆகியவற்றுள் இயற்கைப் பொருள்கள் கருத்துணர்த்தும் பாங்குகளை நிரலே ஆற்றொழுக்காக இவ்வாய்வு எடுத்தியம்பி இன்புறுத்துகின்றது.

அறிஞர்களின் அரிய கருத்துகளை மேற்கோள்களாகக் காட்டி, அவற்றின் வாயிலாகத் தம் ஆய்வுகளைத் தொடரும் பாங்கு (பக்.88-89) ஆய்வுப் பொருண்மைத் தொடர்பான முன்னைய நூல்களில் இவர் கொண்ட பயிற்சியைத் தெளிவுறுத்துகின்றது. இயற்கை வழிபாடு, இறைவழி பாடாக மாறுந்திறம் (பக். 86-87), இறையருள்பெற எளிய வழி, மலரிட்டு வழிபடுதலே (பக். 105) என்பதை உணர்த்துந் திறம் பாராட்டத்தக்கன. நாயன்மார்கள், உவமைகள், பழமொழிகள் ஆகியவை வாயிலாக இயற்கைப் பொருள்

களைச் சுட்டிக்காட்டித் தம் பக்தி உணர்வைப் புலப்படுத்தி யுள்ள திறம் நன்கு விளக்கப் பெற்றுள்ளது. (பக் 168–174).

நம் ஆதீனத்துக் கல்லூரியில் பயின்று ஆதீனத்து உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணிசெய்து, மாணாக்கர்க்குப் புலமைத் திறத்தை வளர்த்தவர் நம் ஆதீனப் புலவர்களுள் ஒருவராகிய வித்துவான் சு. இராமகிருட்டிணன் அவர்கள். தந்தையைப் போலவே இக்கல்லூரியில் பயின்றுக் கல்லூரியில் பணியாற்றுபவர் இந்நூலாசிரியர். "தந்தையறிவு மகனறிவு" என்பதற்கேற்பத் தந்தையாரின் அறிவுத்திறமும், கல்லூரியில் பயின்ற காலை பயிற்றுவித்த ஆசிரியர்களால் பெற்ற புலமைத் திறமும், திருமுறைகளில் ஆய்வு செய்ய நெறியாளராக விளங்கிய பேராசிரியரின் வழிகாட்டுதலும் இவ்வாய்வு நூலில் சிறப்பாக விளக்கமுறுகின்றன. இத்தகைய ஆய்வு நூல்கள் மேன்மேலும் இவர் படைத்துத் தொண்டு செய்ய வாழ்த்துகின்றோம்.

இவ்வாய்வு நூலைப் படைத்துள்ள நூலாசிரியரும், படைப்பித்தோரும் பயன்கொள்வோரும் அனைத்து நலங்களும் பெறுவார்களாகுக. எல்லாம் வல்ல மயிலந்தண் மாமலை மணக்கோல முருகனின் திருவருளும், ஆதீனகுரு முதல்வர் ஸ்ரீ பாலசித்தர், ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் குருவருளும் அனைவருக்கும் என்றும் நிறைந்து விளங்குவனவாகுக.

டாக்டர் பொன். சௌரிராசன்
எம்.ஏ.,பிஎச்.டி.,
மேனாள் பேராசிரியர் & துறைத்தலைவர்,
தமிழ்த்துறை, திருவேங்கடவன் பல்கலைக்கழகம்
திருப்பதி. ஆந்திர மாநிலம்.
தனி அலுவலர்,
நாலாயிரத் திவ்விய பிரபந்தத் திட்டம்,
திருமலை திருப்பதி தேவத்தானம்,
திருப்பதி, ஆந்திரமாநிலம்.

# வாழ்த்துரை

"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரளவின்றே"

இச்சங்கப் பாட்டு காதல் மேன்மையையும் தூய்மையையும் ஆற்றலையும் சுருக்கமாகக் காதலின் இயல்பை எடுத்துரைக்கின்றது என்பதைத் தமிழ்கூறு நல்லுலகம் நன்கறியும். நட்பிற்குக்கூட இதில் கூறப்பெற்ற பண்புகள் அனைத்தும் பெரிதும் பொருந்தும் காரணம், காதல் அழியும் உடல் தொடர்பையும் உட்கொண்டது. நட்பு அதனைக் கடந்து, என்றும் நின்று நிலவக் கூடியது. காதல் பிரிவால் துயர் தருவது. நட்போ மனப்பயிரை வளர்ப்பது இத்தகு தூய, நல்ல நட்பு பொருள், புகழ் இவற்றைக் கடந்த அத்வைத நட்பு, ஆராய்ச்சித் துறையில் ஆசிரியனுக்கும் மாணவனுக்கு மிடையே அமைய வேண்டும்; அமைத்துக் கொள்ள வேண்டும்.

ஆச்சார்ய பரம்பரை என்றொரு தொடர் நம் வைணவ, சைவ சாத்திர வரலாற்றில் இடம்பெறுவதைச் சான்றோர் அறிவர். ஒரு குடும்பப் பாரம்பரியம் கணவன் மனைவி படைக்கின்ற குழந்தைகளால் எப்படித் தொடர்ந்து காக்கப் பெற்று, வளர்க்கப்பெற்று, பரப்பப்பெற்று வருகிறதோ அதுபோல இந்த ஆராய்ச்சி நெறிமுறைக்கும் பாரம் பரியங்கள் உள்ளன. வையாபுரிப் பிள்ளை பாரம்பரியம்,

தெ. பொ. மீ பாரம்பரியம், மு. வ. பாரம்பரியம் வ. அய். சுப்பிரமணியம் பாரம்பரியம் என்று ஆய்வுப் பாரம் பரியங்கள் தமிழைப் போற்றிவரக் காணலாம். வாழையடி வாழையென அந்த மு. வ. பரம்பரையில் வந்த பொன். சௌரிராசன், டாக்டர். இலட்சாரராமன் இருவருக்கும் வாய்த்தது. ஆய்வுத் தொடர்பு உயிரும் உணர்வும் கடந்த ஒன்றாகும்.

காதலில் தலைவன் வழித் தலைவியும், தலைவி வழி தலைவனும் இன்பம் பெறுவதுபோல், ஆய்வில் ஆசிரியனும் மாணவனும் ஞானம் உறுகின்ற தரவுகள் பலவற்றைப் பற்பலவாறு காலத்தால், இடத்தால், கருத்தால் முயன்று திரட்டிக் கொண்டு வந்து ஆசிரியர் முன் ஆய்வாளன் அளிக்கிறான். மின்சாரத்தில் இருகூறுகளை இணைத்தவுடன் வருகின்ற ஒளியே அந்தத் தரவுகள். ஆசிரியரின் கண் முன்னே, கருத்தின் முன்னே ஒரு புதிய ஒளியைத் தோற்றுவிக்கும். அது அன்றும் என்றும் ஆய்வுப் பாதையில் வருகின்றவர்களுக்கு விண்மீனாகத் திசைகாட்டுகின்றது.

அப்படி என் வாழ்வில் பெற்ற ஆய்வுமாணவர் ஒரு சிலர். அவருள் டாக்டர், இரா. இலட்சாரராமன் அன்பால் தலைசிறந்தவர் ஆவார். கோவலனையும் கண்ணகியையும் 'என் மக்கள்' என்று கவுந்தியடிகள் அன்று சொன்னதற்குப் பொருளை இவர் வழியாக இவர் ஆசிரியர் இன்றும் துய்த்துக் கொண்டிருக்கிறார். கல்வி கரையில. அது ஒன்று தான் எழுமைக்கும் ஏமாப்பு உடைத்து. காலதேச வர்த்தமான இந்தப் பிரபஞ்சத்திலிருந்து கொஞ்சம் விலகி, அவையெல்லாம் கடந்து நிலையான ஞானப்பேறு இவருக்கு வாய்க்க வேண்டும் என்று வாழ்த்துகிறேன்.

பேராசிரியர் ஆ. சிவலிங்கனார்
மேனாள் முதல்வர்
ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் தமிழ்க்கல்லூரி
மயிலம்
மேனாள் தொல்காப்பிய உரைவளப் பதிப்புத்திட்ட
அலுவலர்,
உலகத்தமிழராய்ச்சி நிறுவனம்,
சென்னை - 113

## மதிப்புரை

நண்பர், மாணவர், முனைவர், இரா. இலட்சாராமன் எழுதிய "திருமுறையில் இயற்கையும் இறைமையும்" என்னும் நூலைப் படிக்கும் வாய்ப்புப் பெற்றேன். மாந்தர்க்குத் தேவையான நூல்.

இந்நூலில் இயற்கையெனக் குறிக்கப்பட்டன மக்களைத் தவிர மற்றைய உயிர் உள்ளனவும் இல்லனவுமான பொருள்களாம். மனிதனும் இறைவனால் படைக்கப்பட்ட இயற்கைப் பொருளே'என்றாலும், பகுத்தறிவுள்ள மனிதன், மற்றைப் பொருள்களிடமாக நல்லனவும் தீயனவும் அறிந்து-அறிவித்து வாழ்பவன். ஆதலின் அவன் வாழ்வு இயற்கையும் செயற்கையும் கலந்த வாழ்வாகும்.

நெற்பயிர் முளைத்து வளரும்போது நிமிர்ந்த நிலையில் வளர்வதையும் நெல்மணி முற்றிய நிலையில் வளைந்து காணப்படுதலையும், கண்ட மனிதன், செல்வச் செருக்குற்றான் தலைநிமிர்ந்து நடப்பதையும், கல்வியறிவால் நிறைந்தவன் மனம் அடங்கி மற்றவர்க்குத் தன் அடக்கம் வெளிப்பட இருப்பதையும் அந்நெற்பயிர் தனக்கு அறிவிப்பதாகவும் கற்பித்துக் கொண்டான்.

''சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் தோற்றம்போன்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்
செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற்
கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே.''

என்று அதைப் பாடல் வடிவில் தெரிவித்தான்.

இப்படி இயற்கைப் பொருள்கள் மனிதனுக்கு அவன் வாழ்வு சிறப்பதற்கான அறிவுரைகளைக் கூறுவனவாக உணர்ந்தான். அதனால் அவற்றை மற்றவர்க்கு அறிவித்தும் வந்தான். புலவரானோர் அவற்றைத் தம் பாடல்கள் மூலம் தெரிவித்தனர். அந்த வகையில் சைவ சமயச் சான்றோர் - சைவ அடியார் தாம் பாடிய பாடல்களில் இயற்கைப் பொருள்கள் தரும் அறிவுரைகளையும் பாடினர். அவற்றைத் தொகுத்து வழங்குகிறது இந்நூல்.

கருத்துணர்த்தல், இறைமை யுணர்த்தல் என்னும் இரண்டு பிரிவுகளைக் கொண்டுள்ள இந்நூலில் முதற் பிரிவில் மாந்தர்க்கு வேண்டிய அறிவுரைகள்-பெரும்பாலும் சமுதாய அமைப்புக்கு வேண்டிய அறிவுரைகள் தொகுக்கப் பட்டுள்ளன. இரண்டாவது பிரிவில் சமயச் சார்பானவை தொகுக்கப்பட்டுள்ளன

திருமுறை இயற்கையுணர்த்தும் சமுதாய உண்மைகள் என்று தொடங்கும்போதே திருமுறைகளில் வந்த இயற்கைப் பொருள்களின் அறிவுரைகளுள் நிலையாமை உணர்வினை முதலில் தொடங்குகிறார் ஆசிரியர். நூல் முடிவில் இறை வழிபாட்டில் இயற்கைப் பொருள்களாகிய இருசுடர்களின் இறைவழிபாட்டைக் கூறி, அடியவர்களின் இயற்கைப் பொருளாட்சியைக் காட்டி இறைத்தொடர்பை முடித் திருப்பது காணும்போது, மக்கள் உலகில் வாழ்வாங்கு வாழ்ந்து நிலையாமை உணர்ந்து முடிவில் இறைவனை அடைதல் வேண்டும் என்னும் கருத்தை நூலில் புலப்பட வைத்துள்ளார் ஆசிரியர் என்பது புலப்படுகிறது. தாம்

பயின்ற இடமும் பயிற்றும் இடமும் மயிலம் பொம்மபுர ஆதீனத் திருமடத்தின் ஸ்ரீமத் சிவஞானபாலய சுவாமிகள் தமிழ்க் கல்லூரியாக அமைந்ததற்கேற்ப இயல்பாகவே அவர் அவ்வாறு அமைத்தார் எனலாம்.

பயபக்தி என்பார்கள். பக்திக்குப் பயம் முதற்காரணம் ஆகும். பயமே பக்தியாக மாறும். இயற்கைப் பொருள் களாகிய பாம்பு முதலிய அச்சப் பொருள்களாலும் மின்னல் முதலிய ஆற்றற் பொருள்களாலும் மழை முதலிய பயன்தரு பொருள்களாலும் செவ்வானம் போலும் அழகுப் பொருள் களாலுமே முதலில் பக்தியுணர்வு தோன்றியிருக்க வேண்டும் என்பதைத் தொடர்புபடுத்திக் கூறியிருப்பது (பக். 81-86) சிறப்புடையதாகும்.

பதி பேரறிவானது. பசு சிற்றறிவானது. பாசம் அறிவற்றது என்பர் சமயச் சான்றோர். ஆனால் பாசங் களாகிய தாவரமும் ஊர்வன, நீர்வாழ்வன, பறப்பன, நடப்பனவும், நிலம், நீர் முதலியனவும் மனிதனுக்கு அறிவுரை கூறுமுகத்தான் இயங்கியும் இருந்தும் வரும் வகைகளை இந்நூலாசிரியர் ஆங்காங்கே எடுத்துரைக்கு மாற்றால் அறிவற்றனவும் அறிவு பெறுதற்கு வாய்ப்பளிக்கும் என்று தெளிவுபடுத்துகிறார்.

படிக்கும் ஆற்றலில் எழுத்தெண்ணிப் படித்தல் என்பதும் உண்டு. திருமுறைகளை எழுத்தெண்ணிப் படித்து ஆராய்ந்துள்ளார் ஆசிரியர் என்பதற்கு அவர், ஆறு, விலங்கு, பறவை ஆகியன இறைவனை வழிபட்டனவாக ஞானசம்பந்தர் முதலியவர் தம் பாடல்களில் எத்தனை இடங்களில் கூறியுள்ளனர் (பக் 70,71) என்பதைக் குறிப்பிடுவதும் சிவபிரான் அணிந்துள்ள பாம்பு, திங்கள் முதலியன பற்றி நால்வரும் பிறரும் தம் பாடல்களில் எத்தனை இடங்களில் கூறியுள்ளனர் (பக். 90-105)

என்பதைக் கணக்கிட்டுக் கூறியிருப்பதும் சான்றாக அமையும்.

இயற்கைப் பொருள்களின் அமைப்புகள் கொண்டு அறிவனவும் (அதாவது ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் போல்வனவும்) அவற்றின் செயல்களால் அறிவனவும் (அதாவது ஊர் ஆ மிலைக்கக் குருட்டு ஆ மிலைத்தல் போல்வனவும்) தெளிவுறத் தொகுத்து மக்கள் உணர்ந்து ஒழுகுமாறு நூல் தந்த ஆசிரியர் மேலும் இது போலும் பயன்தரும் நூல்களை வழங்குவாராக என இறைவனை இறைஞ்சுகிறேன்.

## நூலுக்குள்...
## தொடரும் முன்...

'உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவனாகிய, திருவாலவாயுடையார் உள்ளிட்ட இருபத்தெழுவர் பாடல்களின் தொகுப்பே பன்னிரு திருமுறை. இவை யாவும் பக்தி இலக்கிய வகையைச் சார்வன. இவை இறையன்பர் இறையருள் பெறுதற்கும் பெற்றதற்கும் பாடப்பெற்றதோடு இறைநெறி பரப்பவும் எழுந்தன. என்றாலும் இவற்றின் வழி அரசியல், பொருளாதாரம், அறநெறி, சமூக மரபுகள், கலைவளம் முதலிய பல செய்திகள் அறியக் கூடும்.

காலத்தால் முற்பட்ட தொல்காப்பியத்திலும் பண்டை இலக்கியங்களாகிய சங்க இலக்கியத்திலும் பின் வந்த நீதி இலக்கியங்களிலும் சிலப்பதிகாரம், மணிமேகலை முதலான காப்பியங்களிலும் பக்தி இயக்கக் காலத்திற்குப் பின் வந்த இலக்கியங்களிலும் தற்கால இலக்கியங்களிலும் எண்ணற்ற ஆய்வுகள் மேற்கொள்ளப் பெற்றன. பரந்து விரிந்த நிலையில், எல்லாவகை கோணங்களிலும் அவற்றில் ஆய்வுகள் மேற்கொள்ளப் பெற்றுள்ளன. ஆனால் அவற்றின் அளவுக்குப் பக்தி இலக்கியங்களில் ஆய்வுகள் மேற்கொள்ளப் பெறவில்லை. குறிப்பாகப் பன்னிரு திருமுறைகளில் மேற் கொள்ளப் பெற்ற ஆய்வு மிகமிகக் குறைவாகவே உள்ளன.

கற்றவர்களிடம் மட்டுமல்லாமல் அறிஞர்களிடையிலும் பக்தி இலக்கியங்களில் அறிவாராய்ச்சியில் ஈடுபடுதல்

பாவம்; தவறு; குறும்பு என்னும் மதிப்பீடு விளங்குகின்றமை பக்தி இலக்கியங்களில் ஆய்வு செய்யப் புகுந்தாரையும் புகுவாரையும் அச்சுறுத்துகின்றது. பல்வேறு கோணங்களை இம்மதிப்பீடு தடை செய்துள்ளதையும் அறிய முடிகிறது. தமிழ்மொழியின் மறுமலர்ச்சி, மொழிநடையின் எளிமை, தமிழிலக்கிய மறுமலர்ச்சி, சமயப்புரட்சி, பல்வேறு இன, சாதி, பிரதேச இணைவுப் புரட்சி, பெண்களின் சமஉரிமை, வழிபாட்டுப் புரட்சி, கலைகளின் மறுமலர்ச்சி, சாத்திரக் கருவூலங்கள் என்னும் பல்வேறு கோணங்களில் ஆய்வுக்கான களங்களைக் கொண்டிலங்குகின்றன. அவற்றொடு இயற்கைப் புனைவும் ஒன்று.

'கை புனைந்து இயற்றாக் கவின் பெறு வனப்பு' தமிழ் இலக்கிய உலகில் தொன்மைக் காலம் முதல் இன்று வரையும் ஆற்றொழுக்காக விளங்குகின்ற ஒன்று. இயற்கையை விடுத்துத் தோன்றிய இலக்கியங்கள் இல்லை என்றே கூறலாம். காலவோட்டத்தில் மனித வாழ்க்கையில் இன்றைக்கு இயற்கை அந்நியமாக அகன்று போனதை அறிய முடிகிறது. சுற்றுப் புறச் சூழலுக்கும் மன வளத்திற்கும் இயற்கையே துணையாவது. அவ்வகையில் வாழ்க்கைத் துணையாக – இலக்கியங்களில் உணர்த்தும் இயற்கையாக அமைந்த பகுதிகள் இன்றியமையாதன. அவ்வகையில் திருமுறையில் 'கருத்துணர்த்தும் இயற்கை' பற்றிய செய்திகள் இரண்டியல்களில் அமைக்கப்பட்டுள்ளன. முதலியல் சமுதாயத் தொடர்பானவை; இரண்டாம் இயல் சமயத் தொடர்பானவை.

இளமைக் காலத்தொட்டே வாய்த்த திருமயில திருமடத் தொடர்பும் திருமயிலம் திருக்கோயில் தேவாரப் பாடல்களை ஓதுவார் பாடப் பல்கால் கேட்டமையும் தமிழ் முதுகலையில் சைவசித்தாந்தத்தைக் சிறப்புப் பாடமாகப் பயின்றமையும் இந்நூல் உருவாக்கத்திற்குத் தூண்டுகோலாயின. இனி நூலுக்குள் தொடர்வோம்...

## இயல் ஒன்று

# திருமுறை இயற்கை - கருத்துணர்த்தல்

1.0. திருமுறை இயற்கை, சமுதாய நெறிகளையும், சமய நெறிகளையும் பிறவற்றையும் இயற்கை அணிகள், இயற்கைப் பழமொழிகள், திணைக் காட்சிகள் மூலமாக உடன்பாட்டு வகையானும் எதிர்மறை வகையானும் உணர்த்துதலை ஆய்வது இவ்வியலின் நோக்கம்.

மனிதனின் புறவுலகைச் சூழ்ந்துள்ள இயற்கை உயிர் வாழ்விற்கு உறுதுணையாவதுடன், அவன் உணர்வுகளைத் தூண்டி, அவன் வாழ்க்கை சிறக்கப் பண்பாட்டையும் நாகரிகத்தையும் உணர்த்தி நல்வழிப்படுத்துகிறது. இயற்கையில் ஒவ்வொரு கூறும் ஏதாவது ஒரு வகையில் மனிதனை நல்வழிப்படுத்தத் தவறுவது இல்லை.

"எல்லா இயற்கைப் பொருள்களும் நமக்குப் பேசாமல் பேசி உணர்த்துகின்ற உண்மைகள் பல - பண்பாடுகள் பல- பயன்தரு அறங்கள் பல"[1] என்று அ. மு. பரமசிவானந்தம் அவர்களும் அவற்றின் கூறுகள் பண்பாடுகளையும் அறங்களையும் உணர்த்துவதாகக் குறிப்பிடுகின்றார்,

மனிதன், தன் வாழ்வை நல்வழிப்படுத்தும் இயற்கையை, அதற்காக என்று தனியே தேடி அலைவதில்லை. அவன் இயற்கையின் நுட்பங்களை நன்கு அறிந்தவன். அவன், தன் வாழ்வில் கண்ட நுட்பமான உண்மைகள் யாவற்றையும் இயற்கை அன்னையின் மடியிலிருந்து தானே பெற்றவன். கூர்ந்த நோக்கம் அவனுடையதாகலாம், ஆயினும் அவனைத் தன் வழி ஈர்த்தது இயற்கை என்பது தெளிவான ஒன்று.

இதையே அறிஞர் ஒருவர், "மனிதன் பிற உயிர்களினும் மேம்பட்டவன் என்று கூறுவது ஓரளவு உண்மைதான். என்றாலும் அவனினும் தாழ்ந்ததாகக் கருதப்பெறும் பல விலங்குகளும் பறவைகளும் புழுப்பூச்சிகளும் அவனுக்கு நாள்தோறும் எத்தனையோ உண்மைகளை உணர்த்திக் கொண்டே இருக்கின்றன. அவைகளுக்கெல்லாம் மேலாக இயற்கையன்னை அடிக்கடி மனிதனைத் தட்டியெழுப்பிப் பலப்பல உண்மைகளைக் காட்டுகிறாள்"[2] என்று கூறுகிறார். மனிதனை இயற்கை கவர்ந்திழுத்தலையே இவர் இவ்வாறு குறிப்பிடுகிறார்.

மேலைநாட்டறிஞரான வில்லியம் ஹில் கோர்ட் என்பவர், "விரிந்த இவ்வானத்தின் கீழிருக்கும் இவ்வியற்கை எல்லாம், நம் எல்லோரையும் தன்னைக் காணுமாறு பலவகையிலும் பலமொழிகளாலும் அழைத்துக் கொண்டே இருக்கிறது"[3] என்று குறிப்பிடுகிறார். இவரும் இயற்கையின் உணர்த்தலைத் தெளிவுபடுத்துகிறார்.

இவ்வியற்கை உணர்த்தும் சமுதாய நெறியையும். சமய நெறியையும் பின்பற்றினால் மனிதன் உயர்வது திண்ணம். மனிதன் இயற்கையிடமிருந்து கற்றுயர்தல் என்பது எளிய நெறியுமாகும். வாழ்க்கையில் உயர அவன் அதைக் கடைப்பிடித்தல் நலந்தரும்.

"இறைவனது இயற்கைப் படைப்புகள் பலபட நம்மைச் சூழ்ந்துள்ளன. அவைகளுள் ஒன்றை – ஒன்றன் சினையை – ஒரு சிறு புல்லை – புல்லின் நுனியை நினைந்து நினைந்து, அதில் ஒன்றினும், அது உள்ளொளியை விளங்கச் செய்யும். இறைவன் படைப்பு ஒவ்வொன்றும் நமக்குத் துணைபுரியக் காத்துக்கொண்டிருக்கிறது. அதன்மீது கருத்துச்செலுத்த வேண்டியது நமது கடமை"[4] என்ற கருத்தும் மேற் கருத்தை வலியுறுத்துகிறது.

கடமை என்பது மட்டுமல்லாமல், அதை மேற் கொள்வதால் வாழ்க்கையில் உயர்வடைய முடியும் என்பதை இல. செ. கந்தசாமி அவர்கள் குறிப்பிடுகிறார்.

"வாழ்வில் ஒவ்வொரு பொருளும் ஏதேனும் ஒரு வகையில் பண்பாட்டை உணர்த்திக் கொண்டே இருக்கின்றது. அவற்றை வாழ்வில் கடைப்பிடிக்கின்றவர்கள் உயர்கிறார்கள்; கைக்கொள்ளாதவர்கள் தாழ்கிறார்கள்"[5] என்பது அவர் குறிப்பிடும் கருத்தாகும்.

மேலை நாட்டறிஞர் வேர்ட்ஸ் வொர்த்தும் இயற்கை உணத்தும் நெறி, வாழ்க்கையை வளப்படுத்தும் என்பதை ஏற்றுக்கொள்கிறார்.

"மனிதன் தன்னுடைய முறையான, மகிழ்ச்சியான வாழ்க்கைக்கு இயற்கையிடமிருந்து கற்றுக்கொள்ள வேண்டியன நிறைய உள்ளன"[6]. என்ற கருத்தை அவர் குறிப்பிடுகிறார்.

மனிதனுடைய கண்களும் மனமும் அதற்காகவே படைக்கப் பெற்றனவாக, மனித வாழ்வின் பயனாக ச. வே. சுப்பிரமணியன் அவர்கள் குறிப்பிடுகிறார்.

"இயற்கையிடமிருந்து கற்க வேண்டியவை மனிதனுக்கு எத்தனையோ உண்டு. அதனால்தான் இயற்கையைப்

படைத்து, அதனை-அதன் கூறுகளைப் புறநிலையில் கூர்ந்து கவனிக்க மனிதனுக்குக் கண்களையும் அகநிலையில் உணர உளமாகிய மனத்தையும் படைத்தான்''[7] என்று அவர் குறிப்பிடுகிறார். மனிதனுடைய கண்களும் மனமும் இறைவனால் படைக்கப் பெற்ற காரணம் அதற்கே என்று அவர் குறிப்பிடுவது நோக்கற்குரித்து.

மனிதன் தான் பெற்ற கண்களால் மனத்தினால் புற நிலையிலும் அகநிலையிலும் கூர்ந்து நோக்காது விட்டாலும் இயற்கை அவனை விடுவதாக இல்லை.

''இயற்கை மனிதனுக்கு உணர்த்தும் பண்பாடுகள் பலப்பல பாடறிந்து ஒழுகுதலாகிய பண்பாட்டினை மனிதன் விட நினைத்தாலும் அவனைச் சுற்றியிருக்கும் இயற்கை நிலைகள் அவ்வப்போது அவனுக்கு அவன் நிலையை உணர்த்துகின்றன.''[8] என்ற கருத்தும் அதை உணர்த்துகிறது.

இயற்கை நிகழ்ச்சிகளோ காட்சிகளோ பண்பாட்டையும் வாழ்வு நெறிகளையும் உணர்த்தல் உலகப் பொதுநெறியே என்றாலும், தமிழகத்தின் நிலப்பகுதிகள் அதற்கு மிகமிகப் பொருத்தமானவை. நானிலப் பகுதிகளில் உள்ள இயற்கை மனித உணர்வுகளை, நெறிகளை வழிப்படுத்த முக்கிய பங்கு வகிக்கின்றன.

''மனிதனுடைய நல்வாழ்வைச் சிறக்க வைக்கவும் தீய வாழ்வைத் திருத்தவுமே அவ்வந் நிலத்துள்ள அத்தனைப் பொருள்களும் அவனுக்குப் பயன்படுகின்றன. இந்த உண்மையை உணர்ந்தால் மனிதன் இயற்கையோடு இயைந்த வாழ்வு வாழ்ந்து இன்பம் பெறுவான். தமிழ் நாட்டு நிலப்பிரிவே இந்த அடிப்படையில் அமைந்துள்ளது''[9]. என்னும் கருத்து அதைத் தெளிவாக விளக்குகிறது, நல்வாழ்வு நெறி மட்டுமே காட்டுவதாகச் சொல்லப்பெற்ற இயற்கை இங்கே இன்னும் ஒருபடி வளர்ந்த நிலையில் தீய வாழ்வைத்திருத்துவதாகவும் அக்கருத்துப் புலப்படுத்துகிறது.

"அறிவு என்பதை இரண்டு வகையாகக் கொள்ளலாம் ஒன்று நூலறிவு; மற்றது அனுபவ அறிவு. நூலறிவும் அனுபவ அறிவும்தான் மனிதனை நல்வழிப்படுத்துகிறது என்பது எல்லாரும் ஒப்புக்கொள்ளும் உண்மை ஆனால் இங்கே அவ்வறிவுகளை அவ்வகைகளிலும் மேலாக உணர்த்துவது இயற்கை"[10] என்று வோர்ட்ஸ்வொர்த் ஓரிடத்தில் குறிப்பிடுகிறார்.

"ஆயிரக்கணக்கான புத்தகங்கள் கற்றுத் தருவதைவிட ஒழுக்க நெறி தொடர்பான எண்ணற்ற அனுபவ உண்மை களை இயற்கைப் பொருட்கள் கற்றுத் தருவதாக"[11] அவர் குறிப்பிடுவார்.

மேலை நாட்டு அறிஞர்களாகிய வோர்ட்ஸ்வொர்த், கீட்ஸ், கோல்ட்ரிட்ஜ் ஆகியோர் இயற்கையை வாழ்விற்குப் பாடம் கற்றுத்தரும் நல்லாசிரியனாகவே கருதுகின்றனர்[12]. மேலும் இதை ப்ளூம்பீல்டு எனும் மேலைநாட்டறிஞரும்[13] ஒப்புக் கொள்கிறார். அதுவுமன்றி இயற்கை தாயாகவும் விளங்கும் தன்மையை ஓரறிஞர் காட்டுகிறார்.

"நான் இயற்கையில் பொறிபுலன்களின் மௌன மொழிகளைக் கேட்கிறேன். அது என் எண்ணங்களுக்கு உரமூட்டுகிறது. என் வளர்ப்புத் தாயாக இருந்து வழி காட்டுகிறது. என் இதயம், ஆன்ம ஒழுக்கம் அனைத்தையும் பாதுகாப்பது இயற்கை"[14] என்ற வோர்ட்ஸ் வொர்த்தின் கருத்தை அறிஞர் ஒருவர் சுட்டிக்காட்டுகிறார். ஆசிரியனாக மட்டுமல்லாமல் தாயாக நின்று உணர்த்தும் இயற்கையை இக்கருத்து புலப்படுத்துகிறது.

"இயற்கையின் ஒவ்வொரு காட்சியும் மனிதனின் ஐயங்களையும் கவலைகளையும் போக்கி அவன் உள்ளத் திற்கு அலையா அமைதி அளிக்கின்றது"[15] என்பதும் அக்கருத்தை வலியுறுத்துகின்றது.

உலகத்தின் சாதாரண மனிதனுக்கு மட்டுமல்ல. கவிஞனுக்கும் தத்துவ வாதிகளுக்கும் இயற்கைதான் உண்மைகளை உணர்த்துகிறது. அவன் கவிதையின் உண்மைகள் இயற்கையின் மடியிலிருந்து பெறப்படுகின்றன. அவன் உள்ளம் எழுச்சி பெறுவதும் இவ்வியற்கையைக் கண்டே. கவிஞனுக்கும் இயற்கைதான் உண்மை உணர்த்து கிறது என்பதை வோர்ட்ஸ்வொர்த்தைப் பற்றிக் கிரபிள் ராபின்சன் குறிப்பிடும் நிகழ்ச்சியொன்று தெளிவுபடுத்து கிறது.

"வோர்ட்ஸ் வொர்த்தைத் தேடிச் சென்றார் அவரின் நண்பர் ஒருவர். அவர் இல்லத்தில் இல்லாததைக் கண்ட நண்பர் அங்கிருந்த பணியாளாகிய ஒரு பெண்ணை அழைத்து, அவருடைய நூலகத்தைப் பார்வையிடும் விருப்பத்தைக் கூறினார். அங்குச் சென்றவுடன் நண்பர் அப்பெண்ணைப் பார்த்து வோர்ட்ஸ்வொர்த் இந்நூலகத்தில் எந்த இடத்தைப் படிக்கப் பயன்படுத்துவார் எனும் வினா வொன்றை எழுப்பினார். அதற்கு அப்பெண் 'இது அவருடைய நூலகம்' ஆனால் அவர் படிப்பதும் பயன் படுத்துவதும் வயல்வெளிதாம் என்று குறிப்பிட்டராம்"[16] என்னும் இந்நிகழ்ச்சி கவிஞனுக்கும் இயற்கையே உண்மை களை உணர்த்துகிறது என்பதைத் தெளிவுபடுத்துகிறது.

## 1.1.0 இலக்கியங்களில் இயற்கை-கருத்துணர்த்தும் மரபு

இயற்கை கருத்துணர்த்தும் மரபு சங்க இலக்கியம், காப்பிய இலக்கியம் ஆகிய இலக்கியங்களில் பலவிடங்களில் காணப்பெறுகிறது.

### 1.1.1 சங்க இலக்கியமும்-இயற்கை கருத்துணர்த்தலும்

சங்க இலக்கியம் என்பது இயற்கை நெறிக்கால இலக்கியம். அவ்விலக்கியம் அகம், புறம் எனும் இருவகை

யினையும் உள்ளடக்கியது. அவ்வகப்புற வாழ்க்கையின் பின்புலமாக இயற்கை அந்நூலில் அமைந்துள்ளது. அக இலக்கிய அமைப்பிற்கு இன்றியமையாததாகக் கூறப்பெறும் முதல், கரு, உரிப்பொருள் மூன்றனுள் உரிப்பொருள் தவிர்த்த ஏனைய இரண்டும் இயற்கைப் பொருள்கள். மேலும் கவிஞர்கள் அகவிலக்கியத்தில் வெளிப்படையாகக் கூறவியலாதனவற்றை இயற்கையின் பின்னணியிலேயே குறிப்பிடுகின்றனர். புறவிலக்கியத்திலும் நாடுநகரப் புனைவு களிலும் அரசனின் ஆற்றல், வீரம், கொடை முதலியன கூறுகையிலும் இயற்கைப் புனைவுகள் உள்ளன. அத்தகு இயற்கை இலக்கியத்தில் உள்ளுறையும் இறைச்சியும் உவமையுமாக வரும் அத்தனையும் உணர்த்தும் இயற்கை தான் தலைவன், தலைவி முதலான பாத்திரங்கள் தன் எண்ணங்களை வெளியிடுவதும் இயற்கையின் துணையோடு தான்.

''சங்க காலத் தமிழ்மக்கள் இயற்கையோடியைந்த வாழ்வினர். காடும் மலையும் கடலும் வயலும் ஆகிய நானில இயற்கை அவர்களின் இளமையின் தொட்டிலாகவும், வளர்ச்சி நிலையில் பல்கலைக் கழகமாகவும் திகழ்ந்தது. திங்களும் தென்றலும் புல்லும் பூக்களும் மரமும் மலையும் பறவையும் விலங்கும் போல்வன வெறும் ஐம்புல நுகர்வுக் குரிய பொருள்களாக மட்டுமின்றி அறிவூட்டும் ஆசானாகவும் ஆன்ம நலங்காட்டும் வாயிலாகவும் அமைந்தன''[17] என்னும் கருத்து சங்க இலக்கிய இயற்கைக் கருத்துணர்த்தும் மரபை முழுமையாகப் பெற்று விளங்குகிறது என்பதைத் தெளிவு படுத்துகிறது. வேங்கை மலர்கள்கூட பூக்கும் பருவத்தில் மணநாளைக் காட்டும். அன்புடைய நெஞ்சங்கள் கலந்த தன்மையை அது, செம்புலப்பெயல் நீராகக் காட்டும்.

புற இலக்கியங்கள் வாழ்க்கை நிலையாமை செல்வம் நிலையாமை முதலிய நிலையாமைக் கருத்துக்களையும்

கொடைத்தன்மை, வீரம் முதலானவற்றையும் இயற்கை மூலம் உணர்த்துகின்றன.

> "நுண்பல சிதலை அரிதுமுயன் றெடுத்த
> செம்புற்றீயல் போல
> ஒருபகல் வாழ்க்கைக் குலமருவோரே"[18]

என்னும் புறநானூற்றடிகள் வாழ்க்கை நிலையாமையை உணர்த்துகின்றன. ஈசல் ஒருநாள் மட்டுமே வாழும் வாழ்க்கையினை உடையது. ஈசலின் அவ்வாழ்க்கை போல மனிதவாழ்க்கையும் அப்படித்தான் — நிலையாதுதான் என்பதை உணர்த்தி நிற்கிறது.

> "தேய்த லுண்மையும் பெருக லுண்மையும்
> மாய்த லுண்மையும் பிறத்த லுண்மையும்
> அறியா தோரையும் அறியக்காட்டி
> திங்கட் புத்தேள் திரிதரும் உலகம்',[19]

என்ற புறநானூற்றடிகளும் [புறம் 27] அவ்விதமே வாழ்க்கை நிலையாமையை உணர்த்துகின்றன.

பக்தி இலக்கியங்களில் பெரிதும் பயன்படுத்தப்பெறும் இறைவன் உயிர்களில் கலந்துள்ள இயல்பைக் கூறும் 'பூவினுள் நாற்றம்' என்னும் குறிப்பு பரிபாடலினும் காணப் பெறுகிறது. பூவினுள் நாற்றம் கலந்து பிரிவற இருக்கும். அப்பூவின் நாற்றம் இறைவன் இயல்பைத் தெளிவாக உணர்த்துகிறது. இத்தகைய இடங்கள் மற்ற இலக்கியங்கள் யாவற்றிலும் மிகுதியாகச் சங்க இலக்கியத்துள் காணப்பெறுகின்றன.

### 1.1,2 காப்பியங்களில் இயற்கை கருத்துணர்த்தும் மரபு

#### சிலப்பதிகாரம்

நெஞ்சையள்ளும் சிலம்பினை யாத்த இளங்கோ நெஞ்சம் இயற்கைக் காட்சிகளிலும், நிகழ்ச்சிகளிலும் தோய்ந்திருந்த

நிலை அக்காப்பியத்தில் காணவியலுகிறது, இயற்கையைப் பின்னணியாய், கதை மாந்தர்தம் பண்பு விளக்கங்களாய், கற்பார் நெஞ்சை ஈர்க்கும் உணர்ச்சிச் சுழிகளாய். கருத்து விளக்கங்களாய்க் காப்பியத்தில் அமைந்துள்ளமை காணலாம். தொடக்கத்திலேயே மங்கல வாழ்த்துப் பாடலில் அமையும் திங்கள், ஞாயிறு, மாமழை ஆகிய இயற்கைப் பொருள்கள் மூன்றுமே,[20] பல்வேறு கருத்துகளை உணர்த்துவதாக உரையாசிரியர்களும், ஆய்வாளர்களும் குறிப்பிடக் காணலாம். குளிர்திங்கள், திகிரி ஞாயிறு, அளிமாமழை ஆகிய இவ்வடைகளின் கண் உரையாசிரியர் உள்ளம் படிந்து கருத்து விளக்கம் தருவதைக் காணமுடிகிறது.

அடுத்து மனையறம்படுத்த காதையில் திரிதரு சுரும்பும்... மணவாய்த் தென்றலும்,[21] கோவலன் குணநலன்களைக் குறிப்பாய்ப் புலப்படுத்துமாறு அமைந்துள்ளமையை அறிஞர் அறிவர்.

அந்திமாலைச் சிறப்புசெய் காதையில் 'சிறுகாற் செல்வன்'[22] 'மல்லல் மூதூர் மாலை'[23] 'வெண் பிறை தோற்றம்,[24] ஆகியன, கருத்துக்களைக் குறிப்பாகப் புலப்படுத்தும் போக்கில் அமைக்கப் பெற்றுள்ளன. இன்னும் குன்றக் குரவையின்கண் அமைந்துள்ள அகப்பாடல்களில் ஆன்மீகக் கருத்துக்களையும் அறிஞர் காண்பர்.

**கம்பராமாயணம்**

கம்பராமாயணத்தில் தொட்டவிடமெல்லாம் இயற்கைக் காட்சி கருத்துணர்த்தும் திறத்தைக் காணலாம். எடுத்த எடுப்பிலேயே கவிஞர் பெருமக்களுக்கு உலகைப் படைத்துக் காத்து மறைகின்ற அலகிலா இயற்கை விளையாட்டுள் வழி இறைவன் தன் நிலையை உணர்துதலைக் கம்ப நாட்டாழ்வார் குறிப்பாகக் கூறுவார்.

'ஓசை பெற்றுயர் பாற்கடல் உள் ஒரு பூசை'

என்ற தொடர் உணர்த்தும் கருத்து உள்ளங்கை நெல்லிக்கனி. ஆற்றுப்படலத்தில் எங்குப் பார்த்தாலும் இறை தத்துவங் களை, வாழ்க்கை நெறிமுறைகளை உணர்துவனவாக இயற்கைக்காட்சிகளும் நிகழ்ச்சிகளும் விளங்குகின்றன. இப்படிப் படலங்கள் தோறும் எண்ணற்ற இடங்களில் கம்பரின் கருத்துணர்த்தும் இயற்கைதிறன் புலப்படக் காணலாம், இவை காப்பியங்களில் இயற்கை கருத்து ணர்த்தும் மரபு இருந்ததைத் தெளிவுபடுத்துகின்றன.

### 1.1.3. நீதி இலக்கியத்தில் - இயற்கை - கருத்துணர்த்தும் மரபு.

திருக்குறள், நாலடியார், நீதிநூல், அறநெறிச்சாரம் முதலான நீதி இலக்கியங்களிலும் இயற்கை கருத்துணர்த்துவ தாகப் பலவிடங்களில் புனையப் பெற்றுள்ளது.

திருக்குறள் விருந்தோம்பலைப் பற்றிக் குறிப்பிடும் போது அனிச்சமலரின் இயல்பை வைத்து விருந்தோம்பல் உணர்த்தப் பெறுகிறது.

> **''மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து**
> **நோக்கம் குழையும் விருந்து''[25]**

என்பது அத்திருக்குறள். அனிச்சமலர் முகர்ந்த உடனேயே வாடிவிடும் இயல்புடையது. விருந்தினர்களை வரவேற்கும் போது முகமலர்ந்து வரவேற்க வேண்டும். சற்று முகம் மாறுபட்டுத் தோன்றினாலேயே விருந்தினர் மனம் துன்புறுவர். இக்கருத்தை முகர்ந்த வரையிலேயே வாடிவிடும் அனிச்ச மலரைக்கொண்டு திருக்குறள் உணர்த்துகிறது.

ஐம்புலனின்பங்களில் உயிர் செல்லாமல் தடுக்க வேண்டும். ஐம்புலன்களையும் உயிர் எவ்வாறடக்கவேண்டும் என்பதை ஆமையின் மூலம் வள்ளுவர் தெளிவாக உணர்த்து கிறார்.

"ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி
னெழுமையு மேமாப் புடைத்து"[26]

என்னும் திருக்குறள் அதைக் குறிப்பிடுகிறது. இங்கு ஆமை தன் ஓட்டினுள் நான்கு கால்களையும், தலையையும் இழுத்து உள்ளடக்கிக் கொள்ளுதலாகிய இயல்பு புலனடக்கத்தை உணர்த்துகிறது. நாலடியார் கரும்பின் மூலம் பண்பில்லாதவர் தொடர்பை ஓரிடத்தில் தெளிவு படுத்துகிறது. பண்பும் அறிவும் இல்லாருடைய நட்பு தொடக்கத்தில் நன்றாக இருந்தாலும் வரவரத் திகட்டி விடும். இக்கருத்தைக் கரும்பு உணர்த்தி விடுகிறது. கரும்பினை அடிப்பகுதியிலிருந்து நுனிப்பகுதிக்குத் தின்று கொண்டு வந்தால் வரவரச் சுவை குறைந்து கடைசியில் சுவையற்றுச் சப்பென்றிருக்கும். கரும்பின் இவ்வியல்பு பண்பற்றாரின் இயல்பைத் தெளிவாக உணர்த்துகிறது.[27]

அறநெறிச்சாரம், பொய்கையில் இருக்கும் தாமரை இலையைக் கொண்டு பற்றற்றவரின் ஐம்புலத் தொடர்பைத் தெளிவுபடுத்துகிறது. தாமரையானது பொய்கையுள் நீரில் நின்றிருந்தாலும் அதன் இலையில் நீர் ஒட்டாது. நீரில் தாமரை இலையை அமிழ்த்தி எடுப்பினும் அதில் தண்ணீர் ஒட்டாது. பற்றற்றவர்களிடத்தும் ஐம்புலன்கள் உள்ளன. அவர்களிடத்து அவை இருப்பினும் தனித்தன்மையைச் சிறிதும் காட்டாது. தாமரை இலை பற்றற்றவர்களின் ஐம்புலனைத் தெளிவுபடுத்துகிறது.[28]

நீதிநூல் அறிவும் பண்பாடும் உள்ள மக்கள் அடக்கத் தோடு இருப்பர். வணங்கியே இருப்பர் என்பதைக் கனிமரக் கிளைமூலம் உணர்த்துகிறது.[29] நல்ல சுவைகளையுடைய கனிகளை மிகுதியாகக் கொண்ட மரக்கிளை வளைந்து காணப்பெறும். இவ்வியல்பு அறிவும் பண்பாடும் நிறைந்த மக்கள் வணங்கி அடக்கத்தோடு காணப்பெறுவர் என்னும் உண்மையை உணர்த்துகிறது.

மேற்கண்ட சான்றுகள் சிலவே. ஆயினும் நீதி இலக்கியமும் தன் கருத்தை உணர்த்த பலவிடங்களில் இயற்கையைப் பயன்படுத்தியுள்ளது.

## 2. திருமுறை இயற்கை - கருத்துணர்த்தல்

சங்க இலக்கியமும், காப்பிய இலக்கியம், நீதி இலக்கியம் ஆகிய இலக்கியங்களில் கருத்துணர்த்திய இயற்கை திருமுறை இலக்கியங்களிலும் கருத்துணர்த்தத் தவற வில்லை. சமுதாய நெறிகளையும், சமய நெறிகளையும் மற்றும் பலவற்றையும் இயற்கை உணர்த்துவது திருமுறையில் பல இடங்களில் காணப்பெறுகிறது. திருமுறை இயற்கை. உவமைகள், பழமொழிகள், திணைக் காட்சிகள் என்னும் மூவகை உத்திகள் மூலம் சமுதாய உண்மைகளையும் சமய உண்மைகளையும் மற்றும் பல உண்மைகளையும் உடன்பாட்டு வகையாலும் எதிர்மறை வகையாலும் பலவிடங்களில் திருமுறையில் உணர்த்தி நிற்கிறது. திருநாவுக்கரசர் பாடல்களில் பழமொழிகளும் திணைக் காட்சிகளும் சைவசமய நெறியை - வழிபாட்டை உணர்த்துவன. மூன்றாவது உத்தியாகிய உவமை மூலம் பிற, சமுதாய உண்மைகள் உணர்த்தப் பெறுகின்றன.

### 2.1.0 திருமுறை இயற்கை உணர்த்தும் சமுதாய உண்மைகள்

இளமை நிலையாமை, செல்வம் நிலையாமை, வாழ்க்கை நிலையாமை, யாக்கை நிலையாமை, சிற்றின்பங் களின் தன்மை, உலகியல் இன்பங்களின் தன்மை, பிறன் மனை விழையாமை முதலான உண்மைகள் இயற்கையால் திருமுறையில் பலவிடங்களில் உணர்த்தப் பெற்றுள்ளன.

### 2.1.1.0 இளமை நிலையாமை

இளமை நிலைத்து நிற்கக்கூடியதன்று. குழந்தையாகப் பிறந்த ஒருவன் வளர்ந்து வாலிபனாகிறான். பின் அவனே வயது முதிர்ந்து வயோதிகனாகிறான். கால வளர்ச்சியிலும்

வயதின் ஏற்றத்திலும் அவனுடைய பருவ நிலைகள் மாறு கின்றன இளமை நிலையாக நிற்பதன்று என்பது எல்லார்க்கும் தெரிந்த ஒன்று. திருமுறை ஆசிரியர்களில் சுந்தரர் பாடல்களில் மட்டுமே இரண்டிடங்கள் இயற்கை இந்த நிலையாமையை உணர்த்துகிறது. ஓரிடத்தில் புனற் கரையும் பிறிதோரிடத்தில் வாழையும் அதை உணர்த்து கின்றன.

### 2.1.1.1 புனற்கரை

> "ஓஒடுபு னற்கரை யாம் இளமை
> உறங்கிவிழித் தாலொக்கும் இப்பிறவி"[30]

என்பன இளமையின் நிலையாமையை உணர்த்தும் அடிகள்.

புனற்கரை என்பதினும் ஓடும் புனற்கரையைக் குறித்தது மிகவும் பொருத்தமானது. ஆற்றில் வெள்ளம் செல்லச்செல்ல அதனுடைய கரை மெல்லமெல்லக் கரைந்து இறுதியில் கரையே இல்லாமற் போய்விடும். இவ்வியற்கை தான் இளமை நிலையாமையை உணர்த்துகிறது.

இளமை, மனிதனின் வாழ்வோட்டத்தில் ஒருநிலை ஆகும். வாழ்வாற்றில் இளமை என்கிற கரை சிறிது சிறிதாக வயதின் வளர்ச்சியால் அரிக்கப்பெறுதலும் உறுதி. இளமை மெல்லமெல்லக் கழிவது மனிதனுக்குத் தெரியாது. இறுதியில் புனற்கரை இல்லாமற் போவது போன்றே இளமையும் மனிதனைவிட்டு நீங்குவது உறுதி.

ஓடும்புனற்கரை போன்றது அழகிய இளமை, ஆகையால் இளமை ஒருநிலைத்த பொருள் என்று அதைப் பேணிப் பாதுகாக்க நினையாதீர் என்று அவ்வியற்கை எதிர்மறை வகையால் நிலையாமையை மண்ணுக்கு உணர்த்தி நிற்கிறது.

2.1.1.2 **வாழை:** அதே கருத்தை,

> "ஏழை மானுட வின்பினை நோக்கி
> இளைய வர்வலைப் பட்டிருந் தின்னம்
> வாழை தான்பழுக் குந்நமக் கென்று
> வஞ்ச வல்வினை யுள்வலைப் பட்ட"[31]

என்ற பாடலடிகளும் உணர்த்துகின்றன.

வாழையின் இயல்பு அக்கருத்தை உணர்த்துகிறது. வாழை ஒருமுறைதான் குலைதள்ளும். அக்குலைதான் பழக்குலையாகும். அத்துடன் அதன் வாழ்வு முடிந்து விடுகிறது. ஒரு குலைக்குப்பின் மறுகுலையினும் வாழ்வு அதற்கு இல்லை. அவ்வாழையின் இயல்புதான் அக்கருத்தை உணர்த்துகிறது. மனித வாழ்க்கையில் இளமைப் பருவம் ஒருமுறைதான் வரக்கூடியது. இளமையை கடந்து முதுமை யடைந்த ஒருவன் மீண்டும் இளமை பெறமாட்டான். அந்த இளமைப் பருவத்தின் முடிவுதான் முதுமை. இக்கருத்தைத் தெளிவாக வாழையின் இயல்பு உணர்த்து கிறது.

முதலாவது இளமை அவனுக்குத் தெரியாமலே மெல்ல மெல்லக் கழிவதை உணர்த்துகிறது. இரண்டாவது, இளமை ஒருமுறைதான் வரும் என்பதை உணர்த்துகிறது.

2.1.2.0 **செல்வம் நிலையாமை**

செல்வம் நிலையானது அன்று; அழியக்கூடியது. இது வாழ்க்கை அனுபவத்தில் எல்லோரும் காணுகின்ற ஒன்று. காலச்சுழற்சியில் செல்வர் ஏழையாகலாம், ஏழைசெல்வ ராகலாம். இதைத் திருக்குறளும் "அற்கா வியல்பிற்றுச் செல்வம்"[32] என்று குறிப்பிடுவதும் இதை உணர்த்தவே ஆகும். இக்கருத்து, சுந்தரர் பாடல்களில் ஓரிடத்தும் திருமூலர் பாடல்களில் ஓரிடத்தும் பட்டினத்துப் பிள்ளையார்

பாடல்களில் ஓரிடத்தும் சேக்கிழார் பாடல்களில் ஓர் இடத்தும் இயற்கையால் உணர்த்தப் பெறுகிறது.[33]

1. **தேரை**

> "படையெ லாம்பக டாரஆளினும்
> பெளவஞ் சூழ்ந்தர சாளினும்
> கடையெ லாம்பிணைத் தேரைவால் கவ
> லாதெழும்மட நெஞ்சமே."[34]

என்பன சுந்தரர் பாடலடிகள்.

தேரை என்னும் உயிரின் உடலியல்பு இக்கருத்தை உணர்த்துகிறது. தேரை தோன்றியபோது அதனுடன் வாலும் தோன்றியது. தேரை வளரவளர ஒருகால எல்லையில் தேரையின் வால் நீங்கிவிடுகிறது. தேரை வாலின் இயல்பு, படைச்செல்வம் அரசுச் செல்வம் எல்லாம் நிறைவாக இருப்பினும் அவை நிலைத்து நிற்பன அல்ல; ஒருகால எல்லையில் அவை அழிந்துவிடும் என்பதை உணர்த்துகிறது. மேலும் அச்செல்வனின் இறப்பிற்குப் பின் அவை உடன் வருவனவும் அல்ல என்பதையும் உணர்த்தி நிற்கிறது.

2. **திங்கள்**

இந்நிலையாமைக் கருத்தைத் திருமூலர்

> "இயக்குறு திங்கள் இருட்பிழம் பொக்குந்
> துயக்குறு செல்வம்"[35]

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன. திங்களின் இயல்பு தேய்தலும் வளர்தலும் மறைதலும் தோன்றுதலும் ஆகும். திங்களின் இவ்வியல்பு செல்வம் ஒரே வகையில் நிலைத்திருப்பதில்லை. ஒருகால் மிகையாக இருக்கும்; ஒருகால் மிகவும் குறையும்; ஒருகால் முழுவதும் இல்லாமற் போய்விடும் என்னும் கருத்தை உணர்த்துகிறது. திங்கள் வளர்பிறையில்

வளர்ந்தாலும் பின்னர் உறுதியாகத் தேய்பிறையில் தேய்ந்து மறைவது உறுதி. செல்வமும் மிகையாக வளர்ந்து கொண்டே வருவதாக இருப்பினும் ஒருகால எல்லையில் இல்லாமற் போய்விடும் என்பது உறுதி என்னும் கருத்தை நுட்பமாக உணர்த்தி நிற்கிறது.

### 3. மின்னல்

இந்நிலையாமையைப் பட்டினத்துப் பிள்ளையார் பாடலில் மின்னல் உணர்த்துகிறது.

**"மின்னின் அனையதன் செல்வத்தை விரும்பித்**
**தன்னையும் ஒருவராக உன்னினும்**
**ஏழையோர் வாழும் வாழ்க்கையும்"[36]**

என்பது அவரின் பாடல்.

மின்னலின், தோன்றி மறைகிற இயல்பு இக்கருத்தை உணர்த்துகிறது. மின்னல் தோன்றுவதென்னவோ உண்மை. ஆயின் தோன்றிய மின்னல் சில விநாடிகளிலேயே மறைந்து விடுகிறது. தோன்றி மறையும் அவ்வியல்பு செல்வம் இருப்பது போலத் தோன்றினாலும் ஒரு கால எல்லையில் அழிவது உறுதி என்பதை உணர்த்தி நிற்கிறது.

### 4. விளங்கனி

சேக்கிழார் பாடலில் இக்கருத்தைக் களிறுண் விளங்கனி புலப்படுத்தி நிற்கிறது. களிறுண் விளங்கனி என்னும் நோயுண்ட விளங்கனியின் இயல்பைச் சங்க இலக்கியம் மற்றும் பிற இலக்கியங்களில் தலைவன் வரவு இல்லாமையால் மாமையுண்ட தலைவியின் இயல்புக்குக் காட்டப் பெறுவது மரபு ஆனால் சேக்கிழார் யானை நோய் என்னும் நோயுண்ட விளங்கனியின் இயல்பைச் செல்வ நிலையாமைக்குக் குறிப்பிடுவது புதுமையான ஒன்று.

"மேவு செல்வம் களிறுண் விளங்கனி
ஆவ தாகி அழியும்"[37]

என்பது அவரின் குறிப்பு. தேரையின் வாலும், திங்களின் தேய்தலும் மறைதலும், மின்னலும் வெளிப்படையாகச் செல்வம் நிலையாதது என்பதைப் புலப்படுத்தி நிற்கின்றன. அவை, செல்வம் மறைகிற – நீங்குகிற செயல் செல்வன் கண்ணுக்குப் புலனாவதைத் தெளிவாகக் காட்டுகின்றன. களிறுண் விளங்கனி, தோற்றத்தில் விளங்கனியின் இயல்பை ஒத்திருக்கும். அவ்விளங்கனியை உடைத்துப் பார்த்தால் மட்டுமே சதைப்பற்றில்லாமை விளங்கும்; தெரிய வரும். அதுபோல, செல்வம் இருப்பதுபோல – நிலைத்து நிற்பது போலவே காட்சிக்குப் புலப்படும். ஆயின் அவன் அறியாமலேயே மறைந்துவிடும். நிலைத்திருப்பதாகக் காட்டி அவனை அறியாமலேயே மறைந்து விடும் செல்வத்தை இது உணர்த்துகிறது.

சுந்தரர் பாடல்களில் ஓரிடத்தும் பட்டினத்துப் பிள்ளையார் பாடல்களில் ஓரிடத்தும் திருமூலர் பாடல் களில் இரண்டிடங்களிலும் இக்கருத்தை இயற்கை உணர்த்துகிறது.

### 2.1.3 வாழ்க்கை நிலையாமை

இளமை, செல்வம் முதலியன போன்று வாழ்க்கையும் நிலையானதன்று.

"நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை உடைத்திவ் வுலகு"[38]

என்னும் திருக்குறள் தெளிவாக உலக வாழ்க்கையின் நிலையாமையைப் புலப்படுத்துகிறது. உலகத்தில் மக்கள் பலர் இறத்தலும் தோன்றலும் சமுதாயத்தில் வெளிப்படையாகத் தெரிகிறவொன்று. இதைத்தான் நேற்று

இல்லை என்கிற வாழ்க்கை நிலையாமையைத் திருவள்ளுவர் உணர்ந்துகிறார்.

### 2.1.3.1 கதிரவன் முன் புல்நுனிப் பனி

சுந்தரர் பாடல்களில் ஓரிடத்தில் வாழ்க்கை நிலையாமை பற்றிக் கதிரவனைக் கண்டு மறையும் புல்நுனிப் பனி உணர்த்துகிறது.

> "புன்னு னைப்பனி வெங்கதிர் கண்டாற்
> போலும் வாழ்க்கை பொருளிலை"[39]

என்பது அவரின் குறிப்பு. கதிரவன் ஒளியைக் கண்டவுடன் புல்நுனியில் இருந்த பனித்துளி மறைந்து விடுகிறது. பனிக்கால இரவின் பின் நேரத்தில் தோன்றிய அப்பனித் துளி கதிரவன் வரவு வரையிலுந்தான் நிலைத்து நிற்கும். கதிரவன் ஒளி வந்தவுடன் மறைதல் உறுதி. வாழ்க்கையும் ஒரு கால கட்டத்தில் மறைந்து விடுவதுதான். நிலையானது ஒன்றுமில்லை என்பதை அவ்வியற்கை உணர்த்துகிறது. எதுவொன்றும் ஒரு காலகட்டத்தில் மறையக் கூடியது என்பதை அது தெளிவாக உணர்த்துகிறது.

### 2.1.3.2 நீர்க்கொப்புள் | நீர்க்குமிழி

வாழ்க்கை நிலையாமையைப் பட்டினத்துப் பிள்ளையார் பாடல்களில் ஓரிடத்தில் நீர்க்குமிழி உணர்த்து கிறது.

> "பிறந்தாங் கிறந்தும் இறந்தாங்குப் பிறந்தும்
> கணத்திடைத் தோன்றிக் கணத்திடைக் கரக்கும்
> கொப்புட் செய்கை ஒப்பின மின்போல்
> உவப்பில் யோனிக் கலக்கத்து"[40]

என்னும் அவரின் பாடலடிகள் அதை உணர்த்துகின்றன.

நீர்த்துறையுள் நீர்க்குமிழிகள் பல தோன்றும். அவை தோன்றுவதும் கண நேரம்தான். தோன்றிய அவை

அப்படியே நிலைத்து நிற்பதில்லை. அவை கணநேரத்தில் மறைந்துவிடும். இவ்வியல்பு, வாழ்க்கை தோன்றுவதும் அழிவதும் கணநேரந்தான் என்பதை உணர்த்துகிறது. புல்நுனிப்பனி ஒரு கால கட்டம் வரையில் வாழ்க்கை இருக்கிறது என்பதை உணர்த்த, நீர்க்குமிழியின் இயல்போ உயிர்வாழ்க்கை எப்போது முடியும் என்று கூறமுடியாது, நீர்க்குமிழி போலக் கண நேரத்திலும் மறையலாம் என்பதை மேலும் ஓரடி முன் சென்று உணர்த்துகிறது. அதுவன்றியும் மின்னலும் இக்கருத்தை இப்பாடலில் உணர்த்துகிறது.

### 2.1.3.3 ஞாயிற்றின் மறைவு

திருமூலர் பாடல்களில் ஞாயிற்றின் மறைவும் தளிரின் இறப்பும் இக்கருத்தைப் புலப்படுத்துகின்றன.

> **''கிழக்கெழுந் தோடிய ஞாயிறு மேற்கே**
> **விழக்கண்டுந் தேரார் விழியிலா மாந்தர்''[41]**

என்பது ஒன்று.

ஞாயிறு கிழக்கே தோன்றுகிறது. அஞ்ஞாயிறு அங்கேயே நிலைத்து நின்றுவிடுவதில்லை. கொஞ்சம் கொஞ்சமாக மேற்குப்புறம் நோக்கி நகர்ந்து வந்து இறுதியில் மறைந்து விடுகிறது. பின்னர் மீண்டும் தோன்றுகிறது / மறைகிறது. இவ்வியல்பு உலக வாழ்க்கையின் நிலையாமையை உணர்த்துகிறது. தோன்றிய வாழ்க்கை நிலைத்து நிற்பதில்லை. ஒரு கால கட்டத்தில் மறைவது உறுதி.

### 2.1.3 4 தளிர், பூ முதலியன

ஒரு மரத்தின் அல்லது செடியின் கொம்பில் தோன்றிய தளிர், மலர் முதலியன அப்படியே அவற்றில் நிலைத்து நிற்பனவல்ல. தோன்றிய தளிர் முற்றி இலையாகும். பின்னர் இலை சருகாகும். சருகு துளிரின் அழிவைக் காட்டு கிறது. ஒரு கொம்பில் பூத்த மலரும் வாடியழிதல் உறுதி.

அத்தகையதே வாழ்க்கையும் என்பதை அது உணர்த்து கிறது.

"தழைக்கின்ற செந்தளிர்த் தண்மலர்க் கொம்பில்
இழைக்கின்ற தெல்லாம் இறக்கக் கண்டு"[42]

என்பது அவரின் குறிப்பு தளிரோ மலரோ தோன்றியது என்பதில் ஐயமில்லை. தோன்றிய அவை நிலைத்து நிற்பன வல்ல. அவையாவும் ஓர் எல்லையில் அழிந்துவிடுவன. இத்தகு இயல்பு உலக வாழ்க்கையின் நிலையாமையைத் தெளிவாக உணர்த்துகிறது.

### 2.1.3.5 பூளைப்பூ

பொதுநிலையின் மலரை வைத்துப் பிற ஆசிரியர் வாழ்க்கை நிலையாமையைக் காட்டச் சேக்கிழார் பூளைப் பூவைக் கொண்டு அக்கருத்தை உணர்த்துகிறார்.

"பூளைப் பூவாம் பிறவி"[43]

என்பது அது.

இவை யாவும் வாழ்க்கை என்பது ஞாயிற்றின் ஒளியைப் போலவும் தளிரைப் போலவும் மலரைப்போலவும் இளமை யாய் அழகாய்த் தோற்றம் உடையதாக உள்ளது. அவை யாவும் நிலைத்து நிற்பனவல்ல. அவ்வாறே காண்பதற்கும் நுகர்வதற்கும் வாழ்க்கை இனிமையானது போல் தோன்றினும் அது நிலைத்து நிற்பதன்று என்பதையும் உணர்த்தி நிற்கிறது.

இக்கருத்துகள் இயற்கைப் பொருள்கள் அழிகின்ற இவ் வாழ்க்கையைப் பெரிதாக எண்ணிப் பேணாதீர் என்று எதிர் மறை வகையால் கருத்துணர்த்துகிறது.

### 2.1 4.0 யாக்கை நிலையாமை

யாக்கையும் இளமை, செல்வம் முதலியனவற்றைப் போலவே நிலையற்றது. திருநாவுக்கரசர் பாடல்களில்

ஓரிடத்தும் மாணிக்கவாசகர் பாடல்களில் ஓரிடத்தும் இயற்கை இக்கருத்தை உணர்த்துகிறது.

2.1.4.1 **நீர்க்குமிழி**

திருநாவுக்கரசர் பாடல்களுள் ஓரிடத்தில் நீர்க்குமிழி இக்கருத்தை உணர்த்தி நிற்கிறது. திருமூலர் பாடல்களுள் ஓரிடத்தில் வாழ்க்கை நிலையாமையை உணர்த்திய நீர்க் குமிழி இங்கே யாக்கை நிலையாமையையும் திருநாவுக்கரசர் பாடல்களில் ஓரிடத்தில் உணர்த்துகிறது. இருவகை நிலையாமைகளையும் இந்நீர்க்குமிழி உணர்த்தி விடுகிறது.

**"கொப்புளே போலத்தோன்றி யதனுளே மறயைக்கணும்**
**இக்களே பரத்தை யோம்ப வென்செய்வான்"[44]**

என்பது திருநாவுக்கரசரின் குறிப்பு. நீர்க்குமிழி கணத்தில் தோன்றிக் கணத்தில் மறைவது என்பது பொதுவான கருத்து. இக்கருத்துதான் முன் வாழ்க்கை நிலையாமையை உணர்த்தியது. ஆயின் அதற்கு மேலும் ஒருபடிச் சென்று ஒரு கருத்தை உணர்த்துகிறது. நீர்க்குமிழி நீரிலே தோன்று கிறது. பின்னர் அது அந்நீரிலேயே மறைந்துவிடுகிறது. மனிதனுடம்பு பஞ்ச பூதங்களால் ஆனது. அவன் இறப்புக்குப் பின் அவன் உடம்பு பஞ்ச பூதங்களில் கலந்து விடுகிறது. மண்ணிலே தோன்றி மண்ணிலே மறையும் இயல்பினை உடையது. யாக்கை என்பதை நீரிலே தோன்றி நீரிலேயே மறையும் நீர்க்குமிழி உணர்த்துகிறது.

2.1.4.2 **மலர் முதல் கனி**

மாணிக்கவாசகர் பாடலில் மலர் இக்கருத்தை உணர்த்துகிறது. ஒரு மரத்தின் அல்லது செடியின் கிளையில் தோன்றிய மலர் காயாகி, காய் கனியாகிப் பிறகு அது அழிந்து விடுகிறது. இவ்வியல்பு யாக்கை நிலையாமையை உணர்த்தி நிற்கிறது.

"கொம்பி லரும்பாய்க் குவிமலராய்க் காயாகி
வம்பு பழுத்துடன் மாண்டிங்ஙன் போகாமே"[45]

என்பது அவரின் குறிப்பு.

ஒரு கிளையில் மலர் தோன்றுகிறது. பின்னர் அது காயாகிறது. பின்னர் அது கனியாகிறது. அத்துடன் அதன் வளர்ச்சி நின்று விடுகிறது. ஆயின் அது கனியாகவே நிலைத்து நிற்பதில்லை. அது அழிந்து விடுகிறது. இது ஒரு மனிதனின் பருவ வளர்ச்சிகளையும் இறுதியில் வாழ்க்கை முடிவையும் உணர்த்தி நிற்கிறது. குழந்தைப் பருவத்தில் இருக்கும் உடல், வாலிப வயதில் வளர்ச்சி பெற்று விளங்கு கிறது. அதற்கடுத்த முதிய வயதில் உடல் தளர்ந்து பின்னர் அது உயிர்ப்பறவை பறந்தபின் மண்ணில் மண்ணாகக் கலந்து விடுகிறது. இப்பருவ வளர்ச்சியினையும் முடிவினையும் மலரும் காயும் கனியும் இக்கருத்தை உணர்த்துகின்றன. உடலின் வளர்ச்சி யாவும் வளர்ச்சி போல் தோன்றினாலும் அவை அழிவை நோக்கித்தான் செல்கின்றன என்பதை மலரின் பருவ வளர்ச்சி நிலைகள் தெளிவாக உணர்த்து கின்றன.

இவ்விருவகை இயற்கைப் பொருள்களும் யாக்கையின் நிலையாமையைப் பல்வேறு நோக்கில் உணர்த்தி அத்தகைய யாக்கையை நிலையென நம்புவது பொருள் அற்றது என்பதை எதிர்மறை வகையால் உணர்த்தி நிற்கின்றன.

**2.1.5.0 சிற்றின்பங்கள் – புலன்களை அழிப்பன அல்லது புலனின்பங்கள் அழிவன.**

ஐம்புலன் இன்பங்கள் இன்பமாகத் தோன்றினும் அவை நிலைத்தன அல்ல; அவ்வின்பங்கள் புலன்களையும் அழித்துவிடக் கூடியன. இவ்வின்பம் அழிகின்ற, அழிக்கின்ற இன்பமாகையால் தான் சிற்றின்பம் எனப் பெற்றது. அச்சிற்றின்பங்களின் இயல்பைத் திருமுறையாசிரியர்களுள்

திருநாவுக்கரசர் பாடல்களுள் மூன்றிடங்களிலும் சுந்தரர் பாடல்களில் ஓரிடத்தும் மாணிக்கவாசகர் பாடல்களுள் எட்டிடங்களிலும் திருமூலர் பாடல்களுள் ஓரிடத்தும் பட்டினத்துப் பிள்ளையார் பாடல்களுள் ஓரிடத்தும் இயற்கை உணர்த்தி விடுகிறது. இவையாவும் இயற்கை உவமைகளால் உணர்த்தப் பெறுவனவே யாகும்.

### 2.1.5.1 ஆமை

திருநாவுக்கரசர் பாடல்களுள் ஓரிடத்தில் உலைநீரில் இருக்கும் ஆமை இவ்வுண்மையை உணர்த்துகிறது.

**“வளைத்து நின்றைவர் கள்வர்**
**வந்தெனை நடுக்கஞ் செய்யத்**
**தளைத்து வைத்துலையை ஏற்றித்**
**தழலெரி மடுத்தநீரில்**
**திளைத்து நின்றாடுகின்ற**
**ஆமைபோல தெளிவிலாதேன்”**[46]

என்பது அவரின் கருத்து.

ஆமை உலைநீரில் போடப்பட்டுள்ளது. உலைநீர் இப்போது எரியில் வைக்கப்பெறுகிறது. நீர் சிறிதுசிறிதாக வெப்பம் ஏறுகிறது. வெப்பம் மிதமாக இருக்கும் நிலையில் ஆமை அதை விரும்பி, மகிழ்ச்சியோடு இப்படியும் அப்படியும் ஓடியாடுகிறது. அவ்வாமை இந்நீர் இன்னும் வெப்பம் ஏறித் தன் உயிரை அழிக்கப்போகிறது என்பதை உணராது திளைத்து நின்றாடுகிறது. இந்நிலை, இவ்வியல்பு ஐம்புலன் களால் பெறும் இன்பங்கள் முதலில் இன்பமாகத் தோன்றும். பின்னர் அதுவே புலன்களை அழிக்கும். ஆனால் உயிர் தன் புலன்கள் அழிக்கப்பெறப் போவதை அறியாது. அழியப் போகும், அழியும் அச்சிற்றின்பத்தையே பெரிதாக எண்ணுகிறது. இக்கருத்தை ஆமையின் மூலம் உணர்த்து கிறார் திருநாவுக்கரசர். சுவாமி இராமானந்தாவும் இக்

கருத்தை ஓரிடத்தில் தெளிவு படுத்தியுள்ளார்.[47] இக்கருத்து அவ்வாமை போல் சிற்றின்பத்தைப் பெரிதாக எண்ணி அழிய வேண்டாம் என்று எதிர்மறையால் உணர்த்தப் பெறுகிறது.

இதே ஆமை திருமூலர் பாடல்களில் உடன்பாட்டு வகையால் புலன் அடக்கலை உணர்த்துகிறது.

"ஒருமையுள் ஆமை போல உள்ளைந் தடக்கி
இருமையுங் கேட்டிருந் தார்புரை அற்றே"[48]

என்பது அக்குறிப்பு. ஆமை தனக்குத் துன்பம் வருகையில் தன்னுடைய நான்கு கால்களையும் தலையையும் தன்னுடைய ஓட்டிற்குள் அடக்கிக் கொள்ளும். அவ்வாறு செய்வதில் அத்துன்பத்திலிருந்து தப்புகிறது. ஆமையின் இவ்வியல்பு, மனிதன் தன் ஐம்புலன்களையும் உள்ளடக்கிப் புலன் இன்பங்களைக் கருதாமல் புலன்களை அடக்கினால் புலன்கள் அழிவதிலிருந்து உய்யும் என்பதை உணர்த்துகிறது. ஆமைபோல் ஐந்தடக்கல் வேண்டும் என்று உடன்பாட்டு வகையால் இக்கருத்து உணர்த்தப் பெறுகிறது. இக் கருத்தைத் திருக்குறளும் குறிப்பிடுகிறது.

"ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றின்
எழுமையு மேமாப் புடைத்து"[49]

என்பதது.

### 2.1.5.2 யானை

மாணிக்கவாசகர் பாடல்களில் இரண்டிடங்களிலும் பட்டினத்தார் பாடல்களில் ஓரிடத்தும் யானை இக் கருத்தை உணர்த்துகிறது.

"அடற்கரி போலைம் புலன்களுக்
கஞ்சி யழிந்த... ..."[50]

என்பது மாணிக்க வாசகர் குறிப்பு.

"ஆசையாம் பரிசத்தியானை போலவும்"[51]

என்பது பட்டினத்தடிகள் குறிப்பு. இவ்விரு குறிப்புகளிலும் யானை ஐம்புலன்களின் இயல்பைக் காட்டுகிறது. யானையின் மதத்தால் யானை தன்னையும் அறியாது; தன் தலைவனாகிய யானைப் பாகனையும் அறியாது. அதுமட்டுமன்றி எதிர்வரும் மக்களையும் அறியாது. அனைவரையும் துன்புறுத்தும்; அழித்துவிடும். மனிதனின் ஐம்புலன்களும் அத்தகைய இயல்பினவே. புலன் இன்பங்கள் புலன்களை அழிப்பன என புலனறியாது. புலன்களால் உயர் துன்புறும் என்பது அவை அறியாதன. மேலும் புலனின்பங்களின் பற்றால்— பிறமக்களால் தூற்றப் பெறுதலும் உறுதி என்றும் பலவகையான செய்திகளை யானையின் இயல்பு உணர்த்துகிறது. மாணிக்கவாசகர் மேலும்,

"இருகை யானையை யொத்திருந் தென்னுளக்
கருவை யான்கண்டி லேன்"[52]

என்று குறிப்பிடுதலும் யானையின் இயல்பாகிய தன்னையும் தன் தலைவனையும் அறியா தன் இயல்பை உணர்த்தவே ஆகும். இங்கும் யானை முன்கருத்தையே உணர்த்துகிறது.

இவையன்றியும் மாணிக்கவாசகர் யானையின் கீழ் அகப்பட்டழியும் குறுந்தூறு (சிறுசெடிகள்) மூலம் இதை உணர்த்துகிறார்.

"ஆனைவெம் போரிற் குறுந்தூ
றெனப்புல னாலலைப் புண்டு"[53]

என்பதது. இரு யானைகள் போர் செய்கின்றன. அவற்றின் கீழ் சிறுசிறு செடிகள் உள்ளன. அப்போரின்போது அச் செடிகள் நசுங்கிக் கசங்கி அழிந்து போதல் உறுதி. ஐம்புலன்களும் புலன் இன்பங்களால் அச்செடிகள் போல நசுங்கி அழிந்து போதல் உறுதி. யானைப் போரில் அகப்

பட்ட குறுந்தூறு மேற்கருத்தை உணர்த்தி நிற்கிறது. இவை யாவும் எதிர்மறை வகையால் உணர்த்தப் பெற்றன.

### 2.1.5.3 எறும்பிடை நாங்கூழ்

மாணிக்கவாசகர் பாடல்களில் எறும்பிடை அகப்பட்ட நாங்கூழ்ப் புழு இதை உணர்த்துகிறது.

> "எறும்பிடை நாங்கூழெ னப்புல னாலரிப்
> புண்டலந்த"[54]

என்பது அவர் குறிப்பு. நாங்கூழ்ப் புழு எறும்புகளிடையில் அகப்பட்டால் அது எறும்புகளால் கடிக்கப்பட்டு – அரிக்கப் பட்டு அது அழிதல் உறுதி. புலன்களும் புலனின்பங்களில் பெரிதும்படின் அவை யாவும் அழிதல் உறுதி. எறும்பிடை நாங்கூழ் அரிப்புண்டழிதல் உறுதி. இங்குப் புலன்கள், புலனின்பங்களை இன்பமாகக் காணும் இயல்புடையன. பின்னால் விளையும் துன்பம் அறியாதன என்பதைத் தெளிவுபடுத்துகின்றன. சிறிதுசிறிதாகப் புலன்கள் அரிப் புண்டழிதலையும் இது உணர்த்துகிறது. இதுவும் எதிர் மறை வகையால் கருத்துணர்த்துகிறது.

### 2.1.5.4 விட்டில் பூச்சி

தீயில் வந்து விழும் விட்டில் பூச்சி. இக்கருத்தை மாணிக்கவாசகர் பாடல்களுள் ஓரிடத்தும் பட்டினத்துப் பிள்ளையார் பாடல்களுள் ஓரிடத்தும் உணர்த்தி விடுகின்றது.

> "செழிகின்ற தீப்புகு விட்டிலிற் சின்மொழி
> யாரிற்பன்னாள்
> விழுகின்ற [என்னை]"[55]

> "மின்னுபு விளக்கத்து விட்டில் போலவும்
> உறுவது உணராச் செறுவுழி [சேரர்முன்]"[56]

என்பன அவை.

விட்டில் பூச்சிகள் விளக்கொளியை [தீயை] நோக்கி வரும் இயல்புடையன. அவை அவ்விளக்கொளியால் கவரப் படுகின்றன என்பது இன்னும் பொருந்தும். அதுமட்டுமன்றி அப்பூச்சிகள் அவ்விளக்கொளியிலேயே, தீயிலேயே இறந்து விடுகின்றன. இவ்விளக்கொளியை—தீயை உணராது நெருங்கி அதனால் அழிகின்றன. புலனியல்புகளும் அத்தகையனவே புலனின்பங்கள் புலன்களைத் தன்வழி ஈர்க்கும் இயல்பு உடையன. பின்னல் விட்டில் பூச்சியைப் போல உறுவது உணராது புலனின்பங்களை நோக்கிப் புலன்கள் செல்லின் அழிதல் உறுதி. புலன்கள் அழிவை இவ்விட்டில் பூச்சி உணர்த்தி நிற்கிறது. விட்டில் பூச்சியின் வாழ்க்கையைக் காட்டி அத்தகு இயல்புடைய புலன்கள் என்பதைக் கூறி அவற்றில் அழுந்தியழிய வேண்டாம் என எதிர்மறை வகையால் இங்குக் கருத்து உணர்த்தப் பெறுகிறது.

### 2.1.5.5 தூண்டிலில் மீன்

பட்டினத்தார் பாடல்களுள் ஓரிடத்தில் இக்கருத்தைத் தூண்டிலில் அகப்படும் மீன் உணர்த்தி விடுகிறது. தூண்டில் முள்ளில் ஒரு புழு வைக்கப் பெற்றிருக்கும். மீன் அவ்வுணவைக் கண்டு மிக நல்ல உணவு கிடைத்தது என்றெண்ணி வேகமாகச் சென்று புழுவைக் கவ்வுகிறது. அப்போது தூண்டில் முள்ளில் மாட்டிக்கொண்டு வெளி யிழுக்கப்பட்டு இறக்கிறது. பிறருக்குத் தான் உணவாகி விடுகிறது. புலன்கள் சிற்றின்பத்தை மிக இன்பம் தரும் ஒன்றாகவே நினைக்கின்றன. அவ்வுணவு,. தன்னை அழிப்பதை உணராத மீன் போல அவ்வின்பங்கள் புலன்களை அழிக்கப்போகும் பின் விளைவைப் புலன்கள் அறியாதன. புலனின்பங்கள் இன்பமாய்த் தோன்றினும் அதுவே பின்னால் புலன்களையும் அழித்துவிடும் என்று பின் விளைவையும் இணைத்து இக்காட்சி உணர்த்தி விடுகிறது. இக்காட்சியும் எதிர்மறை வகையால் கருத்துணர்த்துகிறது.

"வளைவாய்த் தூண்டிலின் உள்ளிரை விழுங்கும்
பன்மீன் போலவும்
உறுவது உணரா செறுவுழிச் [சேர்ந்தனன்]"[57]

என்பது அவரின் குறிப்பு.

2.1.5.6 கடல் சுறா

மாணிக்க வாசகர் பாடலில் கடல் சுறாவால் இக்கருத்து இரண்டிடங்களில் உணர்த்தப் பெறுகிறது.

"... மாதர்த் திரைபொரக் காமச் சுறவெறிய
அழிகின்ற னன்"[58]

என்பது அவற்றுள் ஒன்று.

சிற்றின்பங்களில் அழுந்துகின்றதால் புலன்கள் அழிகின்றன என்னும் கருத்தை, மாதர்த் திரை பொரக் காமச் சுறாவின்கண் அகப்பட்டு அழிகின்ற காட்சியின் மூலம் இவர் விளக்குகிறார் இது, சுறா மீனிடம் அகப் பட்டார் அழிதல் போலக் காமத்தின்கண் அழுந்தினாரும் அழிதல் உறுதி என்றுணர்த்துகிறது. மீளுதல் அரிது என்பதை இது உணர்த்துகிறது. எதிர்மறை வகையான் இக்கருத்து உணர்த்தப் பெறுகிறது.

2.1 5.7 கடலில் நீர்ச்சுழி

புலனின்பங்களின் இயல்பை மாணிக்கவாசகர் பாடல் களுள் ஓரிடத்து நீர்ச்சுழி உணர்த்துகிறது.

"வாழ்வெனு மாழியு ளகப்பட்டுத்
தைய லாரெனுஞ் சுழித்தலைப்பட்டு"[59]

என்பதது.

கடல் நீரில் விழுந்தவன் நீச்சல் அறியாதவன் ஆயின் தப்புதல் அரிது, அக்கடல் நீரில் மிகச் சிறந்த நீச்சல் வீரராயினும் நீர்ச்சுழியுள் அகப்படுவாராயின் தப்புதல் அரிது.

மேலும் நீர்ச் சுழியில் அகப்பட்டவரை மற்றவர் வந்து காப்பாற்றுதலும் அரிது. காப்பாற்றச் செல்கின்றவரையும் தன்னுள் இழுத்துக் கொள்ளும் ஆற்றல் வாய்ந்தது நீர்ச்சுழி. அத்தகைய நீர்ச்சுழி புலனின்பங்களால் புலன்கள் அழிவு படுதலை உணர்த்துகிறது. புலனின்பங்களில் அழுந்திய ஒருவனை மீட்டுதல் என்பது அரிது. அவ்வின்பங்களில் அழுந்திய அவனை மீட்கச் செல்பவனையும் கவர்ந்திழுக்கும் இயல்புடையன, அவை என்பதை உணர்த்துகிறது இது. அத்தகைய மீளாத் தன்மையுடன் நீர்ச்சுழி, தன்னில் அகப்பட்டாரை அழித்தல் போலப் புலன்களும் அழித்தல் உறுதி. இக்கருத்தை எதிர்மறை வகையால் அத்தகைய இன்பத்துள் அழுந்தாதீர்கள் என இது உணர்த்துகிறது.

## 2.1.5.8 ஆற்றங்கரை மரம்

முன்னர் ஆற்றின் கரை (ஒடு புனற்கரை) இளமை நிலையாமையை உணர்த்திற்று. இங்கு ஆற்றங்கரை மரம் புலன் இன்பங்களின் இயல்பை உணர்த்த வந்துள்ளது. ஆற்றின்கரை அரிக்கப்படும்போது ஆற்றங்கரை மரம் கீழ் விழுதல் உறுதி.

> **“காருறு கண்ணிய ரைம்புல னாற்றங்**
> **கரைமரமாய் வேருறு வேனை”**[60]

என்ற குறிப்பு மாணிக்கவாசகர் பாடல்களில் வரும் ஒரு குறிப்பு. ஆற்றுநீரின் ஓட்டத்தால் ஆற்றங் கரையில் உள்ள மரத்தின் வேர் பதிந்துள்ள மண் சிறிதுசிறிதாக அரிக்கப் பெற்றுப் பின்னர் முழுவதுமாகக் கீழே விழுந்துவிடும். மண் சிறிதுசிறிதாக அரிக்கப் பெறுவதால் மரம் தன் அழிவை முன்னர் அறியாது. புலனின்பங்கள் சிறிதுசிறிதாகப் புலன்களை அழிப்பதை அவை அறியா என்பதையும் புலன்கள் அவற்றால் அழிந்துபடுதல் உறுதி என்பதையும் தெளிவாக ஆற்றங்கரை மரம் உணர்த்துகிறது. அத்தகைய புலனின்பங்களில் புலன்களைச் செலுத்தக் கூடாது

என்பதை எதிர்மறை வகையால் இங்கு இக்கருத்து உணர்த்தப் பெறுகிறது.

2.1.5.9 **எட்டிப் பழம்**

எட்டிப்பழம் இக்கருத்தைத் திருமூலர் பாடல்களில் ஓரிடத்தில் உணர்த்துகிறது.

> **"இலைநல வாயினும் எட்டி பழுத்தால்**
> **குலைநல வாங்கனி கொண்டுண லாகா**
> **முலைநலங் கொண்டு முறுவல்செய் வார் மேல்**
> **விலகுறு நெஞ்சினை வெய்துகொள் ளீரே"[61]**

என்பது திருமூலர் கருத்து.

எட்டிப் பழம் பார்ப்பதற்கு அழகாயிருக்கும். ஆயினும் அது நச்சுத் தன்மை உடையது. பார்ப்பதற்கு அழகாய் உள்ளதென எண்ணி அதைத் தின்றால் உயிரிழக்க நேரிடும். சிற்றின்பமும் அத்தகையதே. அது இன்பமாக உளதே என்று அழுந்திவிட்டால், அவ்வின்பம் அப்புலன்களை அழிப்பது உறுதி வெளிப்புறத் தோற்றத்தை நம்பி, பின் விளைவை நோக்காது சிற்றின்பத்தில் ஈடுபடின் அழிவர் என்பதை எட்டிப்பழம் அழகாக உணர்த்திவிடுகிறது. அத்தகைய சிற்றின்பத்தை ஒரு பொருளாகக் கருதாதீர் என எதிர்மறை வகையால் இக்கருத்து உணர்த்தப் பெறுகிறது.

இக்கருத்தை ஐந்தடக்கும் ஆமை என்னும் ஓரிடம் தவிர்த்த பிற யாவும் எதிர்மறை வகையாலேயே உணர்த்தப் பெறுகிறது. இக்கருத்து மிகுதியும் உணர்த்தப் பெறுவது மாணிக்க வாசகரால் ஆகும், அடுத்த நிலையில் பட்டினத்தாரும் சுந்தரரும் காணப்பெறுகின்றனர். அதற் கடுத்த நிலையினர் நாவுக்கரசரும் சுந்தரரும் ஆவர்.

யானையும், யானையிடம் அகப்பட்ட குறுந்தூறும் நீர்ச்சுழியும், கடல் சுறாவும் எறும்பிடை நாங்கூழும் புலன்

இன்பங்கள் புலன்களைக் கவர்ந்து இழுக்கும் என்பதை உணர்த்துகின்றன, தழல் எரியில் ஆமையும் ஆற்றங்கரை மரமும் அழிந்துபடுதல் உறுதி என்பதுடன் புலன்களுக்குத் தெரியாமலேயே புலனின்பங்களால் புலன்கள் அழிவுபெறும் என்பதை உணர்த்துகின்றன. இக்கருத்துகள் அவற்றிடைக் காணப்பெறும் நுண்ணிய வேறுபாடுகளைக் காட்டுகின்றன.

### 2 1.6.0 உலகியல் இன்பங்கள்

உலகியல் இன்பங்கள் புலனின்பங்களைப் போல் மக்களை அழிப்பன. பார்ப்பதற்கு இதுவும் இன்பமாகத் தோன்றினும், அவை பின்னர் அழிவில் கொண்டுவிடும். இக்கருத்து திருஞானசம்பந்தர் ஓரிடத்தும் திருநாவுக்கரசர் இரண்டிடங்களிலும் சுந்தரர் இரண்டிடங்களிலும் மாணிக்கவாசகர் இரண்டிடங்களிலும் திருமூலர் ஓரிடத்தும் நக்கீரதேவ நாயனார் ஓரிடத்தும் பட்டினத்துப் பிள்ளையார் ஓரிடத்தும் இயற்கை மூலம் உணர்த்துப் பெறுகிறது. இவையாவும் இயற்கை உவமைகள் மூலம் உணர்த்தப் பெறுகின்றன

### 2.1.6.1 பாம்பின் வாய்த் தேரை

இக்காட்சி, திருஞானசம்பந்தர் பாடல்களுள் ஓரிடத்தும் திருநாவுக்கரசர் பாடல்களுள் ஓரிடத்தும் பட்டினத்துப் பிள்ளையார் பாடல்களுள் ஓரிடத்தும் காணப்பெறுகிறது.

**''பாம்பின் வாய்த்தேரையாய்ச் சிறுபறவை**
**கடிகொள் பூந்தேன் சுவைத்தின்பால்''[62]**

**''பாம்பின் வாய்த்தேரைபோலப் பலப்பல**
**நினைக்கின்றேன்''[63]**

**''நஞ்சுமிழ் பகுவாய் வெஞ்சின மாசுணம்**
**தன்முதல் முருக்க நென்முதற் சூழ்ந்த**
**நீர்ச்சிறு பாம்புதன் வாய்க்கெதிர் வந்த**
**தேரையை வவ்வி யாங்கு யாம்முன்''[64]**

என்பன அவை.

திருஞானசம்பந்தர் பாம்பையும், பாம்பின் வாயில் தேரையையும், தேரையின் வாயில் பூந்தேனையும் குறிப்பிடுகின்றார். திருநாவுக்கரசர் பாம்பின் வாயில் தேரையை மட்டும் காட்டுகிறார். பட்டினத்துப் பிள்ளையார் பெரிய பாம்பையும் அதன்வாயில் நீர்ப்பாம்பையும் அதன் வாயில் தேரையையும் காட்டுகிறார். காட்சிகள் விரிவாயினும் உணர்த்தப் பெறும் கருத்து ஒன்றே ஆகும்.

தேனை உண்ணும் பூச்சிக்கும், அப்பூச்சியை விழுங்கும் தேரைக்கும், அத்தேரையை விழுங்கும் பாம்புக்கும் அப்பாம்பையே விழுங்கும் பெரும்பாம்புக்கும் தான் உண்ணப் போகும் இச்சிறு இன்பத்தையே பெரிதாக எண்ணி ஒவ்வொன்றும் மகிழ்கின்றது. தனக்குப் பின்னால் உள்ளதை அவை உணரவில்லை. பின் விளைவாக அழிந்து படுதலை அவை உணராமல் இச்சிறு இன்பத்திலேயே தங்கள் நோக்கத்தைச் செலுத்துகின்றன. இவ்வுலகியல் கட்டுகள், இன்பங்கள் இத்தகையனவே. பின்னால் வரும் விளைவை மறைத்து விடுவன என்பது இங்கு உணர்த்தப் பெறுகிறது. உலகியல் இன்பங்கள் ஒன்றொடு ஒன்று இணைந்து, ஒன்றில் ஒன்று விரிந்து மனிதனை அழித்தலை அக்காட்சிகள் விரிவாகக் காட்டுகின்றன. இவை யாவும் இத்தகைய உலகியல் இன்பங்களைப் பெரிதும் போற்றாதீர் என்று எதிர்மறை வகையால் உணர்த்துவதாக உள்ளன.

### 2.1.6.2 நீர்ச்சுழி

முன்னர்ச் சிற்றின்பங்களின் இயல்பை உணர்த்திய நீர்ச்சுழி இங்கு உலகியல் இன்பங்களையும் பலவிடங்களில் உணர்த்துகிறது. திருநாவுக்கரசர் பாடல்களுள் ஓரிடத்தும் சுந்தரர் பாடல்களுள் இரண்டிடங்களிலும் மாணிக்கவாசகர் பாடல்களுள் ஓரிடத்தும் நக்கீரதேவ நாயனார் பாடல்களுள் ஓரிடத்தும் இவ்வியற்கை உலகியல் இன்பங்களை உணர்த்து

"சாதிகுலம் பிறப்பென்னும் சுழிப்பட்டுத் தடுமாறும்"[65]
"படுசு ழித்தலைப் பட்டனன்"[66]
"சாதல்பிறப் பென்னுக் தடஞ்சுழியிற் றடுமாறி"
என்பன அவற்றுள் சில.

நீர்ச்சுழியின் இயல்பு முன்னர்த் தெளிவாகக் கூறப் பட்டுள்ளன. சாதி, குலம், பிறப்பு முதலிய உலகியல் தொடர்புகள் மீளமுடியாத ஒன்று. அவ்வுலகியலில் ஈடு படின், அவற்றுள் அழுந்தப்பட்டு அழிதல் உறுதி என்பதை இது உணர்த்துகிறது. இதுவும் எதிர்மறைவகையான் உணர்த்தப் பெறுவதே ஆகும்.

### 2.1.6.3. முதலையும் கரடியும்

திருமூலர் பாடல் ஒன்று இக்கருத்தைப் புலப்படுத்தியது.

"ஆற்றிற் கிடந்த முதலைகண் டஞ்சிப்போய்
ஈற்றுக் கரடிக் கெதிர்ப்பட்ட தன்னொக்கும்
நோற்றுத் தவஞ்செய்யார் நூலறி யாதவர்
சோற்றுக்கு நின்று சுழல்கின்ற வாறே"[67]

என்பது அது.

தவஞ்செய்தல் கடினம் என்றெண்ணி உலகியலில் பெரும் பற்றுக் கொண்டு அதில் ஈடுபடுதல் ஆற்று முதலைக்கஞ்சி கரடிக்கு எதிர்ப்பட்டதற்கு ஒக்கும் என்கிறார். ஈற்றுக்கரடி என்று கூறுவதால் மீளுவது அரிது என்பது உணர்த்தப் பெற்றது. இக்காட்சியின் மூலம் உலகியல் இன்பங்கள் யாவும் பெருந்துன்பம் தரக்கூடியன என்பது உணர்த்தப் பெறுகிறது. இத்தகைய உலகியலில் பற்று கொள்ள வேண்டாமென இக்கருத்து எதிர்மறைவகையால் உணர்த்தப் பெறுகிறது.

முதலாவது, ஒன்றையொன்றறியாமலேயே அழிவை நோக்கிச் செல்கின்றன என்பது இரண்டாவது, உலகியலில் அழுந்தினார் அழிவிலிருந்து மீளுதவரிது என்பதும், தவம்

முதலியன செய்ய அஞ்சி, உலகியலை உணர்ந்தும் உலகியலில் ஈடுபடுவார் அழிவது உறுதி என்பதும் முறை யாக அக்காட்சிகள் மூலம் உணர்த்தப் பெறுகின்றன.

### 2.1.6.4.0 பிறன்மனை விழையாமை

இதைத் திருவள்ளுவர் "பிறன்மனை நோக்காத பேராண்மை"68 என்று குறிப்பிடுவார். பிறன்மனையை நோக்காததே பேராண்மை என்று குறிப்பிடுவதிலிருந்துபிறன் மனையை விழைகிறவன் மிகவும் இழிந்தவன் என்ற கருத்து புலப்படுகிறது. அவரே, பிறன்மனையை விழைகிறவன் எத்தகைய பெருமைபெற்றவனாயினும் அப்பெருமைகள் யாவும் அழியும் என்று குறிப்பிடுகிறார். இத்தகு கருத்தைப் - பிறனில் விழைதலைத் திருமூலர் இயற்கை உவமைகள் மூலம் மூன்றிடங்களில் உணர்த்துகிறார்.

### 2.1.6.4.1 ஈச்சம்பழம், புளிமாங்கனி, சுனைநீர்ச்சுழி.

இல்லற நெறியில் இணைந்தவன் தன்மனைவியிடம் இன்பம் பெறுகிறவனே நல்லவன். அவ்வின்பமே நல்லின்பம். பிறன் மனையை நாடுகிறவன் இழிந்தவன். அவ்வின்பமும் இழிவான ஒன்று என்று இவரால் உணர்த்தப் பெற்றுள்ளது. மனைவியின் இன்பத்தைக் காய்த்த பலாவாகவும், இனிக்கும் தேமாங்கனியாகவும் குளிர்ந்த சுவை நீராகவும் காட்டு கிறார். பிறன்மனை இன்பத்தை ஈச்சம்பழமாகவும் புளிக்கும் புளிமாங்கனியாகவும் சுனையில் சுழியாகவும் குறிப்பிடுகிறார்.

> **"ஆத்த மனையாள் அகத்தில் இருக்கவே**
> **காத்த மனையாளைக் காமுறுங் காளையர்**
> **காய்ச்ச பலாவின் கனியுண்ண மாட்டாமல்**
> **ஈச்சம் பழத்துக் கிடருற்ற வாரே"69**

என்பது அவற்றுள் ஒன்று.

நன்கு பழுத்த பழம் கையிலிருத்தல் மனைவியின்பத்தைக் குறிக்கிறது. ஆனால் பிறன்மனை இன்பத்தைப் பெறும் வழியோ துன்பமானது. அது ஈச்சம்பழம் போன்றது. அவை முட்கள் அடர்ந்த மரத்தின் மேலே பழுத்துக் கிடப்பன. அவற்றைப் பெறுவதில் முட்கள் குத்துதல் போன்ற இடர்கள் இருப்பது போல் இவ்வின்பம் பெறும் வகையிலும் புறத்தால் இடர்வரும். மேலும் கிடைக்கும் அவ்வின்பமோ சதைப்பற்றுக் குறைந்து கொட்டை பெரியதாக விளங்கும் ஈச்சம்பழத்தை ஒத்த சிறுமையானது என்று அவ்வின்பத்தின் இழிவு, சிறப்பாக அதன் மூலம் உணர்த்தப் பெறுகிறது.

புளிமாங்கனியும் அவ்வாறே பெறும் இன்பம் புளிப்பு என்பதோடு புளிப்பு பல்கெடுத்தல் போல புலன்களை அழிக்கும் இயல்பும் அதற்குண்டு என்பதுணர்த்தப் பெறு கிறது. நீர்ச்சுழியும் அவ்வாறே. நீர்ச்சுழியின் இயல்பு முன்னர் விரிவாக உரைக்கப் பெற்றது. தன்னுள் அகப் படுவாரை அழித்தல் போல பிறன்மனை இன்பம் ஒருவனின் பெருமை யாவற்றையும் அழித்துவிடும் என்பது உணர்த்தப் பெற்றுள்ளது.

**மனைவியின் இன்பம்**

பலாப்பழம், தேமாங்கனி ஆகியன போல் பாது காப்பாகவும் இனிமையாகவும் சுனைநீர் போல குளிர்ச்சி யாகவும் விளங்குகின்ற மனைவியின் இன்பத்தையே பெறுவது நல்லது என்பது உடன்பாட்டு வகையால் உணர்த்தப் பெற்றது.

**பிறன்மனை இன்பம்**

ஈச்சம்பழம், புளிமாங்கனி ஆகியனபோல துன்பந்தரக் கூடியதும் புலன்களையழிக்கக் கூடியதும் நீர்ச்சுழிபோல் அகப்படுவதைத் தன்னுள் அழிக்கக் கூடியதுமான பிறன்

மனை இன்பத்தை நாடாதீர் என்று எதிர்மறை வகையால் உணர்த்தப் பெற்றது.

## 2.2.0 சமய உண்மைகளை உணர்த்தல்

திருமுறை இயற்கை மூலம் சைவத்தின் பெருமை, பக்திநிலை, இறையியல்பு, உயிரியல்பு, மலவியல்பு, இறை வழிபாட்டின் இன்றியமையாமை முதலியவற்றை உணர்த்து கிறது. சைவசமயத்தின் பெருமையுணர்த்துவன நீங்கப் பிற இயற்கை உவமைகளின் மூலம் உணர்த்தப் பெறுவன. சைவசமயத்தின் பெருமை இயற்கைப் பழமொழிகளால் உணர்த்தப் பெறுவன. இவை மட்டும் திருமுறையில் கருத்துணர்த்தும் இயற்கைப் பழமொழிகளாகக் காணப் பெறுகின்றன. இறைவழிபாட்டை உணர்த்தல் என்னும் பகுதி முழுக்க முழுக்க இயற்கைப் பொருள்கள் அமைந்த திணைக்காட்சி உணர்த்துவதாகக் காணப்பெறுகிறது.

### 2.2.1.0 சைவசமயத்தின் பெருமை

திருநாவுக்கரசரும் நக்கீரதேவ நாயனாரும் பட்டினத்துப் பிள்ளையாரும் சைவத்தின் பெருமையை இயற்கைப் பழமொழிகளின் மூலம் உணர்த்துகின்றனர்.

### 2.2.1.1 கனியிருக்கக் காய்கவர்தல்

இப்பழமொழி திருநாவுக்கரசரால் எடுத்தாளப் பெற்றுள்ளது. இங்குக் கனி எனக்குறிக்கப் பெறுவது சைவசமயம்; காய் எனக் குறிக்கப் பெறுவது சமணசமயம். திருநாவுக்கரசர் மரபு வழியாகச் சைவ சமயத்தைச் சார்ந்தவர். ஆனால் இடையில் அவர் சமணத்தைச் சார்ந்தார். பின்னர் அவர் சமணத்திலிருந்து விலகிச் சைவ சமயத்தில் சேர்ந்தார். சமண சமயத்திலும் சைவ சமயம் பல வகையிலும் அவர்க்கு உயர்ந்ததாகவே காட்சியளிக்கிறது; புலப்படுகிறது. தான் உண்மை உணராமல் சமணசமயத்தைச் சார்ந்து அவற்றிலிருந்து ஒன்றும்

பெறாமல் காலத்தை வீணே போக்கினேன் எனும் கழிவிரக்கத்தால் இத்தகு பாடல்களை அவர் பாடுகிறார். இத்தகு பழமொழிகளால் அதை விளக்கிக் காட்டுகிறார். இப்பழமொழிகள் இவர் பாடல்களுள் ஏழு காணப்பெறு கின்றன.[85] சைவத்தின் பெருமையையும் சமணத்தின் பெருமை இன்மையையும் இயற்கைப் பொருள்களின் மூலம் காட்டுவதன் மூலம்தான் பலகாலம் தான் வீணாக்கியது போதும்; மக்கள் வீணாக்க வேண்டாம் என்பதை எதிர் மறை வகையால் உணர்த்துகிறார்.

தான் மரபு வழியாகச் சைவசமயத்தைச் சார்ந்தவரா யிருந்தும் சமணத்தில் சார்ந்ததைக் கனியிருக்கக் காய் கவர்ந்த நிலைக்கு ஒப்பிடுகிறார். கனி அது கையிலே இருந்தது; காயோ வெளியே இருந்தது. கனியானது இனிப்பானது; உடலுக்குறுதி தருவது. காயோ புளிப்பது; (பல்லைக் கெடுப்பது) புலன்களைக் கெடுப்பது. உடலுக்கும் உயிருக்கும் வாழ்க்கைக்கும் வசதியளிக்கக் கூடிய சைவத்தை விட்டதாகவும், ஒழிக்கக் கூடிய, புலனைக் கெடுக்கக் கூடியதுமாகிய சமணத்தைப் பற்றியதாக அவர் உணர்த்துகிறார்.

மேலும் சைவசமயத்திற்குச் சோபான மார்க்கம் ஒன்றை உரைப்பர் சான்றோர். "அரும்பு மலர் காய்கனி போல"[70] என்பது சைவசமய சோபான மார்க்கம். கனியாக இருப்பது சைவசமயம்; படிமுறை வளர்ச்சியின் முடிந்த முடிவாக இருப்பது அது. அதை விடுத்து அதற்குக் கீழ் நிலையில் உள்ள காயாகிய தகுதியிலிருக்கும் சமணம் முற்றாத கருத்துக்களைக் கொண்டது, அத்தகு சமணத்தைத் தான்சார்ந்ததை அவ்வாறு குறிப்பிடுகிறார் என்று கொள்ளலாம்.

**"கனியிருப்பக் காய் கவர்தல்"**

என்னும் தொடரைத் திருவள்ளுவர் இனியவை கூறல் என்னும் பகுதியில் பயன்படுத்துகிறார்.

"இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று"[71]

என்பது அது. இக்குறளில் "கனி" என்பதற்குப் பரிமேலழகர் கனிகளென்றது ஔவையுண்ட நெல்லிக்கனி போன்ற அமிழ்தானவற்றைக் காய்களென்று காஞ்சிரங்காய் போன்ற நஞ்சானவற்றை என்று பொருள் கூறுகிறார்[72]. அத்தகு முறையில் பொருள் கொள்ளினும் பொருத்தமாக அப் பழமொழி உள்ளது. அவ்வகையில் நோக்கும் போது உயிர்க்குறுதி பயக்கும் உண்மைகளைக் கூறுவது சைவம் என்ற கருத்து கிடைக்கிறது.

### 2.2.1.2 முயல்விட்டுக் காக்கைபின் போதல்

இப்பழமொழியை[73] திருநாவுக்கரசரும் நக்கீர தேவ நாயனாரும் பயன்படுத்துகின்றனர். முயலும் காக்கையும் முறையே சைவநெறியையும் சமணநெறியையும் காட்டுவன வாகும். முயல் மண்ணில் ஓடும் ஒருவகை விலங்கினம்; காக்கை விண்ணில் பறக்கும் ஒருபறவையினம். முயல் ஓடுவதைக் கண்ட ஒருவன் அதன்வழி ஓடி, அதன் வழியைப் பின்பற்ற முடியும். காக்கை பறப்பதைக் கண்ட ஒருவன் அதன்வழி - அது காட்டும் வழி பின்பற்றுதல் - உடன் பறத்தல் இயலாது. ஒரு நெறியான பாதையாக அமையாதது அதன்வழி. முயலின் வழி போன்றது சைவ சமயநெறி. காக்கையின் வழி போன்றது சமணசமயநெறி. இவ் வியற்கையின் நலம் சைவசமய நெறிகள் மக்களால் பின்பற்ற இயலுவன. சமண சமய நெறிகள் மக்களால் பின்பற்ற இயலுவன அல்ல. சைவசமயம் இல்லற நெறிநின்று இறையை வணங்குதல், எளிய வழிபாட்டில் இறையை அடைதல் முதலான சைவவழிகள் [நெறிகள்] மக்கள் யாவராலும் பின்பற்றற்கு எளிமையாய் உள்ளன. சமண

சமயம் இல்லற நெறியிலீடுபடாமல் நீங்கிநிற்றல், காட்டில் தவஞ்செய்தல் முதலான யாவரும் பின்பற்ற இயலாத நெறிகளைப் பெற்றுள்ளது. இத்தகு பின்பற்ற இயலாத, பயன் விளையாத சமணசமயத்தைச் சார்ந்ததை இதன் மூலம் அவர் உணர்த்துகிறார். தான் துன்பமடைந்தவாறு மக்கள் அடைதல் வேண்டாமென இப்பழமொழி மூலம் அவர் எதிர்மறை வகையால் உணர்த்துகிறார். நக்கீரதேவ நாயனாரும் ஓரிடத்தில் சைவசமயத்தை விட்டுப் பிற சமயத்தைச் சார்தல் முயல்விட்டுக் காக்கை பின் போதலுக்கு ஒத்தது[74] என்று குறிப்பிடுகிறார். திருநாவுக்கரசர் அக்கருத்தைத் தன்னனுபவ நிலையில் இதைக் காட்டுகிறார்; நக்கீர தேவ நாயனாரோ பொது வகையால் இக்கருத்தைக் காட்டுகிறார். இக்கருத்து அவ்வாறு காக்கையின் பின் போவதைத் தடுக்கும் நிலையில் எதிர்மறைவகையால் உணர்த்தப் பெறுகிறது.

#### 2.2.1.3 பனிநீராற் பரவை செய்தேன்

இதுவும் திருநாவுக்கரசர் காட்டும் குறிப்பாகும். இங்குப் பரவை [கடல்] என்பது சைவசமயம். பனிநீர் என்பது சமணசமயம். கடலிருந்து நீர் ஆவியாகி மேகமாக உருவாகிப் பின் மழைபொழிய நீர் மீண்டும் கடலை அடைகிறது. பனிநீர் நீராவியாகி மழை பொழிவதில்லை. கதிரவன் வரவினால் பனிநீர் மண்ணில் விழுந்து மறைந்து விடும். அது மட்டுமல்லாமல் கடல் பல ஆறுகளையும் தன்னுள் அடக்குவது பலவகையான ஆற்று நீர் அதில் வந்து கலந்தாலும் தன் தன்மை திரிவதில்லை. எல்லாவற்றிற்கும் மேலாக எல்லா ஆறுகளின் தோற்றத்திற்கும் கடலே காரணமாகவும் விளங்குகிறது. கடல் நீர் ஆவியாகி மேல் சென்று, மேகமாகி மழைபொழியவில்லையாயின் ஆறுகளின் தோற்றமில்லை. இத்தகையது தான் சைவசமயம். சைவ சமயம் பல சமயங்களின் தோற்றத்திற்குக் காரணமாக

உள்ளது. பல சமயங்கள் அச்சமயத்திலிருந்து தான் கிளைத்தன. மேலும் பலவகைச் சமயங்களின் கருத்துக் களையும் தன்னுள் அடக்கிக் கொண்டுள்ளது. ஆனால் சமணசமயமோ பனித்துளி. பனித்துளியால் மழையோ தோற்றம் பெறுவதில்லை. பயனுமில்லை. அத்தகைய பனிநீரைப் பெருமையாகக் கொண்டு ஏமாற்றமடைந்த தன்னிலையைக் காட்டுவதன் மூலம் எதிர்மறை வகையால் சைவசமயத்தைச் சார்ந்து சிறப்பு பெறுங்கள் என்பது புலப்படுத்தப் பெறுகிறது.

### 2.2.1.4 இருட்டறையில் மலடுகறத்தல்

இப்பழமொழியையும் திருநாவுக்கரசரே பயன் படுத்தியுள்ளார். மலடு என்பது வறட்டுப் பசு. கன்றீனலும் பால் கறத்தலும் இதற்கில்லை. இது சமணசமய நெறி. பயனற்ற ஒன்று என்பதற்காகக் காட்டப் பெறுகிறது. பசுக்களை ஆசாரியர்க்கு ஒப்பிடுவர். பாலை ஞானமார்க்கம் ஆகவும், பால் பெறுதலை ஆசாரியர்களிடமிருந்து ஞானம் அண்டிப்பெறும் மாணவனின் நிலையாகவும் தத்துவ விளக்கம் கூறுவர் வைணவ தத்துவ நூலார்.

**"வாங்கத் குடம்நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள்"**

என்ற அடிக்குத் தத்துவ விளக்கமாக மேற்கருத்து காட்டப் பெறுகிறது.

ஞானபோதமாகிய பாலைப்பெற ஆசை பெற்றுச் சமண சமயம் சென்றார் அவர். அங்கே மெய்யுண்மை யறியாத அவ்வாசானோ மலடு. அவ்வுண்மையையும் அறிய இயலாத வகையில் இருட்டறையில் அவன் இருக்கிறான்.

அஞ்ஞானமாகிய இருளில் மெய்ஞ்ஞானமிலாத ஆசாரியரிடமிருந்து ஞானமாகிய பாலைப் பெறச் சென்று ஏமாந்த நிலை திருநாவுக்கரசரால் இப்பழமொழி மூலம் உணர்த்தப் பெறுகிறது. மலடு என்பது ஞானமற்ற தன்மை.

இருட்டறை அஞ்ஞான இருள். இக்கருத்து சமணசமய வாதிகள் தெளிவில்லாதவர்கள் என்பதை உணர்த்துகிறது. இதன் மூலம் எதிர்மறை வகையால் அத்தெளிவில்லாத சமயத்தைப் பொருட்டாகக் கருத வேண்டாம் என்று ணர்த்தப்பெறுகிறது.

## 2.2 1.5 விளக்கிருக்க மின்மினித் தீக்காய்தல்

'தீக்காய்தல்'[76] என்று இங்குச் சிறப்பாகக் குறிக்கப் பெறுதலால் விளக்கு என்பது இங்கு ஒளிப்பிழம்பு. மின்மினி ஒரு சிறு பறவை. ஒளிப் பிழம்பு இங்குச் சைவசமயம்; மின் மினிப்பூச்சி சமண சமயம்.

பிறவிப் பிணியாகிய குளிரை ஆதியும் அந்தமுமாய் ஓங்கி உயர்ந்த பரஞ்சோதிபால் விளங்கும் ஞானவெப்பத் தால் போக்கிக் கொள்ளத் தவறி, வெறும் பசுட்டுடைய சிற்றொளியில் குளிரைப் போக்க இயலாத அஞ்ஞானக் குளிரில் வாடினேன் என்று குறிப்பிடலாம். பேரொளிப் பிழம்பும் ஒளிதருவது தான்; மின்மினியும் ஒளி தருவது தான் பரஞ்சோதியாகிய ஒளிப்பிழம்பு ஒளியொடு வெப்பமும் கொண்டிலங்குவது. மின்மினி ஒளிமட்டும் கொண்டது. பரஞ்சோதியாகிய வெப்பத்தால் உடலின் அழுக்குகள் நீங்கித் தூய்மை பெறுகிறது; மின்மினியோ வெப்பமே இல்லாதது. இத்தகைய வெப்பம் இல்லாத, நீக்குதல் இயலாத சமயம் சமணம் என்பதை இப்பழமொழி உணர்த்துகிறது. வெப்ப அடிப்படையில் பேரொளிப் பிழம்பையும் மின்மினிப் பூச்சியையும் காட்டும் இவரின் குறிப்பிலிருந்து மின்மினிப் பூச்சியின் இயல்பை மிக நுணுக்கமாகக் கண்டிருக்கிறார் என்பது புலப்படுகிறது. இக்கருத்தின் மூலம் நான் சார்ந்து ஏமாந்தது போல் நீங்கள் பயனற்ற சமணத்தைச் சாராதீர்கள் என்பது எதிர்மறை வகையால் உணர்த்தப் பெறுகிறது. நக்கீரதேவநாயனாரும் விளக்காகச் சைவத்தையும், மின்மினிப் பூச்சியாகச்

சமணத்தையும் ஓரிடத்தில் குறிப்பிடுகிறார். விளக்கின் ஒளி நல் வழியைக் காட்டும். மின்மினிப்பூச்சியின் ஒளி சிறு அளவிலும் வழிகாட்ட இயலாது. சைவத்தைச் சார்ந்தோர் நல்ல நெறியில் செல்லவியலும்; சமணம் சார்ந்தோர் நன்னெறியில் செல்லவியலாது என்கிறார். சைவசமயம் விளக்கு; சமணசமயம் மின்மினி என்பதைத் திருநாவுக்கரசர் ஒளியொடு வெப்பத்தையும் தொடர்புபடுத்தித் தன்னனு பவத்தின் மூலம் குறிப்பிடுகிறார். இவரோ பொது வகையால் கூறுகிறார். இங்கும் விளக்கொளியை விட்டு மின்னொளியைக் கைக் கொள்ள நினையாதீர் என எதிர் மறை வகையான் இக்கருத்து உணர்த்தப் பெறுகிறது.

### 2.2.1.6 கரும்பிருக்க இரும்பு கடித்தல்

இப்பழமொழியும்[77] திருநாவுக்கரசரால் கூறப்பெறுவது ஆகும். இங்குக் கரும்பு சைவசமயம் ஆகும்; இரும்பு சமண சமயத்தைக் குறிப்பது. கருங்கரும்பும் இரும்புத் துண்டும் தோற்றத்தில் ஒன்று போலக் காணப்பெறும். இக்கரும் பினைக் கடித்தால் சாறும் வரும்; உடல் உரம் பெறும். இரும்பைக் கடித்தாலோ இங்குப்பற்கள் உடையும். சைவ சமயமாகிய கரும்பைத் தின்றால் சித்தாந்தமாகிய சாறைத் தரும். முத்தாந்தமாகிய உரத்தைத் தரும். சமணமாகிய இரும்போ புலன்களைத் துன்பத்தில் ஆழ்த்துவது ஆகும். சமயம் என்ற நிலையில் ஒன்று போல சைவசமயமும் சமணசமயம் தோன்றினும், சைவம் கரும்பொத்தது. சமணம் இரும்பினையொத்தது. தன் கையில் கரும்பாகிய சைவமிருக்கவும் இரும்பைக் கடித்து துன்புற்றேன். நீங்கள் அவ்வாறு இரும்பைத் தேடாதீர்கள் என்று எதிர்மறை வகையால் அவர் அதை உணர்த்துகிறார்.

### 2.2.1.7 நரிவரால் கவ்வச்சென்று நற்றசையிழத்தல்

இதுவும் திருநாவுக்கரசருடையது ஆகும். வரால் மீனைப்பெற நரி சென்றது. அங்கு நரி வரால் மீனைக்

கவ்வ, அம்மீனோ நரியின் தசையைக் கவ்விச் சென்று விட்டது. ஞானம் பெறுவதற்காகச் சமணம் சென்று, மரபு வழியாக ஓரளவுபெற்றிருந்த ஞானமும் இழந்த தன்னிலையை நாவுக்கரசர் இவ்வாறு குறிப்பிடுகிறார். சமண சமயத்தின் அஞ்ஞானத்தால் தன்னிடத்திருந்த ஞானமும் மறையப் பெற்றதை இதன் மூலம் காட்டுகிறார். ஞானமாகிய ஒரு பொருளை நாடிச் சென்று அது கிடைக்காமல் போன தொடு தன்னில் உள்ள ஞானத்தையும் கெடுத்ததைக் காட்டுறது இக்காட்சி. அத்தகைய துன்பத்தை இவ்வுலகம் பெறுதல் வேண்டாம் என்பதை எதிர்மறை வகையான் அமைத்துக் காட்டுகிறார்.

### 2.2.1.8 உள்ளங்கை நெல்லிக்கனி

சைவசித்தாந்தம் உள்ளங்கை நெல்லிக்கனி போன்றது; அமுதினும் இனியது அது; உயிர்க்குறுதி பயப்பது. அத்தகைய நெல்லிக்கனி உள்ளங்கையில் இருப்பது வெள்ளிடைமலையென எல்லார்க்கும் புலப்படும். சைவ சமயத் தத்துவங்கள் யாவும் மறைபொருள்கள் அல்ல; தெளிவாக யாவர்க்கும் புலப்படுவன. சைவ சமயநெறிகளும் மறைநெறி அல்ல. எல்லார்க்குந் தெளிவாய்த் தெரியும். அது மட்டுமின்றி நெல்லிக்கனி போல உயிர்க்குறுதி பயக்கும் இயல்பும் வாய்ந்தது. இத்தகைய கருத்தை உடன்பாட்டு வகையால் நெல்லிக்கனி சைவசமயத்தை உணர்த்தி நிற்கிறது.

### 2.2.2.0 பக்திநிலைகளை / இறையன்பு நிலைகளை உணர்த்தல்

பக்தி மனிதனிடம் இப்படி அமைய வேண்டும்; இன்னவாறு அமையக் கூடாது என்று உணர்த்துவதொடு இறையடியார்களின் பக்தி நிலைகளையும் உவமைகள் மூலம் இயற்கை கருத்துணர்த்துகிறது.

''இறைவன் தோற்றுவித்த உயிர்களின் உயர்நிலை உடையவன் மனிதன். அவன் தன்னிலும் இழிந்தனவாக நினைக்கும் பல்லுயிர்கள் அவனுக்கு நற்பாடம் பல கற்பிக்கின்றன. அவன் இன்ன விலங்கு போல வாழ வேண்டும். இன்னவை போல வாழலாகாது என அறவுரையும் அறிவுரையும் வழங்குகின்றன''[78] என்ற அறிஞர் கூற்று ',இப்படி இருக்க வேண்டும்'' 'இப்படி இருக்கக் கூடாது' என்று உயிரினங்கள் கற்றுத் தருவதாகக் குறிப்பிடுகிறார். இக்கருத்து திருமுறையாசிரியர்களின் பாடல்களுக்கும் பொருந்தும். பக்தியின் நிலை இப்படி இருக்கவேண்டும். இப்படியிருக்கக் கூடாது என்று பல இடங்களில் திருமுறையில் உயிரினங்கள் மூலம் உணர்த்தப்பெறுகின்றன. மேலும் இறையடியார்களின் பக்திநிலைகள் இவ்வாறிருந்தன என்பதை இயற்கை உவமைகளே உணர்த்தி நிற்கின்றன. இறையடியார்கள் தன்நிலையைக் கூறினும் பிறர்நிலையை கூறினும் அவை பொதுநிலையில் இவ்வாறு பக்தி நிலை இருக்க வேண்டும் என்பதுணர்த்தற்காய் அமைந்தன என்று கொள்வது பொருந்தும்.

### 2.2.2.1 கொக்கும் பக்தி நிலையும்

அடியவர்களின் பக்திநிலை இப்படியிருக்க வேண்டும் என்று உணர்த்த கொக்கின் இயல்பைத் திருநாவுக்கரசர் ஓரிடத்தும் திருமூலர் ஓரிடத்தும் உணர்த்துகின்றனர்.

கொக்கு என்னும் பறவையின் இயல்பைத் திருவள்ளுவர் காலமறிதல் என்னும் அதிகாரத்தில் குறிப்பிட்டுள்ளார்.

> ''கொக்கொக்கக் கூம்பும் பருவத்து மற்றதன்
> குத்தொக்க சீர்த்த விடத்து[79]''

என்பதது, வாய்க்கின்ற நேரம் — வாய்ப்பை எதிர்நோக்கி இருக்கும் செயல் இங்குக் காட்டப்பெறுகிறது. மீன்கொள்வதற்காக மரக்கொம்பில் இருக்கும் கொக்கு மீன்வரும் வரையிலும் ஒரு சிறிதும் அசைவில்லாமல் உயிரில்லாதது

போல ஒரே நோக்கத்தோடு அமர்ந்திருக்கும். மீன் வந்துழி அது தப்புவதற்கு முன் அதைக் குத்திக் கொள்ளும். இத்தகு கருத்து மூதுரையிலும்

> **"... ... மடைத்தலையில்**
> **ஓடுமீ னோட உறுமீன் வருமளவும்**
> **வாடி யிருக்குமாங் கொக்கு"[80]**

என்று குறிப்பிடப்பெறுகிறது. கொக்கின் இச்செயலை அறிஞர் சுப்பிரமணியம் அறிவாற்றல் என்று குறிப்பிடு கிறார்.

"அன்னம் போன்றே அறிவாற்றல் மிக்கது கொக்கு. காலங்கருதிச் செயற்படும் அதன் திறன் அறிஞரால் வியந்து போற்றப்படுகின்றது"[81] என்று அவர் குறிப்பிடுகிறார்.

இத்தகைய காலங்கருதிய நோக்கமும் வந்தவழித்தப் பாமல் கொள்வதும் ஆகியன பக்தி நிலைக்கு முக்கிய மானவை. இறைவனுடைய அருள் கிடைக்கும் வரையில் ஒரே நோக்கத்தோடு இறையருளையே நினைத்திருக்க வேண்டும். அருள் கிடைக்க வாய்ப்பு வரும் போது உடனே அதைக் கொக்கு போல விடாது பற்றுதல் வேண்டும். இதைத்தான் திருநாவுக்கரசர்

> **"மரக்கொக்காமென வாய்விட்டலறி"[82]**

என்று குறிப்பிடுகிறார். இக்கொக்கின் இயல்பு தாரணை என்னும் யோக நிலைக்கும் உவமையாகத் திருமூலரால் ஓரிடத்துக் காட்டப்பெற்றுள்ளது. அவர் அதை "மடைவாயிற் கொக்கு போல"[83] என்று குறிப்பிடுகிறார். இறையடியவர்களுடைய பக்திநிலை இன்னவாறு இருக்க வேண்டுமென உடன்பாட்டு வகையால் கொக்கின் இயல்பு இங்கு உணர்த்துகிறது.

அடியார் நிலை

2.2.2.2 உடும்பு

உடும்பின் இயல்பின் மூலம் பக்திநிலையைச் சேக்கிழார் கண்ணப்பரின் பக்திநிலையைக் காட்டும் போது ஓரிடத்தில் குறிப்பிடுகிறார்.

தேவனை அணைத்துக் கொண்டு,

"வங்கினைப் பற்றிபோகா வல்லுடும்பு என்ன நீங்கான்"[84]

என்று குறிப்பிடுவார். உடும்பு என்னும் சிறியபிராணி தான் கொண்டதை உறுதியாகப் பற்றிக் கொள்ளும். கொண்டதை விடாது இத்தகைய இயல்பு கண்ணப்பர் பக்தி நிலைக்குக் கூறப்பெற்றது. காளத்தி மலைமேல் இருக்கும் இறைவனை அணைத்துக் கொண்டு அவரை விட்டு நீங்காது நிற்கும் நிலைக்குக் காட்டப்பெறுகிறது. பற்றியதை விடாத திண்மை உடும்பினிடத்தில் காணப்பெறுகிறது. அச்செயல் கண்ணப்பர் பக்தி நிலைக்குக் கூறப்பெறினும் பொதுவாக இறையடியார்களும் இறைவனைப் பற்றி விடாத பற்றொடு பற்ற வேண்டும் என்பது உணர்த்தப் பெறுகிறது.

"நற்கொள்கையைக் கடைப்பிடிக்கும் போது, உடும்பையும் முதலையையும் போல விடாப்பிடியாக இருத்தல் நல்லது"[85] என்னும் கருத்தும் மேற்கருத்தை வலியுறுத்துகின்றது.

2.2 2.3 புளியம்பழம்

மாணிக்கவாசகர் பாடல்களில் பக்திநிலையைப் புளியம் பழத்தின் இயல்பு ஓரிடத்தில் காட்டுகிறது.

> "அளிபுண் கைத்துப் புறந்தோல் மூடி.
> யடியே ஒடையாக்கை
> புளியம் பழமொத் திருந்தேன்"[86]

என்பது அவர் குறிப்பு. உடல்பற்றின்றி இருக்குந் தன்மைக்கு இது காட்டப்பெற்றுள்ளது. பிறபழங்களுக்கு இல்லாத

இயல்பு புளியம்பழத்திற்கு இருக்கிறது. பிறபழங்களில் தோலும் சதையும் ஒன்றோடு ஒன்று இணைந்து காணப் பெறுகின்றன. புளியம்பழத்திலோ ஓடும் சதையும் ஒன்றை ஒன்று தொடாமலிருக்கும். ஓடு அதனொடு ஒட்டிக் கொள்ளாமல் இருக்கும். அதுபோல இறையடியவர்கள் உடல்பற்றற்றிருத்தல் வேண்டும். புளியம்பழத்தில் ஓடும் பழமும் இருந்தாலும் ஒன்றையொன்று ஒட்டாதமைதல் போல உடலில் புலன்கள் அமைத்திருந்தாலும் அவற்றின் தொடர்பு [பற்று அற்று] அற்று இருக்க வேண்டும் என்பது இங்கு உணர்த்தப்பெறுகிறது நாவுக்கரசர் தன் நிலைக்கு இதைக் கூறினும் யாவருக்கும் பொருந்துவதே.

உடலில் புலன்களின் பற்றற்று இருக்க வேண்டும் என்று அடியார் பக்தி நிலையை உடன்பாட்டு வகையால் புளியம்பழம் உவமை மூலம் உணர்த்தி நிற்கிறது.

2 2.2.4 பசுமரத்தாணி

பசுமரத்தாணி போல பக்திகொண்டு இறையருளைப் பிரியாதிருக்க வேண்டும். இக்கருத்து மாணிக்கவாசகர் பாடலில் காணப்பெறுகிறது.

> "பசுமரத் தாணி யறைந்தாற் போல
> கசிவது பெருகிக் கடலென மறுகி"[87]

என்பதது.

நன்கு காய்ந்த மரத்தில் அல்லது வற்றல் மரத்தில் ஆணியடித்தால் உடனே ஆணி உள் செல்லாது. மேலும் ஆணியைப் பிரித்தெடுக்கவும் இயலும். பச்சை மரத்தில் ஆணி அடித்தால் உடனே உள்சென்று விடும். திரும்ப ஆணியைப் பிடுங்குதல் எளிதன்று. இறைவனுடைய அருளை–இறைவனை நெஞ்சில் பசுமரத்தாணி போலப் பதிய வைத்துக் கொள்ள வேண்டும். இறைவனை நன்கு மனத்தின் ஆழப்பகுதி வரையில் வேறொரு நினைவில்லாது பதிய

வைத்துக் கொள்ள வேண்டும். அவ்வாறு பதிய வைப்பதன் மூலம் இறைவனைப் பிரிய வேண்டிய அவசியமில்லை. இறைவனும் பிரியான். இக்கருத்தைப் பசுமரத்தாணி உணர்த்தி நிற்கிறது.

இக்கருத்து உவமைமூலம் இறையடியார்கள் இறைவனடி இப்படிப்பற்றுக என்று உடன்பாட்டு வகையால் உணர்த்தப் பெறுகிறது.

2 2 2.5 **ஊராமிலைக்கக் குருட்டா மிலைத்தல்**

இது ஒருவகை பக்திநிலையைக் குறிப்பது இக்கருத்தும் மாணிக்கவாசகர் பாடலில் காணப்பெறுகிறது. நல்லஊர்ப்பசு தன் கன்றைப் பார்த்தோ தன் உணவினைப் பார்த்தோ கத்துகிறது. பக்கத்தில் இருக்கும் குருட்டுப் பசுவொன்று ஊர்ப்பசு கத்துவதைக் கண்டு தானும் கத்துகிறது. ஊர்ப்பசு ஏதோ ஒன்றைப் பார்த்துக் கத்துகிறது. அதனுடைய கத்தல் பொருளுடையது. குருட்டுப்பசுவின் கத்தல் பொருளற்றது பக்கத்தில் உள்ள பசு கத்துகிறதே என்று கத்துவதால் அது அத்தகையது. இறையருளைக் கண்டவர் காணுகின்றவர்கள் இறைவனை நோக்கி வேண்டு கின்றனர். ஆனால் இறைவனையே அறியாத, இறையருள் பற்றிப் புரியாத பேதை மக்களின் வேண்டுதல் முன்னவர் நிலைக்கு ஒருகாலும் பொருந்தாது. நல்ல ஊர்ப்பசு இறையருள் பெற்ற அடியார். குருட்டுப்பசு ஏதுமறியா பேதை மக்கள். இரண்டாம் நிலையில் தன்னைக் காட்டு கிறார் மாணிக்கவாசகர். ஆனால் கருத்து அதுவன்று. நல்லபசு கத்தும் போது குருட்டாவும் கத்துதல் மிகவும் அதற்கு நன்மையான ஒன்றே. பொது நிலையில் அது பொருளற்றதாயினும் அறிவுறு நிலையில் தேவையான ஒன்று. தன்னுடைய இருப்பைக் குருட்டுப்பசு காட்டிக் கொண்டால் தான் தேடிய கன்றோ தனக்கிடப்பெறும் உணவோ தனக்கு கிடைக்கும். இறையனும் பெறாத

ஒன்றாயினும் தான் வேண்ட வேண்ட இறைவனையே முன்னவர்கள் போல் வணங்க இறையருள் கிடைக்கும். பொருளற்றதாய் வரும். எண்ணித் தயங்க வேண்டாம் தங்களிருப்பைக் காட்டுவதன் மூலம் தவறாது இறையருள் பெற வாய்ப்புண்டு. எனவே எந்நிலையிலும் இறைவனையே வேண்டுதல் என்ற பக்திநிலை இப்படி அமைய வேண்டும் என்பது உணர்த்தப்பெறுகிறது.

"ஊரா மிலைக்கக் குருட்டா மிலைத்திங்
குன்றா ளிணை யன்புக்கு"[88]

என்னும் மாணிக்கவாசகரின் பாடலடி அதை உணர்த்துகிறது.

### 2.2.2.6 இனத்திடைப் பிரிந்த செங்கண் ஏறு

சேக்கிழார் இவ்வுவமை மூலம் இறைபக்தி இவ்வாறமைய வேண்டும் என்பதை உணர்த்துகிறார். இனமாக ஆவினங்களும் ஏறுகளும் மேய்ச்சலுக்குச் செல்கின்றன. அவற்றுள் ஓர் ஏறு வழிமாறி விடுகிறது. அந்த ஏறு தன் இனத்தைத் தேடும் காட்சி இங்குக் காட்டப் பெறுகிறது. தன்னுடைய இனத்தைக் காணாமல் அவ்வேறு இங்குமங்கும் அலைபாயும். இக்குறிப்பு கண்ணப்பநாயனார் புராணத்தில் காணப் பெறுகிறது. இறைவன் கண்ணிலிருந்து வரும் குருதியை நிறுத்த மருந்துச் செடிகளைத் தேடிச் சென்று வரும் கண்ணப்பரின் நிலைக்கு இது காட்டப் பெறுகிறது. இறைவனை சிறிதளவு நேரம் நினைய மறந்தாலும் மனதில் அவனை உடனே நினைவில் கொணர்ந்து நிறுத்தல் வேண்டும் எப்போதும். அவனை நினைத்தல் வேண்டும். சிறிதும் அவனைத் தேடும் – அவனருளைத்தேடும் வாழ்க்கையாகவே மறத்தலாகாது. அவ்வாறு அமைய வேண்டும் என்பது இதன் மூலம் உணர்த்தப் பெறுகிறது.

### 2.2.2 7 கன்று முட்டப் பால்சுரக்கும் பசு

இறைவனை வேண்ட வேண்ட இறையருள் கிடைக்கும். இறைவன் அருளுதலில் எப்போதும் தவறமாட்டான். இத்தகு குறிப்பு சுந்தரர் பாடலில் காணப் பெறுகிறது.

> **''கன்று முட்டி உண்ணச் சுரந்த**
> **காலி யாவை போல**
> **என்றும் முட்டாப்பாடும் அடியார்''**[89]

என்பது அவரின் குறிப்பு இறைவன் அருள்தரு நிலையைக் கன்றினையும் பசுவினையும் வைத்துக் கொண்டு சுந்தரர் இந்நிலையை உணர்த்தி விடுகிறார். கன்று பால் குடிப்பதற்காகத் தன் தாய்ப்பசுவின் மடியை முட்டுகிறது அதனுடைய முட்டுதலாகிய செயலால் பசுவின் மடியில் பால்சுரந்து கன்றுக்குப் கால் கிடைக்கிறது. இக்காட்சி அடியாரின் நிலைமையக் காட்டும் ஒரு அழகிய காட்சியாக அமைகிறது. இறையடியவர்கள் எப்போதும் இறைவனைப் பசுமடியை முட்டும் கன்றுபோல இடை..யறவுபடாமல் வேண்டிக் கொண்டே இருக்கிறார்கள். கன்றுக்குத் தாய்ப்பசு பாலைச் சுரந்தளிப்பது போலஞானப்பாலை இறைவனாகியதாய்ப்பசு இறையடி யார்க்குத் தவறாமல் அளிக்கிறது என்றும் முட்டாது பாடினால் இறையருள் தவறாது கிடைக்கும். ஆகவே என்றும் முட்டாமல் பாடுக என்பதை இக்காட்சி உடன்பாட்டு வகையால் உணர்த்துகிறது.

### 2 2.2.8 நாய்

திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர், சேந்தனார், பட்டினத்துப் பிள்ளையார். நம்பியாண்டார் நம்பி, சேக்கிழார் ஆகிய திருமுறையாசிரியர்கள் தம்மை நாயாகவும்,நாயினுங்கடைப்பட்டவர்களாகவும் குறிப்பிடுகின்றனர். இவர்களுள்ளும் மாணிக்கவாசகரே மிகுதியாகப்பயன்படுத்தியுள்ளார். இதை இருவகை அமைப்பில் கருத்துணர்த்து

வதாகக் கூறமுடியும். ஒருவகை அதனிடம் காணப்பெறும் நற்குணங்கள்; மற்றொருவகை அதனிடம் காணப்பெறும் தீக்குணங்கள். அவ்விரு குணங்களையும் இயற்கை கருத்துணர்த்தி நிற்பதாகக் கூறலாம்.

**நாயின் நல்லியல்புகள்**

1. தலைவனை அறிதல் 2. தலைவனின் அன்பினை ஏற்று நன்றியுடன் இருத்தல் 3. தலைவனுக்காய் வாழ்தல் என்பன. இறைவனை அறிந்த அடியவன் இறைவனருள் பெற்று நன்றிமறக்காத அடியவன் இறைத்தொண்டிலேயே ஈடுபடுத்திக் கொள்ளும் அடியவன் என்ற மூவகைக்குணங்களும் கொண்ட அடியவர்களை அது உணர்த்தி நிற்கிறது. அவ்வகையில் பக்தி நிலை இறைவனை அறியக்கூடிய அறிவும், அருள்பெற்றுப் பின் மறக்காத நினைவும், இறைத்தொண்டிலே ஈடுபடும் செயலும் கொண்ட பக்தி நிலை அமையவேண்டும். நாயின் நல்லியல்பு இந்தக்கருத்தை மக்கட்கு உணர்த்தி நிற்கின்றது.

நாயின் தீயியல் புகளாக 1. மலம் முதலிய அழுக்குகளை உண்ணல் 2. தானே கக்கியதைத்திரும்ப உண்ணல் 3. உடலுறவுகளில் மிகுந்த ஈடுபாடு முதலியவற்றைக் குறிப்பிடலாம். இதுவன்றியும் தன்னை வளர்ப்பவனின் இயல்பு அறியாமை [நன்மை, தீமை அறியாதன] நாய் தன்னை வளர்ப்பவன் திருடனாயிருந்தாலும் அவனிடத்தில் நட்புணர்வும் நன்றி பாராட்டுதலும் காட்டும். இத்தகைய தீக்குணங்கள் இருப்பதாக குறிப்பிடுகிறார். இவை உலகியலைக் காட்டுவனவே.

2 2.2.9 **மதி முன் மின்மினி**

இறைவனை வழிபடும் அடியவர்கள் அடக்கம் உடையவர்களாக இருக்க வேண்டும் அடக்கம் மனிதனின் முக்கிய இயல்புகளுள் ஒன்று "அடக்கம் அமரருள் உய்க்கும்"

122 என்று வள்ளுவர் இவ்வியல்பின் இன்றியமையாமையை உணர்த்துகிறார். சேரமான் பெருமாள் நாயனார் இறைவன் புகழ்களனைத்தும் தன்னிலைக்கு அடக்கமாகக் குறிப்பிடும் கருத்து இது.

**"இருளா சறஎழில் மாமதி தோன்றவும் ஏன்றதென்ன**
**வெருளா தெதிர்சென்று மின்மினி தானும் விரிகின்றதே"[90]**

என்ற குறிப்பு அது. இறவனைத்தேவர்கள் யாவரும் ஒரு புறம் நின்று வணங்குகிறார்கள். அத்தகைய தேவர்கள் வணங்கிப் புகழும் இறவனைச் - சேரமான் பெருமாள் நாயனாரும் புகழ்கிறார். அந்நிலைக்கு மாமதி தோன்றவும் அதன் எதிரே மின்மினி தோன்றுதலை ஒத்தது என்று குறிப்பிடுகிறார். சேரமான் பெருமாள் நாயனார் பக்திநிலை உண்மையிலேயே மின்மினியை ஒத்ததன்று. அடியவர்கள் தம்மை மிகவும் இழித்துக்கூறித் தன்னடக்க நிலையில் நிற்றல் என்பது மரபு. அவ்வகையிலே தன்னிலையை அவ்வாறு அடக்கமாகக் கூறுகிறார். இக்குறிப்பு இறையை வணங்கும் அடியார்கள் யாவரும் தன்முனைப்பிலிருந்து விலகி, அடக்கத்தொடு இருக்கவேண்டும் என்பதை உடன் பாட்டு வகையால் உவமைமூலம் இயற்கை உணர்த்துகிறது,

இவ்வகையிலமைந்ததே சேக்கிழார் கூற்றும், திருத்தொண்டர்களின் வரலாறு கூறும் தன்செயலைக் கடலை நிதம் நக்கிக் குடிக்கும் நாயொடு ஒப்பிட்டுக் காட்டுகிறார். திருத்தொண்டர் பெருமை என்பது மிகவிரிவான கடல் வெள்ளம் போன்றது. அதை முழுமையாகக் கூறுதல் இயலாது. அத்திருத்தொண்டர் பெருமையைத் தான் கூறுவது மிகவும் குறைவே. கடல்போல வெள்ளம் வந்தாலும் நாயின் இயல்பு நக்கித்தானே குடிக்கும்; குடிக்கமுடியும். எல்லாவற்றையும் பருகல் இயலாத ஒன்று. அத்தகையதே தன்னுடைய செயல் என்று குறிப்பிடுகிறார்.

"தெரிவ ரும்பெரு மைத்திருத் தொண்டர்தம்
பொருவ ருஞ்சீர் புகலலுற் றேன்மற்றப்
பெருகு தெண்டகடல் ஊற்றுண் பெருநசை
ஒருசு ணங்கினை ஒக்கும் தகைமையேன்"[91]

இக்கருத்தும் முன்கூறியதுபோல் அடக்கத்தொடு இருக்கவேண்டும் என்ற கருத்தையே உணர்த்தி நிற்கிறது.

2.2.2 10 **நீரின் தன்மையும் பக்தி நிலையும்**

இவையும் திருமுறையாசிரியர்கள் தன்னிலையைக் குறிப்பனவாக வருவனவே. அவர்களின் அப்பக்தி நிலைகள் தான் அருள்பெற, அருள்பெற்ற ஏக்கத்தில் மகிழ்ச்சியில் பாடினாலும் மக்களிடத்திலும் அவை காணப்பெற வேண்டும் என்பதற்கே அவர் பாடல்களுள் உணர்த்தப் பெறுவதாகக் கொள்ளலாம். புலனின்பங்கள். உலகியலின்பங்கள் அழிவன என்பதைத் தன்னில் வைத்து அவ்வடியார்கள் குறிப்பிடுவதும் அத்தகையதே. அவர்களுடைய வரலாற்றை நோக்குகையில். அவர்கள் அத்தகையவராகக் காணப்பெற்றிலர். ஆயினும் அவர்கள் தம்நூலில் அத்தகைய குறிப்புகளைத் தருதல் பொதுநலங்கருதியே ஆகும். அவற்றின் கொடுமையை, இயல்பைத் தன்மேல் ஏற்றிக்கூறுவதால் உலகமக்கள் உணர்ந்து பின்பற்றாமல் விலகிச் செல்லட்டும் என்பது கருதியாகும். பக்தி நிலைகளைப் பாடலில் வடிப்பதும் அத்தகையதே. நான் பெற்ற இன்பம் பெறுகவிவ்வையகம் என்னும் பொதுநலக் குறிக்கோளையே காட்டுகிறது. தான் இன்பம் பெற்ற நிலைகளை உணர்ந்து மக்களும் பின்பற்றிப் பெறட்டும் என்பதே அவர்களின் குறிக்கோள். ஆகவே அவர்களின் பக்திநிலைகள் கருத்துணர்தலில் பொருத்திக் காட்டப் பெற்றுள்ளது.

இங்கு அலைகடல் திரையும் உவாக்கடல் நீரும், பள்ளத்தாழுபுனலும் அணையை விட்டுவரு நீரும் இறை பக்தி நிலையை உணர்த்துகின்றன.

### 2.2.2.10.1 அலைகடல் திரை

மாணிக்கவாசகர் இப்பக்திநிலையைக் குறிப்பிடுகிறார்.

"அலைகடற் றிரையி னார்த்தார்த் தோங்கி
தலை தடுமாறி வீழ்ந்துபுரண் டலறி"[92]

என்பது அவர்காட்டுவது. மாணிக்கவாசகர் அழுதழுது இறைவனை அடைந்தவராகையால் இத்தகைய பக்திநிலை அவரிடம் காணப் பெறுகிறது. கடலில் ஒரு அலை தோன்றுவதோடு நின்று விடுவதில்லை. மீண்டும் மீண்டும் அலைகள் தோன்றியவண்ணம் இருக்கின்றன. கடல் தன்னில் அலைகளை மீண்டும் மீண்டும் தோற்றுகிறது அவ்வலைகள் ஓங்கி உயர்ந்து தாழ்ந்து கரைகின்றன. மீண்டும் மீண்டும் இச்செயல் நடைபெறுகிறது. அலையின் செயல் நீரைக் கீழ் மேலாகப் புரட்டுகிறது. இத்தகைய நிலை பக்தி நிலையி லிருத்தல் வேண்டும். மீண்டும் மீண்டும் இறைவனையே நினைத்தல் வேண்டும். அந்த நினைவு அலைகடல் திரை போல் ஆர்த்தார்த்து ஓங்கவேண்டும். பின்னர் தன்னில் உள்ள குணங்களை நீக்கித் தன்னியல்பை இறையுடன் கலக்கவேண்டும். பின்னர்க் கடலைகள் கரையில் கரைதலைப் போல இறையருளாகிய கரையில் கரைதல் வேண்டும். இங்கு அலைகடல்திரை இறையடியவரின் அன்புநிலை [பக்தி நிலை] இவ்வாறிருக்கவேண்டும் என உணர்த்துகிறது.

### 2.2.2.10.2 உவாக்கடல் நீர்

முன்னர்ச்சாதாரண நாளில் அலைகடல் காட்டப் பெற்றது. இப்போது உவாக்கடல் நீர்காட்டப் பெறுகிறது. முழுமதி நாளன்று கடலலையின் உயரம் மிகவும் அதிகமாக இருக்கும். பிறநாட்களினும் அலையின் மிகுந்த உயரத்தையும் மிகுந்த வேகத்தையும் முழுமதி நாளன்று கடலில் காண முடியும். ஆர்த்தார்த்தோங்கும் ஒரு நிலையின் அடுத்த வளர்ச்சியை இதுகாட்டுகிறது. மனமுழுவதுமாக இறை பக்தி நின்று மேல் நோக்கியே இருக்கவேண்டும். எந்த

அளவுக்கு இறைவனையே மீண்டும் மீண்டும் நினைக்க வேண்டும் என்பதற்கு உச்சநிலையையும் இங்குக் காட்டப் பெறுகிறது. உள்ளத்தில் பக்தி வெள்ளம் பொங்கிவழிய வேண்டும் என்பதே இங்குணர்த்தப் பெறுகிறது. "உவாக்கட னள்ளுநீ ருள்ளகந் ததும்ப" என்பது அவற்றுள் ஒன்று.[93]

"பள்ளந்தா முறுபுனலிற் கீழ்மே லாகப்
பதைத்துருகு மவர்நிற்க"[94]

என்பது மேற்காட்டிய கருத்தை உணர்த்தும் மாணிக்கவாசகர் குறிப்பு.

2.2.2.10.3 பள்ளந்தாழுறுபுனல்

இத்தகு பக்திநிலை திருநாவுக்கரசர், மாணிக்கவாசகர், சேக்கிழார் ஆகியோர் பாடல்களில் காணப் பெறுகிறது. கடலில் கடலலைகள் இயல்பாகத் தோன்றினும் அவற்றைத் தோற்றுவது காற்றே ஆகும். பிறமுயற்சியும் இங்குக் காட்டப்பெறுகிறது. பள்ளந்தாழ்தல், வேகமாகக் கீழிறங்கி வருதல் நீரின் இயல்பு. தன்னுள் காணப்பெறும் இயல்பே இது. பள்ளத்தை நோக்கிவரும் புனல் மிகவேகமாகக் கீழிறங்கும். தன்வழியில் காணப்பெறும் தடைகளையும் நீங்கிவரும் இயல்புடையது அது. அவ்வாறு மனதிலே பக்தியாகிய வெள்ளம், பள்ளம் நோக்கிப் பாயும் நீர்போல இறையை நோக்கிப் பாய வேண்டும் என்பது இங்கு உணர்த்தப்பெறுகிறது. பள்ளந்தாழுறு புனலாய் பக்தி அமையுமேயானால் எதிரிடு உலகியல் இன்பங்கள், புலனின் பங்கள் ஆகியவற்றிலிருந்து விலகி இறையருள் பெற முடியும் மனிதன் என்பது இதன்மூலம் உணர்த்தப் பெறுகிறது. மேற்காட்டிய கருத்தை உணர்த்தும் பாடல் பகுதியில் ஒன்றாகும்.

4. அணையை விட்ட புனல்

இது சேக்கிழாரால் காட்டப்பெறும் பக்தி நிலையாகும். சுந்தரர் பக்திநிலைக்கு இது காட்டப்பெறுகிறது.

"அணையை விட்ட
உரவுநீர் வெள்ளம்போல் ஓங்கிய களிப்பிற் சென்றார்"[95]

என்பது சுந்தரரின் இறையன்பைக் குறிப்பிடும் சேக்கிழாரின் குறிப்பு. அணையில் தடுத்த நிறுத்தப்பெற்ற வேகமாக வந்தபுனல், அணையைத்திறக்கும் போது மிக வேகமாகப் பாயும். எதிர்வருவனவற்றையெல்லாம் இழுத்துச் சென்று விடும். அணையை விட்ட புனலின் வேகம் இங்கு முக்கிய மாகக் கொள்ளத்தக்கது.

மனிதனுடைய தொடர்ந்த ஒரே நோக்கோடு அமைந்த பக்திவெள்ளம் அணைவிட்ட நீராய்ப் பாயுமானால் உலகியல் இன்பங்கள் புலனின்பங்கள் யாவும் அப்பக்தி வெள்ளத்தால் தூக்கியெறியப்பட்டு அழிந்து விடும். முன்னர் பள்ளந்தாமுறுபுனல் அவற்றை விட்டு விலகும். இங்கு அவற்றையே அழித்துவிடும் நிலை இவ்வணையை விட்ட புனல் உணர்த்துகிறது. இத்தகைய பக்தி அடியவர் களிடத்து அமைய வேண்டும் என்பது அவரால் உணர்த்தப் பெறுகிறது. ஒரே நோக்கொடு விளங்கும் பக்தி நிலையின் அடுத்த வளர்ச்சியைக் காட்டுகிறது.

### 2.2.2.11 ஆவினங்களும் பக்திநிலையும்

பக்தி நிலைகளை நீரின் தன்மையைக் கொண்டு திருமுறையாசிரியர்கள் நிலையாகக் காட்டியது போலவே ஆவினங்களையும் கன்றுகளையும் காட்டிப் பக்தி நிலை பலவிடங்களில் உணர்த்தப்பெறுகிறது. மாணிக்கவாசகர் பாடல்களில் இரண்டங்களிலும் வேணாட்டிகள் பாடல் களில் ஓரிடத்தும் நக்கீரதேவ நாயனார் பாடல்களில் ஓரிடத்தும் பட்டினத்துப்பிள்ளையார் பாடல்களில் ஓரிடத்தும் சேக்கிழார் பாடல்களில் இரண்டிடங்களிலும் இக்கருத்துக்கள் காட்டப்பெறுகின்றன.

### 2.2.2.11.1 கறவை நினைந்த கன்று

பசு கன்றீன்று சிலநாட்களே ஆகின்றன. பசுமேய்ச் சலுக்கு அழைத்துச் செல்லப்படுகிறது. பசுவைக் காணாமையால் கன்றும், கன்று தன்னுடன் இல்லாமை யால் பசுவும் கத்திக்கொண்டிருக்கும். பசுகன்றினையும் கன்று பசுவையும் எப்போதும் நினைத்துக்கொண்டிருக்கும். அடியவர்களும் கன்றாக வேண்டும். அதுவும் ஈன்றணிமைக் கன்றாகவேண்டும். எப்போதும் இறைவனாகிய பசுவை நினைத்துக் கொண்டேயிருக்கவேண்டும். பிறநினைவுகளற்ற இறைவனையே நினைத்துக்கொண்டிருக்க வேண்டும். இறைவனை மறவாமனம் இங்கு முக்கியமாகக் காட்டப் பெறுகிறது.

> **"கறவை நினைந்த கன்றென இறங்கி**
> **மறவா மனத்து மாசறும் அடியார்"[96]**

என்பது அக்கருத்தை உணர்த்தும் பாடலடிகள். இக்கருத்து பட்டினத்துப்பிள்ளையாரால் காட்டப்பெறுகிறது. பக்தி நிலையின் முதல் படியைக் கன்றின், பசுவின் மறவாமனம் உணர்த்தி நிற்கிறது.

### 2.2.2.11.2 ஆன்கனைப்பு கேட்ட கன்று

இதைப்பக்தி நிலையின் அடுத்தப்படியாகக் கொள்ள வேண்டும். முன்பு கறவை நினைந்த கன்று காட்டப் பெற்றது. அங்குக் கறவை மேய்ச்சல் பொருட்டு வெளியே உள்ளது. இங்குக்கன்றை நினைந்து தீம்பால் பலிற்றும் மடியொடு வரும் பசு காட்டப்பெறுகிறது.

> **"என்றெழும் ஓசைகேளா ஈன்றஆன் கனைப்புக்கேட்ட**
> **கன்றுபோல் கதறி' [97]**

என்ற பாடல் பகுதி அக்காட்சியைக் காட்டுகிறது. சேக் கிழார் தடுத்தாட் கொள்ளப்பெறும் சுந்தரரை இவ்வகை யால் பொருத்திக் காட்டுகிறார்.

பால்சுரந்த மடியொடு கன்றினை நோக்கிக் குரல் கொடுத்துக் கொண்டே பசு வருகின்றது. பசுவின் குரல் கேட்டு கன்றும் எதிர்க்குரல் கொடுக்கிறது. கன்றின் மனம் முன்னினும் ஆர்வத்தால் பொங்குகிறது. கனைப்பு கேட்ட கன்றாக அடியவர்கள் விளங்கவேண்டும். இறைவனை நோக்கியே அருள்புலப்பாட்டிற்கு ஏங்கி நிற்கவேண்டும். அருள் புலப்படுதல் ஏதேனும் ஒரு குறிப்பால் தெரியவரின் ஆன்கனைப்புக்கேட்ட கன்றாக மக்கள் ஆகிவிடவேண்டும். இதன்மூலம் இறைவன் அருள் புலப்படும்வரையில் அதே கொள்கையாக இருந்து, புலப்படும் வாய்ப்பு வரும் வரையில் தன்னார்வத்தால் பற்றுதலில் விழிப்பாக இருக்கவேண்டும் என்ற கருத்து உணர்த்தப்பெறுகிறது. இது உடன்பாட்டு வகை.

### 2.2 2.11.3 தாய்க்கண் கன்று

தாயை நினைத்த கன்று, தாயின் கனைப்பு கேட்ட கன்று என்னும் அவற்றிற்கு அடுத்த நிலையில் இது அமைகிறது. பக்தி நிலையில் மூன்றாம் படிமுறைவளர்ச்சியாக இதைக்கொள்ளலாம். தன் குரலால் தன்வருகையைக் காட்டிக்கொண்டே வந்த தாய்ப்பசு, இப்போது கன்றை அடைகிறது. அப்போது கன்றுக்குத் தன்தாயைக் கண்ட மகிழ்ச்சியும் தனக்குப் பால்கிடைக்கும் மகிழ்ச்சியும் உண்டாகிறது. தாயும் தன்கன்றைக் கண்டமகிழ்வால் நக்கிக் கொடுக்கும்; பால்சுரந்தூட்டும். கன்று ஆர்வத்தொடு பாலைக்குடிக்கும்.

இறையைத் தேடி இறையருளிலேயே கவனம் செலுத்தி, இறையருள் கிடைக்கும் போது அந்த ஞானமாகிய பாலை ஆர்வத்தோடு பருகவேண்டும். இறையருள் கிடைக்கும் போது அதில் தன்னை அழுத்திக்கொள்ளவேண்டும் என்று இதன் மூலம் உணர்த்தப்பெறுகிறது. கண்ணப்ப நயனார்

வரலாற்றைக் கூறும் நக்கீரதேவ நாயனார் அவரின் இறையன்பை இவ்வுவமை மூலம் உணர்த்துகிறார்.

**''தாய்க்கண் கன்றெனச் சென்று கண்டல்லது**
**வாய்க்கிடும் உண்டி வழக்கறியானே''[98]**

என்பது அவர்காட்டுவது. இதுவும் உடன்பாட்டு வகையான் உணர்த்தப் பெறுவதே ஆகும்.

## 2.2.2.11.4 ஆவினைக் கன்று தேடியழைத்தல்

இது ஒருநிலை. ஆவும் கன்றும் ஆகிய இரண்டும் மேய்ச்சலுக்குச் செல்கின்றன. அப்போது இளங்கன்று பயமறியாத நிலையால் பலவிடங்களுக்கும் துள்ளி ஓடுகிறது. அப்போது வழிதவறிச் சென்றுவிடுகிறது. தாயைக்காணாமல் தவித்துக் குரல் கொடுக்கிறது. அப்போது தாயைத்தேடி யழைக்கும் குரல் இங்குக் காட்டப்பெற்றுவதாகும். முன்பு காட்டப்பெற்றவற்றினும் இது வேறுபட்டது. முன்பு காட்டப்பெற்றது பசுவைக்காணாத நிலை. இப்போது காட்டப்பெறுவது பசுவைத்தவறவிட்டுத் தேடியழைக்கும் நிலை.

**''ஆன்கன்று தேடி யழைக்கும் மதுபோல்**
**நான்கன்றாய் நாடியழைத்தேன்''[99]**

என்பது திருமூலரால் காட்டப்பெறுவது. இறையருள் பெற்றவன் அதிலேயே கவனம் செலுத்தாமல் உலகியல் இன்பங்கள் புலனின்பங்களில் ஈர்க்கப்பட்டுச் சிலகாலம் இறையருளின் நீங்கி, அதை உணர்ந்த நிலையில் இது உணர்த்துகிறது, இறையருள் பெற்றவன் அதை விட்டு விட்டு வேறொன்றில் கவனம் செலுத்தினால் தாயைப் பிரிந்த, வழிதெரியாத கன்றாகவே ஆவான். ஆகவே எப்போதும் இறையருளிலேயே தன் முழுகவனத்தையும் செலுத்த வேண்டும் என்பது உணர்த்தப்பெறுகிறது. இக்கருத்து எதிர்மறை வகையால் அவ்வாறிருத்தலாகாது

என்பதுணர்த்தி நிற்கிறது. இங்கு இறைருளை விட்ட பின்னும் ஆன்கன்று தேடியழைக்கு மதுபோல் மீண்டும் இறையருளைத்தேடி அலையவேண்டும் என்று உடன்பாட்டு வகையாலும் இது உணர்த்துவதாகக் கொள்ளலாகும்.

### 2.2.2.11.5 கன்றுபிரி கற்றாவின் கதறல்

முன்பு கன்றை வைத்துச்சொல்லப்பெற்ற கருத்து, இங்குப் பசுவை வைத்துச் சொல்லப் பெறுகிறது; உணர்த்தப் பெறுகிறது, இது வேணாட்டிகள் பாடல்களில் ஓரிடத்தும் சேக்கிழார் பாடல்களில் ஓரிடத்தும் மாணிக்கவாசகர் பாடல்களில் ஓரிடத்தும் காணப்பெறுகிறது.

**"கன்றுபிரி கற்றாப்போலக் கதறுவித்த வரவுநில்லாய்"[100]**
**"கற்றா மனமெனக் கதறியும் பதறியும்"[101]**
**"மற்றோர் தெய்வங் கனவிலும் நினையாது**
**"கன்றகல் புனிற்றாய் போல்வார்"[102]**

என்பன அவை. பசுவைப்பிரிந்த கன்று எவ்வாறு பசுவைத் தேடுகிறதோ அவ்வாறே கன்றைப்பிரிந்து பசுவும் கன்றைத் தேடும் இங்குமங்கும் அலையும் இறைவனைத் தேடியலையும் மனதுடைய அடியவரின் பக்தி நிலையை இது உணர்த்து கிறது இக்குறிப்பால் இறைவன் அருள் நிலைஉறுதி என்பது ரைக்கப் பெற்றது. கற்றா மனமெனக்கதறுவதாலும் பதறு வதாலும் இறைவனுடைய வரவு உறுதியாக உண்டு. அதைத் தான் வேணாட்டார் வரவுநில்லாய் என்று குறிப்பிடுகிறார். பக்திநிலையின் விடாத பற்றினால் இறைவன் தவறாது வந்தருள்வான் என்பதும் இங்கும் உணர்த்தப் பெறுகிறது. இறைவன் கன்றை நினைத்தெழு தாயென வருவான் என்று மாணிக்க வாசகர் குறிப்பிடுகிறார். இறைவனையே நினைத்துக்கதறியும் பதறியும் அவனருளுக்கு ஏங்கி நிற்கும் பக்தி நிலை இருக்கவேண்டும் என்பது உடன்பாட்டு வகையால் இங்கு உணர்த்தப்பெறுகிறது.

### 2.2.2.12 பக்திநிலை இப்படி இருக்கக்கூடாது என்பதை உணர்த்தல்

பக்தி நிலை இவ்வாறிருக்க வேண்டும் என்று இயற்கை மூலம் உணர்த்தப்பெற்ற குறிப்புகள் திருமுறையில் காணப் பெறுதல் போலவே, இவ்வகையில் பக்திநிலை இருக்கக் கூடாது என்பது உணர்த்தப்பெறும் குறிப்புகளும் உள்ளன.

#### 2.2.2.12.1 மூங்கிற்சிந்தை

பக்தியுடையவன் மனது மெழுகுபோல உருகவேண்டும் பக்தி வெள்ளம் மனதில் கடல் போல பெருகவேண்டும். தன்னுடைய மனம் மூங்கிலைப் போன்றது என்று குறிப் பிடுவதால் அத்தகைய மனநிலை நீக்கப்பெறல் வேண்டும் என்பது இங்கு உணர்த்தப் பெறுகிறது.

**"திணியார் மூங்கிற் சிந்தையேன்"**[103]

என்பது மாணிக்கவாசகரின் குறிப்பு.

மூங்கில் மிக உயரமாக நேராக வளர்வது. வளைந்தாலும் மூங்கிலை வளைக்கமுடியாது. பக்தியுள்ளவன் மனம் மூங்கில் போல வளையாத ஒன்றாக இருக்கக்கூடாது. ஒரே வகையான வளையாத மனம் இருப்பின் இறையருளைப் பெறல் அரிது. மேலும் மூங்கில் உள்ளீடற்றது. நன்கு முற்றிய வயிரம் பாய்ந்த மூங்கிலாயினும் உள்ளீடற்ற தாகவே விளங்குவது இயல்பு அதுபோல மனம் இறை யருளையே நினைக்காத வெற்றுமனமாக இருத்தலாகாது மனத்தில் பக்தி. இறை நினைவு எப்போதும் நிலைத்து நிறைந்திருக்க வேண்டும் என்பதை எதிர்மறையால் இவ்வுவமை மூலம் மூங்கில் உணர்த்தி நிற்கிறது. மாணிக்க வாசகர் தன்னுள் இறைவன் அருள் பாயாததால் தன் மனத்தை வன்பராய் முருடெனவும். தன்கண்ணை மரம்[104] என்றும் குறிப்பிடும் இடங்கள் உள்ளன. அவையும் இக்கருத்தை உணர்த்துவனவே.

### 2.2.2.12 1 கொம்பரில்லாக்கொடி

இது உயிரின் நிலையில்லாத தன்மையைக் குறிப்பிடு கிறது. கொடி என்பது பற்றிவளரும் இயல்புடைய ஒரு வகைத்தாவரம் கொம்பாகிய பற்று இல்லாமல் கொடி செழித்து வளராது. மேலும் கொம்பில் ஏற்றப்படாவிடில் கொம்பைப் பற்றாகக் கொண்டு அது வளராவிட்டால், மனிதர்களாலும் விலங்குகளாலும் நசுங்கி கசங்கி அழிவது உறுதி. மேலும் காற்றினாலும் அலைகழிக்கப்பெறும். தன்னுடைய நிலையை, கொம்பரில்லாக் கொடி என்று மாணிக்கவாசகர் குறிப்பிடுகிறார்.

"கொம்பரில் லாக்கொடி போலலமந்தேன்"[105]

என்பது அது. கொடியாகிய உயிர் கொம்பாகிய இறையைப் பற்றி நிற்காவிட்டால் உலகியல் இன்பங்கள், புலனின் பங்களாகியவற்றல் அலைகழிக்கப் பட்டுஅழிவுறும். கொம்பரில்லாக், கொடி போலில்லாமல், பற்றாகப் பற்றற்றான் பற்றினைப் பற்றிப் படர்க என்பது எதிர்மறை வகையால் உணர்த்தப் பெறுகிறது.

### 2,2.3.0.0 இறையியல்பு உணர்த்தல்

இறைவன் உலகப்படைப்பாளன்; உயிரொடு கலந்து விளங்குகின்றான், மலங்களையும், வினைகளையும் நீக்குபவன் ஆகிய செயல்களை இயற்கை உணர்த்தி நிற்கிறது.

### 2.2.3.1 இறைவன் உலகப் படைப்பாளன்

பட்டினத்துப்பிள்ளையார் பாடல்களில் இக்கருத்து இயற்கைப் பொருளால் இரண்டிடங்களில் உணர்த்தப் பெறுகிறது. கடலின் தோற்றமும் இயல்பும் இக்கருத்தை அவர்பாடல்களில் இரண்டிடங்களில் உணர்த்துகிறது. இரண்டும் கடல் உணர்த்துவனவாக உள்ளன. இரண்டில் ஒன்று விரிவாக உணர்த்துகிறது. மற்றொன்று அதே கருத்தைச் சுருக்கமாக உணர்த்துகிறது.

"நுரையும் திரையும் நொப்புறு கொட்பும்
வரையில் சகர வாரியும் கரைகடல்
பெருத்தும் சிறுத்தும் பிறங்குவ தோன்றி
எண்ணில வாகி இருங்கடல் அடங்கும்
தன்மைப் போலச் சராசரம் அனைத்தும்
நின்னிடைத் தோன்றி நின்னிடை அடங்கும்நீ
ஒன்றினும் தோன்றாய் ஒன்றினும் அடங்காய்"[106]

என்பது ஒன்று

"மன்னிய வேலையுள் வான்திரை போல
நின்னிடை எழுந்து நின்னிடை ஆகியும்
பெருகியும் சுருங்கியும் பெயர்ந்தும் தோன்றியும்
விரவியும் வேறாய் நின்றனை"[107]

என்றது மற்றொன்று.

முன்பாடலடிகள் சராசரங்களை மட்டும் குறிப்பிடு கின்றன. இரண்டாம் பாடலடிகள் சராசரங்கள் மட்டு மல்லாமல் பூ மகன் முதலான தேவர்களையும் இறைவன் படைப்பதாகக் காட்டுகின்றன.

கடலின் தோற்றம் பட்டினத்தார் பாடல்களில் இறைவன் இயற்கைப் படைப்பாளன் என்பதை உணர்த்து கிறது. கடலலை கடலில் தோன்றுகிறது; கடலிலேயே வீசுகிறது. பின்னர்க் கடலிலேயே மறைந்து போகிறது. அலையின் ஆக்கமும் பெருக்கமும் சுருக்கமும் கடலிலேயே அமைகிறது; கடலிலேயே அடங்குகின்றன. அதுபோலவே சராசரங்கள் யாவும், தேவர்கள் யாவரும் இறைவனாலேயே படைக்கப்பெற்றனர். இறைவனிடமிருந்தே தோற்றம் பெற்றன. இறைவனிடத்திலேயே அடங்கிவிடுகின்றன. இக்கருத்தைக் கடல் தன் தோற்றத்தாலும் செயலாலும் உணர்த்துகிறது.

### 2.2 3.2 இறைவன் கலந்து. கரந்துள்ளான்

இறைவன் உயிர்களோடு கலந்து. கரந்து விளங்குந்தன் மையைத் திருமுறையில் இயற்கைப் பொருள்கள் தம் தன்மைகளால் உணர்த்துகின்றன. பூவில்வாசம் பாலில் நெய், மூங்கிலில் தீ, விறகில் தீ, எள்ளில் எண்ணெய், பாலில் நீர் பழத்தில் சுவை, புனலிற் பொற்பு. சாந்தின் நாற்றம், காற்றில் ஊறு, கரும்பிற்கட்டி ஆகிய இயற்கையின் இயல்புகள் இறைவன் உயிரொடு கலந்த தன்மையை உணர்த்துகின்றன. பூவில்வாசம் கலந்துள்ளது. அதன் வாசம் பூவிலிருந்து பிரிக்கமுடியாதது. பாலில் நெய் மறைந்து விளங்குகின்றது. விறகில் தீயும் கரந்து விளங்குகின்றது. பழத்தில் சுவை கலந்து விளங்குகின்றது. புனலிற் பொற்பும் சாந்தின் நாற்றமும் காற்றில் ஊறும் கலந்து விளங்குகின்றன. கரும்பிற் பட்டி கலந்து, கரந்து விளங்குகின்றது. இவ்வாறு அவற்றில் உள்ள தன்மையை இல்லையென்று கூறமுடியாது. அவ்வியல்புகள் யாவும் கரந்து விளங்குகின்றன. இவ்வியற்கையின் இயல்புகளை ஏற்றுக்கொண்டவர்கள் இறையின் இயல்புகளுள் ஒன்றாகிய உயிர்களில் கலந்து, கரந்து விளங்கும் தன்மையை ஏற்றுக்கொள்வதில் தயக்கம் ஏற்படாது. இவ்வியல்புகள் இறையின் அவ்வியல்லை உணர்த்துகின்றன.

இறைவன் உயிர்களிற் கலந்து விளங்குகையில் உயிரின் இயல்பொடும் கலந்துவிடுவானோ என்ற ஐயம் எழுவது இயல்பு அவன் உயிர்களில் கலந்து விளங்கினாலும் உயிரின் இயல்புகள் அவனைச் சென்றணுகா அவன் தன்னியல் பிலிருந்து மாறாதவன் இக்கருத்தையும் தெளிவாக இயற்கைக் காட்சியொன்று விளக்கி விடுகிறது. வானின் வழியாக மேகங்கள், காற்று, மழை, முதலியன செல்கின்றன. அவற்றின் இயக்கத்தால் வான் மாசுறுவதில்லை. தன் தன்மையிற் திரிவதில்லை. இக்காட்சியே உயிரில் கலந்து

இருந்தாலும் இறைவனை உயிரியல்பு சென்றணுகா என்பதை உணர்த்தி நிற்கிறது.

### 2.2 3.3 வினைகளைக் கெடுப்பவன்

இறைவன் உயிர்களின் வினைகளை அறுப்பவன் ஆவான். உயிர்களின் வினையை உயிர்களே நீக்கிக் கொள்ள இயலாது உயிர்க்குயிராய் விளங்கும் இறைவனாலேயே நீக்கமுடியும். இக்கருத்து திருநாவுக்கரசர் பாடல்களில் ஓரிடத்தில் இயற்கைக் காட்சியால் தெளிவாக உணர்த்தப் பெற்றுள்ளது.

> ''பற்பல காலம் பயிற்றிப் பரமனைச்
> சொற்பல் காலநின் றேத்துமின் தொல்வினை
> வெற்பின் தோன்றிய வெங்கதிர் கண்டவப்
> புற்ப னிக்கெடு மாறது போலுமே''[108]

என்பதது.

முன்பு வாழ்க்கை நிலையாமை உணர்த்திய அதே காட்சி இங்கு இறைவன் வினைநீக்கலையும் உணர்த்துகிறது. கதிரவன் தோற்றத்திற்கு முன் புல்நுனியில் பனி தங்கியிருந்தது. ஆனால் அது கதிரவன் ஒளியைக் கண்டவுடன் புல்நுனியிலிந்த பனித்துளி மறைந்துவிடுகிறது. உயிரில் ஒட்டியிருக்கும் வினையின் இயல்பு இத்தகையதே. இறைவனைக் கண்டவுடன் புல்நுனிப்பனி மறைவதுபோல வினைகள் யாவும் அவனை விட்டுநீங்கிவிடும். இக்காட்சி இறைவன் வினைநீக்கும் செயல் இன்னும் நுட்பமாக இறைவனைக் கண்டவளவிலேயே அவை நீங்கிவிடும் என்று உணர்த்துகிறது. வினையை நீக்குதல் என்பது இறைவனுக்கு ஒரு பெரிய செயலன்று அவனைக் கண்டவளவிலேயே அவை நீங்கிவிடுகின்றன. இங்கும் இயற்கையே அக்கருத்தை உண

### 2.2.3.4 இறைவன் மலம் நீக்குபவன்

சைவசமயத்தில் ஆணவம், கன்மம், மாயை, என்னும் மும்மலங்கள் உயிர்க்குள்ளதாகச் சொல்லப்பெற்றுள்ளன. இம்மூன்று மலங்களும் இறைவனை உயிர் அடையாதவாறு தடைசெய்வன. ஆகையால்தான் இவற்றைக் கட்டு என்றும் பாசம் என்றும் குறிப்பிடுகின்றன. சைவ நூல்கள் இத்தகைய மலங்களை நீக்குதற்கும் உயிரால் இயலாது. இறைவனே இவற்றை நீக்குபவன் இதை,

**"ஆமேவு பால்நீர் பிரிக்கின்ற அன்னம்போல்"[109]**

என்ற திருமூலர் பாடல்தொடர் விளக்குகிறது. அன்னத்திற்கே உள்ளது இவ்வியல்பு. பாலிலிருந்து நீரைப் பிரிக்கும் இயல்பைப் பெற்றது அன்னம் அவ்வன்னம்போல் உயிர்களிலிருந்து மலம் நீக்குபவன் இறைவன் ஆவான். மலத்தை நீக்குதல் இறைவனுக்கு இயல்பான ஒன்று. அதற்கென்று தனியாக இறைவன் எச்செயலும் செய்ய வேண்டுவதில்லை. என்ற உட்பொருளையும் அன்னத்தின் இயல்பு தெளிவாக, நுணுக்கமாக உணர்த்துகிறது.

### 2 2.3.5 இறைவன் – தானே வந்தருள்வான்

இறைவன் உயிர்களுக்கு அருளும் வகை இரண்டாகக் கூறப்பெறுவதுண்டு. ஒன்று இறைவன் உயிர்களைத் தன்னை நோக்கி அழைத்துக்கொள்ளல் என்பது. மற்றது இறைவன் உயிர்களின் பொருட்டு தானே கீழிறங்கிவருதல் என்பது. இங்கு இரண்டாவது நிலை இயற்கை மூலம் உணர்த்தப்பெறுகிறது. "தானே வந்தென் கரதலத்தமர்ந்த சிகாமணியே"[110] என்று சிவப்பிரகாச சுவாமிகள் குறிப்பிடுவதும் இந்நிலையையே ஆகும். இத்தகு குறிப்பை மாணிக்கவாசகர் பாடல்களில் ஓரிடத்தில் காணப்பெறுகிறது.

**"கன்றை நினைந்தெழு தாயென**
**வந்த கணக்கது வாகாதே"[111]**

என்பது, பசுவானது தன் கன்றை நினைத்து ஓடிவருகின்ற செயல் இங்கு அக்கருத்தை உணர்த்துகிறது. உயிரின் முயற்சியில்லாமலே இறைவனே உயிர்க்கு அருளுவதற்காக வருதலைக் கன்றை நோக்கி வரும்பசு உணர்த்துகிறது.

### 2.2.4 0 உயிரியல்பு – உணர்த்தல்

உயிரின் இயல்பாகிய உயிர் செய்த வினையை உயிரே துய்க்கவேண்டும். புலனின்பங்களிலும் உலகியல் இன்பங் களிலும் விருப்பு முதலியன இயற்கை மூலம் உணர்த்தப் பெறுகின்றன.

### 2.2.4 1 உயிரே வினையைத் தூய்க்கவேண்டும்

உயிர் தான் செய்த வினையின் விளைவைத் தானே துய்க்கவேண்டும். ஒரு உயிரின் வினையப் பிற உயிரோ பிறவோ அனுபவிக்காது இக்கருத்து ஆறு அடித்துவரும் மணல் தெளிவாக உணர்த்துகிறது. இக்கருத்து திருமூலரால் இயற்கை மூலம் ஓரிடத்தில் உணர்த்தப்பெறுகிறது.

> **“ஆறிட்ட நுண்மணல் ஆறே சுமவாதே**
> **கூறிட்டுக் கொண்டு சுமந்தறி வாரில்லை”[112]**

என்பதது ஆறு மணலை அடித்து வந்து ஓரிடத்தில் மேட்டடை, மேட்டுப்பகுதி திட்டு உண்டாக்கி விடுகிறது. ஆறு அதைச் சுமந்து வராமல் பிறிதொன்று அதைச் சுமந்து வரவில்லை. நுண்மணல் ஆற்றினாலேயே சுமந்து வரப் பெற்று திட்டாக்கியது. இக்கருத்து உயிர்கள் செய்த வினையின் பயனைத் தானே துய்க்கவேண்டும் என்பதைத் தெளிவாக உணர்த்துகிறது.

### 2.2.4.2 இறையருளில் நாட்டம் மீனினம்

குளங்களில், ஆறுகளில் உள்ள மீனினங்கள் புதுவெள்ளம் வருகையில், பழைய இந்த நீர் நிலைகளைவிட்டு புது நீர்க்குச் செல்லும் இயல்புடையன. இவ்வாறே பலவகைத்

துன்பங்களிலும் அழுந்திய உயிர் இறையருளை விரும்பிச் செல்லுதலும் இயல்பு இக்கருத்து திருமூலர் பாடலில்

**"பள்ள முதுநீர் பழகிய மீனினம்**
**வெள்ளம் புதியவை காணவிரும்பும்[113]"**

என்ற பாடலில் விளக்கப்பெறுகிறது.

2.2.4.3. புலனின்பங்களில் விருப்பம் நிற்கும் உயிரின் இயல்பை இங்கு உணர்த்துகிறது. புலனின்பங்களையும் உயிர் விரும்பும் என்பது முன்னமே கூறப்பெற்றுள்ளது. ஆமை, யானை எறும்பிடை நாங்கூழ் துண்டிலில் மீன், விட்டில் பூச்சி, கடல் சுறா. நீர்ச்சுழி, ஆற்றங்கரை மரம், பலாப்பழத்தில் ஈ. எட்டிப்பழம் முதலிய இயற்கைப் பொருள்கள் மூலம் உணர்த்தப்பெற்றன.

### 2 2 4.4 உலகியல் இன்பங்களைப் பெரிதும் விரும்பும்

உயிர் உலகியல் இன்பங்கள் துன்பம் தருவன என்பதையும் முதலில் உயிர் உணராது. அவ்வியல்பைப் பாம்பின்வாய்த்தேரை நீர்ச்சுழியும், ஈற்றுக்கரடியும் உணர்த்துகின்றன. உலகியல் இன்பங்கள் அழிவன என்னும் பகுதியில் அவை விரிவாகக் காட்டப் பெற்றுள்ளன. உயிர்கள் உலகியல் இன்பங்களில் பெரிதும் விருப்பம் கொள்வன என்பது அக்கருத்துகளிலிருந்து தெளிவாகப் பெறப்படுகிறது.

### 2.2.4.5 வினை இயல்பு

வினைகள் உயிரைச் சென்று மொய்க்கும் இயல் புடையன மீண்டும் மீண்டும் வினைகள் சேர்ந்து அதில் இங்கு மொய்த்தல் என்று குறிக்கப்பெறுகிறது. வினையின் இவ்வியல்பைக் காக்கை, திருநாவுக்கரசர் பாடல்களில் ஓரிடத்தில் உணர்த்துகிறது.

**"மோத்தையைக் கண்டகாக்கை போல வல் வினைகள்**
**மொய்த்துன் வார்த்தையைப் பேச வொட்டா".[114]**

என்பதது பிணத்தைக் கண்டவுடன் காக்கைகள் கூட்டமாகக் கூடி மொய்க்கும். காக்கைகள் கூட்டமாக மொய்த்தல் அவற்றின் இயல்பு அது போலவே உடலை - உயிரை வல்வினைகள் ஒன்றன் பின் ஒன்றாகக் குவிந்து அழுத்தும். இப்பாடல் அவ்வியல்பைக் காக்கையின் இயல்பு இங்கு உணர்த்துகிறது.

### 2.2.4.5 மலங்களின் இயல்பு:

உயிரின் மலங்கள் கன்மம், மாயை என்பன. அவை உயிரில் தோன்றி மேலும் மேலும் வளர்ந்து உயிரின் நிலையை அழிப்பன. இங்கு மேலும் மேலும் இம்மூவகை மலங்களும் உயிரை அடைதல் மாணிக்கவாசகர் பாடலில் கடல் ஓரிடத்தில் உணர்த்திவிடுகிறது.

**"கடலின்றிரை யது போல வரு கலக்கமலம்"**[115]

என்பது அவரின் குறிப்பு. கடலில் அலைகள் தோன்று கின்றன. கடலலைகள் கடலிலே இருப்பது, அதுபோன்றது ஆவணம், கடலலைகள் மேலும் மேலும் தோன்றி வந்து கொண்டிருப்பது அத்தகையதே கன்மமலம். அவை மேலும் மேலும் உயிரை வந்தடைவனவே, கடலில் அலை தோன்று வதும் மேலும் மேலும் அச்செயல் தொடர்வதும் கடலறியாது. அத்தகையதே மாயை எனும் மலம். கடல் இவ்வாறு மூவகை மலங்களின் இயல்பையும் தெளிவாக உணர்த்திவிடுகிறது.

### 2.2.5.0 இறைவழிபாட்டினை - இயற்கைப் பொருள்கள் உணர்த்தல்

திணைக்காட்சிகளில் வரும் இயற்கைப்பொருள்கள் இறை வழிபாட்டின் இன்றியமையாமையை உணர்த்துகின்ற யாவும் இவ்வகைப்பாட்டுள் அடங்கும். திருத்தல இயற்கையில் புனையப் பெற்ற இயற்கைக் காட்சிகள் மனிதர்க்கு அறிவுணர்த்து வனவாக அமைந்துள்ளன.

## 1. ஆறு வழிபடுதல்

திருஞான சம்பந்தர் பாடல்களில் இரண்டிடங்களிலும் திருநாவுக்கரசர் பாடல்களில் இரண்டிடங்களிலும் சுந்தரர் பாடல்களில் மூன்றிடங்களிலும் சேக்கிழார் பாடல்களில் ஓரிடத்தும் ஆறுகள் இறைவனை வழிபடுகின்றன. காவிரியும் மணிமுத்தாறும் இறைவனை வழிபடுவதாகக் காட்டப்பெறு கின்றன. திருமுதுகுன்றம், பாண்டிக்கொடுமுடி முதலான தலங்களின் திருத்தல இயற்கைப் புனைவில் புனையப் பெற்றுள்ளன. இக்குறிப்புகள் விரிவாக இயற்கைப் பொருள்கள் இறைவனை வழிபடல் என்னும் பகுதியில் ஆயப்பெற்றுள்ளன. ஆறுகள் இறைவனை வழிபடுதல் மாந்தர்க்கு அறிவுணர்த்தும் பொருட்டே ஆகும்.

திருநாவுக்கரசர் பாடல்களில் ஓரிடத்தில் கடல் வணங்குவதாக வருவதும் அத்தகையதே.

## 2. விலங்கினங்கள் வழிபடுதல்

திருஞானசம்பந்தர் பாடல்களில் இரண்டிடங்களிலும் சுந்தரர் பாடல்களில் ஓரிடத்தும் குரங்குகள் இறைவனை வழிபடும் காட்சி தல இயற்கைப் புனைவில் காணப்பெறு கின்றன. திருஞானசம்பந்தர் பாடல்களில் இரண்டிடங்களில் திருநாவுக்கரசர் பாடல்களில் ஓரிடத்தும் சுந்தரர் பாடல் களில் இரண்டிடங்களையும் யானைகள் தம் துணையுடன் இறைவனை வழிபடுகின்றவாகக் காணப்பெறுகின்றன. இவையாவும் திருத்தலங்களின் இயற்கை புனைவில் காணப் பெறும் காட்சிகள். அவை துணையொடு கூடி இல்லற நெறியில்நின்றே இறைவனை வழிபடலாம் என்று மக்களுக்கு அறிவுணர்த்தும் பொருட்டு ஆகும்.

## 3. பறவைகள் வணங்குதல்

திருஞானசம்பந்தர் பாடல்களில் ஐந்திடங்களிலும் சுந்தரர் பாடல்களில் ஓரிடத்தும சேக்கிழார் பாடல்களில்

மூன்றிடங்களிலும் கிளிகள் வேதங்கள் ஓதுவதாகவும் சிவபெருமான் திருப்பெயரைக் கூறுவதாகவும் வேதங்கள் சொல்வாரிடம் ஏற்படும் பிழைகளைத் திருந்துவதாகவும் காட்டப்பெறுகின்றன. இவையும் இறை வழிபாட்டின் இன்றியமையாமையை மக்களுக்கு அறிவுணர்த்துவதற்கே ஆகும்.

மனிதனினும் குறைந்த ஆற்றலையும் அறிவையும் பெற்ற விலங்குகளும் பறவைகளும் இறைவனை வழிபடுவது தாங்களே உணர்ந்து இறைவனை வழிபட மக்கள் இன்னும் சரியாக இறைவழிபாட்டில் ஈடுபடவில்லையே என நினைந்து மக்களை ஆன்மீக நெறியிற் சென்று பயன் பெறுமாறு அவை உணர்த்தி நிற்கின்றன. திருமுறையில் வருகின்ற ஒவ்வொரு தல இயற்கைக்கும் இவ்வாறு பொருள் காணமுடியும்.

### 2.2.6.0. இறைவன் புகழ் கூறும் நூல் இயல்பு [இருள் நீக்கும் கதிரவன்]

பெரிய புராணத்தை அஞ்ஞானமாகிய இருளை நீக்கும் ஞானக் கதிரவன் என்று குறிப்பிடுகிறார் சேக்கிழார். இந்நூலால் பெறும் பயனைக் கதிரவன் இருள் நீக்கும் செயல் மனிதர்க்கு உணர்த்தி நிற்கிறது.

**"சிந்தையுட் சார்ந்து நின்ற பொங்கிய இருளை ஏனைப்**
**புறவிருள் போக்குகின்ற செங்கதிரவன் போல் நீக்கும்".**

திருத்தொண்டர் புராணம்''[116] இங்குப்புறவிருள் என்பது உலகத்துப் புறவிருள். இப்புறவிருளும் கதிரவன் ஒளியால் நீக்கப் பெறுகிறது. அகவிருள் என்பது அஞ்ஞானம். அஞ்ஞானத்தைப் புறவிருள் போக்கும் கதிரவன் நீக்க இயலாது. திருத்தொண்டர் புராணமாகிய கதிரவனால் அகப் பொருளாகிய அஞ்ஞானம் போக்கப் பெறுகிறது. இறைவன் புகழ் கூறும் நூலாகிய திருத்தொண்டர் புராணம்

முதலான நூல்கள் மக்களின் அஞ்ஞானத்தைப் போக்கு தலைக் கதிரவனின் இருள் நீக்கும் செயல் உணர்த்தி நிற்கிறது. மேலும் ஒளியையும் வெப்பத்தையும் தந்து உயிர்களை வாழ்விக்கும் கதிரவன் போல இறை நூல்கள் உயிரை வாழ்விக்கும் இயல்பையும் அது புலப்படுத்துகிறது.

### 2.2.7 இறைவனை வணங்குவோர் பயன்

இறைவன் தன்னை வணங்குவார்க்கு அருளுதலில் தவறு பவனல்லன். வைதாரையும் வாழவைக்கும் இயல்புடைய இறைவன். அவன் அருளுதலின் உறுதியைப் பட்டினத்துப் பிள்ளையார் பூமியின் புவியீர்ப்பு விசையினால் மேல் நோக்கி எறியும் பொருள் யாவும் கீழ்நோக்கி வந்துவிடும் என்னும் இயல்பைக் கொண்டு விளக்குகிறார்

திருக்கழிப்பாலை பற்றிய பதிகத்துள் ஓரிடத்தில் குருகு எனும் பறவை தாழை மடலைத் தன் குஞ்சு என மயங்கி அணைப்பதாகக் காட்டப்பெறும் பகுதி ஒன்றுள்ளது. அப்பகுதிக்கு உள்ளுறைப் பொருள் கூறுவார் அறிஞர் ஒருவர். அவர்பிறந்த சைவ சமயத்தை விட்டுச் சமணசமயம் சென்றதை நாடறியும். குருகானது எப்படித் தாழை மடலைத் தன்குஞ்சு என மயங்கி அணைந்ததோ, அது போல நாவரசரும் சமண சமயத்தை தனக்குரிய மெய்ச் சமயம் என மயங்கி அச்சமயத்திலே ஈடுபட்டார் என்று பொருள் கூறப்பெற்றுள்ளது. அதுமட்டுமல்லாமல் திருவலம்புரம் திருத்தல இயற்கைக் காட்சியொன்றுக்கு இவர் பொருள் கூறுகிறார். பலவகையான மலர்கள் பூத்துள்ளமையால் பல்வேறு சுவைகளை உடைய தேனை வண்டுகள் அருந்தி மது மயக்கத்தில் தம்மை மறந்து உறங்குகின்றன. அக்காட்சிக்கு வண்டுகளும் தேனும் போல பலவகையான சமயங்கள் உலகத்தில் உள்ளன. எல்லா சமயங்களையும் சார்ந்து மயக்கம் பெறாமல் சைவசமயத் தில் தம்மை மக்கள் ஈடுபடுத்துமாறு உலகினர்க்கு அது

அறிவுறுத்துவதாகக் காட்டப்பெறுகிறது என்று பொருள் காட்டுகிறார். இவ்வாறு திருத்தல இயற்கையின ஒவ்வொரு இயற்கைக்கும் பொருள் காணமுடியும். சங்க இலக்கியத்தில் உரிப்பொருள் முக்கியத்தில் அவ்வியற்கை புனைவுகளுக்கு உள்ளுறை வகையாலும் இறைச்சி வகையாலும் பொருள் கொள்ளப்பெறுகின்றன. புனையப் பெற்றுள்ள தல இயற்கைப் புனைவுகளுக்கு உரிப்பொருள் இன்றியமையாமை ஏதுமில்லை. இத்தகைச் சூழலில் இவ்விடத்தில் அமைந்துள்ளது என்று குறிப்பிடுவதே திருமுறையாசிரியர் களின் நோக்கம். ஆகவே இப்பகுதியில் திருத்தல இயற்கைப் புனைவில் திருமுறையாசிரியர்கள் இயற்கைப் பொருள்கள் அல்லது காட்சிகள் மனிதனுக்குக் கருத்துணர்த்துவனவாக நேரிடையாகக் கூறப்பெற்றன மட்டும் எடுத்துக் கொள்ளப் பெற்றன.

## 2.3.0 பிற உணர்த்தல்

சமுதாயஉண்மைகள் சமய உண்மைகள் மட்டுமில்லாமல் பேதையர் இயல்பு. ஈகையின் இயல்பு. ஈயானுடைய செல்வத்தின் இயல்பு ஆகிய பிறவற்றை இயற்கை உணர்த்து கிறது.

## 2 3 1 பேதையரியல்பு [மூர்க்கர்]

பேதையரியல்பு ஆட்டின் இமல்பாகக் காட்டப்பெற்று உள்ளது. இக்கருத்து நக்கிர தேவ நாயனார் பாடல்களில் ஓரிடத்தில் காணப் பெறுகிறது.

> **“ஆடு போலக் கூடி நின்றழைத்தும்**
> **மாக்கள் போல வேட்கையீ டுண்டும்**
>
> . ... ..
>
> **இன்ன தன்மையின்என்றிரு நிலத்து**
> **முன்னே அறியா மூர்க்க மாக்கள்”117**

என்ற அவர் குறிப்பு அதைக் காட்டுகிறது.

ஆடுகள் மந்தையாகச் கூட்டமாகச் செல்லும் இயல்புடையன. அதுமட்டமல்லாமல் ஒரே நெறியிற் செல்லும் இயல்புடையன அல்ல. ஓர் ஆடு ஏதோ ஒருவழியில் சென்றால் அதன்பின் எல்லா ஆடுகளும் எவ்விதக் காரணமும் இல்லாமல் செல்லும் இயல்புடையன. முன் சென்ற ஆடு ஏன் அவ்வழிச் சென்றது செல்கிறது என்று ஆடுகள் நினைப்பதில்லை மேலும் ஆடுகள் ஓரிடத்தில் மேயாதன. மேய்ந்து கொண்டிருக்கும் இடம் சிறந்த பச்சைப் புல் வெளியாக இருப்பினும் கண்ணுக்கெட்டிய தூரத்தில் பச்சை தென்பட்டால் இங்கு மேய்வதைவிட்டு உடனே அங்கு ஓடும். அதற்கு மேலும் புல்வெளியிலும் ஆடுகள் நுனிப் புல்லைத்தான் மேயும். கூட்டத்தில் ஓராடு ஏதோ ஒரு காரணத்திற்காகக் கத்தினால் உடனே காரணமில்லாமல் பிற ஆடுகளும் உடன் கத்தும். இவ்வகையியல்புகள் மூர்க்கரின் இயல்பைக் காட்டுகின்றன.

மூர்க்கமக்கள் - பேதை மக்கள் ஒரு நெறியான வழியில் செல்லமாட்டார்கள். மேலும் இருக்கும் நல்ல நிலையை விட்டு ஒன்றும் பயனில்லாத நெறியைப் பின்பற்றுவார்கள். இந்நெறியினும் அப்புதுநெறியில் புதியன ஏதுமில்லை என்றாலும் உணரார். மேலும் தான் செல்லும் வழியில் தன்னுடைய உறவுகளையும் அழைத்துச் சென்று அவர்களையும் துன்பத்தில் ஆழ்த்திவிடுவர். உலகியல் இன்பங்களில் புலனின்பங்களில் பெரிதும் ஈடுபட்டு தாம் ஆழ்வதொடு பிறரையும் அச்சேற்றில் அழுந்துமாறு செய்துவிடுவர். இவர்களின் இச்செயல்களைத் தெளிவாக ஆட்டின் இயல்பு உணர்த்தி நிற்கிறது.

### 2.3.2 ஈகை இயல்பு; ஈவான் இயல்பு

எல்லார்க்கும் கைம்மாறு கருதாத இயல்பு படைத்த மனிதனை மரத்தொடு ஒப்பிடுதல் பழைய காலந்தொட்டு காணப்பெறுகிறது. திருக்குறளிலும் பலவிடங்களில்

பிறர்க்கும் ஈயும் மனிதனின் இயல்பை உணர்த்தி நிற்கிறது. ஓரிடத்தில் உள்ளூர்ப் பழுமரமாகவும் பிறிதோரிடத்தில் மருந்தாகித் தப்பாத மரமாகவும் ஈயும் இயல்புடையானிடம் இருக்கும் செல்வத்தின் இயல்பு கூறப்பெற்றுள்ளது.

ஈகையியல்பினை மரத்தையும் உணர்த்தி நிற்றல் மிகப் பொருத்தமான ஒன்றாகும். மரம் தான் பிறர்க்குக் கொடுக்கும் போது தனக்கு இன்னது கிடைக்கும் என்று குறியெதிர்ப்பை நினைவில் கொண்டு கொடுப்பதன்று. கைம்மாறு கருதாமலே செய்கிறது. பறை சாற்றிக்கொண்டு மரம் பிறர்க்குக் கொடுப்பதில்லை. மேலும் மரம் தன்னுடைய இலை, பூ, காய், கனி, கிளை, பட்டை, வேர் முதலான பலவகையையும் மனிதனுக்குக் கொடுக்கிறது. இத்தகைய இயல்புதான் கொடையாளனுக்கு இருக்கும் என்று மரம் பிறர்க்கு அறிவுறுத்துகிறது.

> **"இரவலர் துயர்கெடுவகை நினைவிலமையவர்**
> **புரமெழில் பெறவளர்**
> **மரநிகர் கொடை மனிதர்கள்**
> **பயில் மறைவனம்"[118]**

திருமறைக்காட்டு மக்களின் கொடைத்தன்மையை மனிதர்களின் கொடைத் தன்மை மரம் உணர்த்துகிறது.

### 2 3.3 ஈயான் இயல்பு:

ஈயானின் இயல்பைச் சுந்தரர் பாடல்களில் ஓரிடத்தில் மிகச்சிறு வளவும் பிறர்க்குக் கொடுக்கமாட்டான் என்பதை ஈயாதான் இயல்பை அளவு வகையில் உணர்த்தி நிற்கிறது.

> **'எள்விழுந்திடம் பார்க்கு மாகிலும்**
> **ஈக்கும் ஈகில னாகிலும்"[119]**

ஈ என்பது பறப்பனவற்றுள் மிகச்சிறிய ஒன்று. அப்பூச்சியின் தலை அச்சிறு உருவத்தில் மிகச்சிறிய ஒரு பகுதி. அச்சிறு அளவிற்கும் அவன் பிறர்க்கு ஈயமாட்டான் என்று ஈயின்

தலை அளவு வகையில் நின்று ஈயானின் இயல்பை உணர்த்துகிறது.

### 2.3.4 அறம் செய்யான் செல்வம்

செல்வம் மிகுதியாக அறம் செய்யானிடத்தில் இருப்பதில் எவ்விதப் பயனுமில்லை. மேலும் செல்வம் வெளிவந்து மக்களிடம் கொடுக்கப் பெறாததால் செல்வத்துப்பயனை அவனும் பெறப்போவதில்லை. பிறர்க்குச் சிறிதேனும் ஈயாத குணம் படைத்தவனை எட்டிப் பழத்தின் இயல்பு உணர்த்துகிறது.

> **"எட்டி பழுத்த இருகனி வீழ்ந்தென**
> **ஒட்டிய நல்லறஞ் செய்யா தவர் செல்வம்"[120]**

என்று திருமூலரின் இப்பாடலடிகள் உணர்த்துகின்றன. எட்டிப்பழம் பார்ப்பதற்கு மிக அழகாய் இருக்கும். பார்ப்பவர் கண்களையும் கவரும். எட்டிப்பழம் பார்ப்பதற்கு அழகாக இருந்தாலும் எடுத்துண்ண நேரின் உயிரழிவு ஏற்படும். அவ்வாறே அறஞ் செய்யாதவன் செல்வத்தால் பயனில்லாவிடினும் பரவாயில்லை. அச்செல்வத்தால் பிறர்க்குத் துன்பம் வருதலும் உண்டு. இத்தகைய எட்டிப்பழ இயல்புகள் அறஞ்செய்யானின் செல்வத்தியல்பை உணர்த்தி நிற்கின்றன.

### 2.4.0 இயல் முடிவுகள்

திருமுறையில் இயற்கைப் பொருள்கள் பலவிடங்களில், பல வகையில் கருத்துணர்த்துகின்றன. திருமுறையாசிரியர்களும் மிகையாக இவ்வகையில் பாடியவர்களுள் குறிப்பிடத் தக்கவர் திருநாவுக்கரசர், மாணிக்கவாசகர், திருமூலர், பட்டினத்துபிள்ளையார், சுந்தரர் ஆகியோர் ஆவர்.

2.4.1 சமுதாய உண்மைகளில் ஒன்றாகிய உயகியல் இன்பங்கள் அழிவன என்பதை உணர்த்தும் பாம்பினவாய்த்

தேரை என்றவொரு காட்சி தவிர்த்துப் பிற ஏதும் திருஞானசம்பந்தரால் உணர்த்தப் பெறவில்லை. மாணிக்க வாசகரும் திருமூலரும் பட்டினத்தாரும் மிகையாக இவ்வகையில் பாடியுள்ளனர் திருஞானசம்பந்தர் இவ்வகை நோக்கில் முன்னவர்களோடு ஒப்பிட முடியாமைக்குக் காரணம் அவரது இளமை என்று குறிப்பிடலாம். இளமையிலே இறையருள் பெற்று சிறு ஆண்டுகளிலேயே இறைவனை அடைந்தவர். மேலும் மிகச்சிறு வயதிலேயே ஞானம் பெற்றவர். அவருக்கு வாழ்க்கையின் பல்வேறு துன்பங்கள்; நிலையாமைகள் அறிந்திருக்கும் வாய்ப்பு குறைவு. ஆகையால் நிலையாமைக் கருத்துகள் இயற்கை மூலம் உணர்த்தப் பெறுவனவாக இவர் பாடல்களில் மிகுதியாக அமையவில்லை.

சுந்தரர், மாணிக்கவாசகர், திருமூலர், பட்டினத்துப் பிள்ளையார் ஆகிய நால்வருள் சுந்தரர், மாணிக்கவாசகர், பட்டினத்துப் பிள்ளையார் ஆகிய மூவரும் இல்வாழ்க்கை நெறிகளை உணர்ந்தவர்கள். அவருள்ளும் மாணிக்கவாசகர் அரசியலொடு உலகியலும் அறிந்தவர் என்பது அவரது வாழ்க்கை வரலாறு காட்டுகிறது. சுந்தரர் இரு மனைவி களொடு வாழ்ந்தவர். இல்லற வாழ்வை நன்கறிந்தவர். இல்வாழ்வில் பெருவிருப்புக் கொண்டவர். திருமூலர் உலகியலை நன்குணர்ந்தவர் என்பது அவரின் பாடல்கள் பல நன்கு உணர்த்துகின்றன. திருமந்திரத்தில் இறைவன் இறைமை பற்றிய கருத்துகளொடு சமுதாய உண்மைகளுக் கென்றே பிறனில் விழையாமை, அறஞ்செய் செல்வம் தனியிடம் அவர் நூலுள் தரப்பெற்றமையும் அதை உணர்த்து கிறது. இக்காரணங்களால் இவர்கள் பாடல்களில் இயற்கை சமுதாய உண்மைகள் உணர்த்துவதாகப் பல இடங்களில் காணப்பெறுகிறது. மாணிக்கவாசகர் அழுதழுது அடியடைந்த அன்பர். மேலும் தன்னில் இல்லாத குறை களும் தன்னில் இருப்பதாக நினைத்து, தன்னை இழிவாகக்

கூறிக்கொள்ளுதல் இறையடியார் இயல்பு. அவ்வகையிலும் இத்தகையன பலவிடங்களில் அடையக் காரணமாயின என்று கொள்ளலாம்.

2.4.2. இயற்கை சமய உண்மைகளை உணர்த்தும் பகுதியில் திருநாவுக்கரசர், மாணிக்கவாசகர், திருமூலர் பட்டினத்துப் பிள்ளையார், சேக்கிழார் ஆகிய திருமுறை யாசிரியர்களின் குறிப்புகள் மிகையாக உள்ளன.

திருஞானசம்பந்தர் இயற்கை இறைவழிபாட்டை உணர்த்தும் பகுதியில் மட்டும் மிகுதியான குறிப்புகளை தந்துள்ளார். சைவத்தின் மேன்மையை இயற்கைப் பொருள்கள் மூலம் உணர்த்துதல் இயற்கைப் பழமொழிகள் திருநாவுக்கரசரிடம் மட்டும் காணப்பெறுகிறது. இவர் தான் பிறந்த சைவ சமயத்தை விட்டுப் புறச்சமயமாகிய சமணத்தைச் சார்ந்து பின்னர் அங்கிருந்து விலகி சைவ சமயத்தையே வந்தடைந்தார் ஆகவே இவருக்குச் சைவ சமயத்தின் இயல்புகளையும் சமண சமயத்தின் இயல்பு களையும் சீர்தூக்கிப் பார்த்து உண்மைகளைக் கூறவியலும். இக்காரணம் பற்றியே இவர் பாடல்களில் இத்தகையன அமைய இடம் தந்தது எனலாம். திருஞானசம்பந்தர் பாடல்களில் இயற்கை வழிபாடு மக்களுக்கு இறைவழி பாட்டை உணர்த்தும் பகுதிகள் மிகையாகக் காணப்பெறுதல் இயற்கை மீது அவர் கொண்ட ஈடுபாட்டை உணர்த்து கிறது. திருமுறையாசிரியர்களிலே மிகையான தல இயற்கைக் குறிப்புகளைத் தந்தவர் இவரே என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

பக்தி இயல்புகளை இயற்கை உணர்த்துவதாகக் காட்டும் பகுதிகள் மாணிக்கவாசகர் பாடல்களில் மிகுதி யாகக் காணப்பெறுகின்றன. மாணிக்கவாசகர் பிறரிடமிருந்து வேறுபட்டவர். இவரை ஒத்த நிலையில் காணப்பெறுபவர் திருநாவுக்கரசர். இருவருமே அழுதழுது அடியடைந்து

அடியவர்கள். திருநாவுக்கரசர் கழிந்ததற்கு இரங்கிப் பாடுதலொடு இறையருள் பெற்றதை எண்ணி எண்ணிப் பாடும் இயல்பு உடையவர். ஆகையால்தான் இவ்விருவர் பாடல்களிலும் பக்திநிலைகள் இயற்கைமூலம் மிகுதியான இடங்களில் உணர்த்தப் பெறுகின்றன. திருமூலரின் திருமந்திரம் சாத்திரத்திரம், அவர் சாத்திர விளக்கம் கூறுபவராகையால் சமய உண்மைகளை இயற்கை மூலம் மிகுதியான இடங்களில் உணர்த்துகிறார்.

திருமுறையில் பிற உண்மைகள் இயற்கை உணர்த்தும் பகுதியில் மிகக் குறைவான குறிப்புகளே வந்துள்ளன. பெரும்பாலான உண்மைகள் – கருத்துகள் சமய உண்மையிலே அடங்கி விடுகின்றன. மேலும் பன்னிரு திருமுறை சமய இலக்கியமாகத் திகழ்வது இக்காரணங் களால். சமுதாய சமயத் தொடர் பற்ற பிற உண்மைகள் மிகுதியாக இடம் பெறவில்லை என்பது புலப்படுகிறது.

## இயல் இரண்டு

# திருமுறை இயற்கை - இறை/இறைமையுணர்வு

இவ்வியலில் இயற்கையையும் இறையையும் இணைத்துக் கண்ட வாழ்வு, இயற்கையொடு இறையை இணைத்துப் பார்க்கும் மரபு, இறைவன் இயற்கைப் பொருள்களை அறிதல், இறைவனை இயற்கைப் பொருள்களால் வழி படுதல், இறைவன் இறைவியர் உறுப்பு நலன்களும் இயற்கையும், இயற்கைப் பொருள்களும் இறைவனை வழிபடல் காணும் காட்சியாவும் இறைக்காட்சியாக விளங்குதல், இயற்கையாக இறைவன், இயற்கையில் கலந்துள்ள இறைவன். இயற்கைப் படைப்பில் இறைவன், இயற்கையைக் கடந்த இறைவன், இருசுடரும் இறைவனும், இயற்கையும் அடியார் நிலையும், இயற்கை ஒரு குறியீடு ஆகிய செய்திகள் ஆயப் பெறுகின்றன.

### 1.0. இயற்கையையும் இறையையும் இணைத்துக் கண்ட வாழ்வு

இன்றைய உலகம் அறிவியல் வளர்ச்சியால் இயற்கையின் அமைப்பும் செயலும் பற்றிய தெளிவான அறிவு பெற்று

விளங்குகின்றது. ஒவ்வொன்றையும் அறிவியல் பகுதி பகுதியாக துருவித் தெளிவு படுத்தியுள்ளது. ஆனால் அறிவியலறிவு நாகரிகம் வளராத மிகப் பழங்காலத்து மக்கள் அறிந்து வைத்திருந்த அறிவு இன்றைய வளர்ச்சியில் வேறுபட்டது. அவர்கள் இயற்கை நிகழ்ச்சிகளைத் தெளிவாக அறிந்திருந்தாரில்லை. இயற்கையொடு இயற்கை யாக வாழ்வதே அவர்கள் வாழ்க்கையாக இருந்தது. அப்போது முதன் முதலில் வழிபாடும் இயற்கை வழிபாடா கவே அமைந்தது.

## 1.1 அச்சவுணர்வும் இயற்கை வழிபாடும்

இற்கையோடு இயற்கையாக வாழ்ந்த துவக்ககால [பழங் கால] மனிதன் கதிரவனின் பேரொளியையும் காற்றின் சீற்ற த்தையும் மின்னலின் ஒளியையும் இடியின் முழக்கத்தையும் மழையின் பொழிவையும் இருளின் மறைப்பையும் கண்டு அஞ்சினான். அவற்றின் சீற்றமும் ஆற்றலும் அச்சத்தை உண்டாக்கின. அப்போது அவன் அவ்வச்சத்தின் காரணமாக அவற்றை வழிபடத் துவங்கினான். முதன் முதலில் அவனுடைய வழிபாடு – இயற்கை வழிபாடு அச்சத்தின் காரணமாகவே பிறந்தது.

“நிலம், நீர், அனல், காற்று, ஆகாயம் என்னும் பஞ்ச பூதங்களின் பயங்கர நிலையைக் கண்டு அஞ்சியே இறைவனை நினைத்திருக்கிறார்கள்”[1] என்பார் கூற்று மேற்கருத்தை வலியுறுத்துகிறது.

தொல் பழங் காலத்தில் ஆதி மனிதனின் இடி, மின்னல் நிலநடுக்கம், ஞாயிற்றின் தோற்றம், மறைவு முதலிய இயற்கையின் ஆற்றல்களை அறிந்துகொள்ளமுடியாத தாலும் அடக்கியாளத் தெரிந்து கொள்ளாததாலும் அவற்றைக் கண்டு அஞ்சினான்.”[2] என்னும் கருத்து அவனது அச்சவுணர்வின் காரணத்தைக் காட்டுகிறது.

இந்த முதல் உணர்வு அச்சத்தின் பாற்பட்டதாயினும் அவன் வாழ்வொடு தொடர்பு கொண்ட ஒன்றாகவே விளங்கியது.

முதல் உணர்வு அச்சத்தின் பாற்பட்டதாயினும் அவ்வுணர்வும் அவன் வாழ்வொடு பொருந்திய ஒன்றாகி விட்டது. இடியையும் மின்னலையும் கேட்டுக் கண்டு அவன் அஞ்சினான்.. அவை தன் சக்திக்கு மீறித் தன்னைத் துன்புறுத்துவதாகக் கண்டு, அவைதாம் கடவுளோ என நினைத்திருப்பான். அந்த நினைவின் வழியே அவற்றை வழிபடும் உணர்வும் உண்டாயிற்று.''[3]

என்ற கருத்தும் மேற்கருத்தை வலியுறுத்துகிறது.

சமயத்தின் தோற்றம் மிகமிகத் தொன்மையான மக்கள், இயற்கையில் கண்ட பெரு நிகழ்ச்சிகளால் உள்ளத்தே கொண்ட அச்சமும் அவலமும் காரணமாகத் தோன்றியது என்பர் வரலாற்றறிஞர்''[4] என்னும் கருத்தும் நோக்கற்குரித்து. சமயம் என்பது கடவுள் நம்பிக்கையை அடிபடையாக அச்சங் கொண்டது. அச்சம் காரணமாகிய இயற்கை வழிபாடே, சமயத்தின் தோற்றம் என்பது பொருத்தமானது ஆகும்.

இதை மேனாட்டறிஞர் மாக்சுமுல்லர்

“இயற்கைத் தோற்றங்களாகிய - பொருள்களாகிய கதிரவன், மதி, மழை, மின்னல் முதலான பொருள்களைக் கண்டு ஏற்பட்ட வியப்பு, அதிர்ச்சி, அச்சம் என்னும் அவன் உள்ளத்து உணர்வுகளே சமயம் தோன்றக்காரணமாயின''[5] என்று கூறுகிறார். முதன் முதலில் அச்சத்தின் காரணமா கவே சமயம்-வழிபாடு தோன்றியது. என்னும் கருத்து இந்தியாவில் மட்டுமல்லாமல் உலகளவிலும் ஏற்றுக் கொள்ளப் பெற்றது.

"மனிதனிடம் காணப்பட்ட அச்சங்காரணமாக ஏற்பட்ட அதிர்ச்சியும் ஆற்றல் அறியவியலாத பெருமதிப்பும் மேலும் உருப்பெறுவதற்கு முக்கியமாக, முக்கியபங்காக இருந்தது. இது எல்லாச் சமயங்களுக்கும் பொருந்தும்"[6] என்பது மேலை நாட்டறிஞரின் கருத்து. இது உலகளவிலான கருத்து என்பதை உணர்த்துகின்றது. முதல் வழிபாடு அச்சத்தின் காரணமாகப் பிறந்த இயற்கை வழிபாடு என்பது இவற்றின் மூலம் தெளிவாகிறது.

## 1.2. ஆற்றலைவியத்தலும் இயற்கைவழிபாடும்

வாழ்க்கையொடு ஒன்றிய நிகழ்ச்சிகளால், காட்சிகளால் இவ்வச்சவுணர்வு தோன்றுகிறது. மீண்டும் மீண்டும் அச்சவுணர்வு தோன்ற அவன் அதிலிருந்து சற்று மீள்கிறான். அவனறிவு, சிந்திக்கத் தொடங்குகிறது. தன்னைச் சுற்றிலும் ஏதோ பேராற்றல் உள்ளதாக நினைத்து வியக்கிறான். அச்சம் உடனிருப்பினும் ஆற்றலைவியத்தல் இங்கு முதலிடம் பெறுகிறது.

"இயற்கைப் பொருள்களில் மனிதன் அறிவு, ஆராய்ச்சி, ஆற்றல் என்பனவற்றால் செய்து நிறைவேற்ற இயலாத ஏதோ ஒன்று அமைந்து கிடக்கின்றது. அது மனிதனைவிடச் சிறந்ததாகவே இருத்தல் வேண்டும். அது கடவுளைத் தவிர வேறு யாராக இருத்தல் கூடும்"[7] என்பது பழங்கால மனிதனின் இரண்டாவதாக வளர்ந்த அறிவு, வளர்ச்சியில் ஏற்பட்ட மாற்றத்தைக் காட்டுகிறது.

இதைத்தான் அறிஞர் ஒருவர்.

"தன்னைச் சுற்றியுள்ள தன்னைவிடப் பேராற்றல் உள்ள இயற்கையை வணங்கும் பழக்கம் மனிதனுக்கு ஏற்பட்டது"[8] என்று குறிப்பிடுகிறார்.

## 1.3. பயன்பெறு உணர்வும் இயற்கை வழிபாடும்

அச்சத்தாலும் ஆற்றலை வியந்தும் வணங்கிய மனிதனின் அறிவு, மேலும் வளர்கிறது. அவன் மழைப் பொழிவால் பயிர் விளைவையும் கதிரவன் தோற்றத்தால் உயிர்வாழ்வையும், உயிரியக்கத்தையும், இருள் விலகலையும் கண்டுணர்கிறான் அவன் இப்போது அவையாவும் மக்களுக்குப் பயன்தருவனவே என்றுணர்கின்றனன். இயற்கைப் பொருள்களே வாழ்விக்கின்றன என்று பயன் கண்ட, பயனைப்பெற்ற அவன், நன்றியுணர்வோடு அவற்றை வணங்குகிறான். இது மூன்றாவது நிலையில் காணப்பெறும் இயற்கைவழிபாட்டின் வளர்ச்சிநிலை.

"பண்டைக்காலமக்கள் கண்ணால் கண்டவற்றை யெல்லாம் கடவுள்என வணங்கி வந்தனர். தங்கள் வாழ்வுக்குப் பயன்படுவனவற்றையெல்லாம் தெய்வங் களென்று எண்ணினார்"[9] என்னும் கருத்து இயற்கையைப் பயன்கருதி வழிபட்டதைக் காட்டுகிறது.

இக்கருத்தை அறிஞர் ஒருவர்,

"உலக வாழ்க்கையில் தெய்வக் கொள்கை உருப்பெறு வதற்குத் துணையாய் ஐம்பூதங்களின் சார்புடைய ஞாயிறு, திங்கள், மழை, நிலம் என்னும் இயற்கைப் பொருள்களாகும். வாழ்க்கையில் நேர்முறையில் பயன் விளைவிக்கும் இவ் வியற்கைப் பொருள்களை வழிபடும் வழிபாடே மக்கள் சமுதாயத்தில் முதன் முதல்தோன்றித் திணைக்கருப் பொருளாகிய தெய்வக் கொள்கைகளுக்குத்துணை செய்திருத்தல் வேண்டும்."[10] என்று வலியுறுத்துகிறார். இவர் பயன் பாட்டடிப் படையில் தோன்றிய வழிபாட்டை முதல் வழிபாடாகக் கூறுகிறார். ஆனால் அதை இயற்கை வழிபாட்டின் மூன்றாவது வளர்ச்சியாகத்தான் கொள்ள முடியும்.

"மனிதன் தனக்கு நலன் வேண்டும் என்பதற்காகவும் தனக்கு அளிக்கப்பட்ட நலனுக்கு நன்றி செலுத்தும் பொருட்டாகவும் இயற்கையை வணங்கத் தொடங்கினான். கதிர் வழிபாடும். மழை [மாரி] வழிபாடும் விண்வழிபாடும் மண் வழிபாடும் இப்படியே தோன்றியிருத்தல் கூடும்... பெரும்பாலான வழிபாடுகளுக்கு அடிப்படை நன்றியுணர்வும் அச்சவுணர்வும் ஆகும்"[11] என்பார் கருத்து இயற்கை வழி பாட்டின் மூன்றாவது வளர்ச்சியைக் காட்டுகிறது.

இன்றைய தமிழர் திருநாளும், மாட்டுப் பொங்கலும், ஆற்றுத்திவிழாக்களும் இவ்வடிப்படையில் அமைந்த விழாக்களே ஆகும்.

## 1.4 இயற்கையின் ஒழுங்கமைவும் தொடர்பறா இயற்கையும் இயற்கை வழிபாடும்

மனிதன் இயற்கையின் பயன்பாட்டைப் பெற்று வளர்கிறான் அவன் சிந்தனையில் மேலும் வளர்ச்சி ஏற்படுகிறது. பகல், இரவு, கதிரவனியக்கம், மதியினியக்கம், காற்றின் பரவல், பருவமழை என்னும் இயற்கை நியதிகளைக் காண்கிறான். அதுமட்டுமன்றி அவை இடையறவுபடாமல் ஒழுங்காகச் செயல்படுவது அவன் கருத்துக்குப் புலனாகிறது.

அவ்வொழுங்கமைவே அவனுக்கு ஒரு நம்பிக்கையைத் தந்திருக்கும். அதையே அவன் உணர்கிறான்.

"மதம் என்பது நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டது. இயற்கையின் ஒழுங்கமைவுகளும் நுட்பமும் மனிதனைச்சமய நம்பிக்கைக்கு அழைத்துச் சென்றது. அவற்றுள்ளும் சிறப்பாகக் கதிரவன் இயக்கமும், மதியின் இயக்கமும் பருவங்களின் மாறுதல்களும் இயற்கையின் நியதியும் விளைவும் ஆகிய தினந்தோறும் நடைபெறும் இவ்வியற்கை நிகழ்ச்சிகள் மனிதன் மனத்தில் ஓர் பாதிப்பை

உண்டாக்கிச் சமய வாழ்வுக்கு நம்பிக்கை அளித்தன."[12] என்னும் இக்கருத்து இயற்கையின் ஒழுங்கமைவுகள் தொடர்பறாவியக்கம் கண்டு மனிதன் வழிபட்ட நான்காவது வளர்ச்சியைக் காட்டுகிறது.

### 1.5. இயற்கையழகும் இறைவழிபாடும்

மனித அறிவு வளர்ச்சியின் அடுத்த நிலையாக இதைக்கொள்ளலாம். அச்சம் முதலான இவ்வுணர்வுகள் நீங்கிய மனிதன் காலை இளஞாயிற்று ஒளியின் அழகையும் அந்திச் செவ்வானின் அழகையும் நிலவானின் தோற்றத்தையும் கண்டிருப்பான். இத்தகைய இயற்கை அழகுகள் பல அவனைக் கவர்ந்து இழுத்திருக்கும். இயற்கைதந்த பயனாலும் இயற்கையில் பெற்ற மனஅமைதியாலும் வாழ்க்கை நிறைவு கண்ட அவன். அதற்கடுத்த நிலையில் இயற்கையின் அழகை அனுபவித்திருக்கமுடியும். இவ்வகையில் அவனது அழகியல் உணர்வுவழிபாடாக மாறியது.

"பழந்தமிழர் இயற்கை அழகையே உயர்ந்த பொருளாக அதாவது கடவுளாகக் கொண்டு வாழ்ந்தனர்... பழந்தமிழ் மக்கள் கொண்ட கடவுள் இயற்கை அழகு என்பதை மட்டும் நாம் மறுத்தலாகாது"[13] என்ற கருத்து மனிதனின் அழகியலுணர்வு இயற்கை வழிபாட்டுக்கு வழிகோலியது என்பதைத் தெளிவுபடுத்துகிறது.

மேலும்,

"தொடக்கநிலையில் இயக்கமற்ற சடப்பொருளாகவே தோன்றுகின்ற இயற்கை தன் தோற்றப் பொலிவாலும் பல்வேறு நிகழ்ச்சிகளாலும் மக்களைத் தன்பால் ஈர்த்து நிற்கும் அழகுப் பொருளாகத் தோன்றி இறுதியாக இறையொளி தாங்கி நிற்கும்"[14] என்ற கருத்தும் அதை வலியுறுத்தக் காணலாம்.

### 1.6. உள்பொருள் உணர்வும் – இயற்கை வழிபாடும்

இது வளர்ச்சியடைந்து காணப்பெறும் வழிபாடு. இயற்கையின் ஒழுங்கமைவுக்கும் இயக்கத்திற்கும், ஆற்ற லுக்கும் ஏதோ ஒரு காரணம் இருக்க வேண்டும். இவற்றைக் காரியப் படுத்தும் காரணன் ஒருவன் இருத்தல் வேண்டும் என்றும் உள்ளுணர்வு மனிதனிடம் தோன்றியிருக்க வேண்டும்

"உலகங்களை இயக்கும் ஒன்றிருத்தல் வேண்டும். அவ்வொன்று சடமாக இருத்தலாகாது. அது சடத்றுக்கு மாறுபட்டசித்தாய் (அறிவு) இருத்தல் வேண்டும். அது கடவுள் என்பது"[15] என்னும் கொள்கை அப்போது தோன்றியது.

இயற்கையில் அழகைக்கண்டு போற்றியவனுக்கும் இவ்வெண்ணம் தோன்றியிருக்கும்.

"உலக இயற்கையிலுள்ள அழகினைக்கண்டு வியந்து அவ்வளவில் அமைந்துவிடாமல் அவ்வியற்கையின் உள்ளே நுழைந்து எங்கெல்லாம் பிறழாத ஓர் ஒருமைப்பாடும் அதனை அங்கே நிலைநிறுத்தி மறைந்து கிடக்கும் ஓர் உயிர்ப் பொருளினிருப்புங் கண்டறிந்து களிப்படைந்தனர்"[16] என்னும் கருத்து அதைத் தெளிவு செய்யக் காணலாம்.

இவ்வகை வழிபாடே இயற்கையை நேரிடையாக இறையாகக் கண்ட வழிபாட்டின் இறுதியாக அமைந்தது. இவ்வகை உணர்வுக்குப்பின் ஒவ்வொரு இயற்கைப் பொருளும் ஒவ்வொரு கடவுளாக வணங்கப்பெற்றது. ஒவ்வொன்றுக்கும் மனிதச் சாயல் பூசப் பெற்றது. அடுத்த நிலையில் அவ்வியற்கைப் பொருளாக உருவகிக்கப் பெற்ற அனைத்தும் ஒரு பரம்பொருளுக்கு அடக்கம் என்னும் கொள்கை உருவாயிற்று. முன்னது பல தெய்வவழி பாடாகும். பின்னது ஒரு தெய்வ வழிபாடாகும். இதற் கடுத்தநிலை இயற்கைப் பொருள்கள் குறியீடாகவும்

உலமைகளாகவும் இறைவனைக் காட்டும் நிலையில் அமைந்தன. இவையாவும் இயற்கை வழிபாட்டின் மூல வேரை ஒரு சில இடங்களில் காட்டினாலும் முழுமையும் அவற்றிலிருந்து விலகிச் செல்வன ஆகும்.

## 2.0 இயற்கையோடு இறையை இலக்கியத்தில் இணைத்துப் பார்க்கும் மரபு

கொடிநிலை, கந்தழி, வள்ளி என்னும் ஞாயிறு, திங்கள், தீ முதலான இயற்கை வழிபாடுகளைக் காட்டிய தொல் காப்பியத்திற்குப் பின் இயற்கை வழிபாடுகளைக் காட்டும் செய்திகளைப் பெரும்பான்மையும் சங்க இலக்கியத்தில் காண முடிவதில்லை. பழங்கால இலக்கியத்தில் ஐம்பூதமாக இறையை வழிபட்ட செய்திகளும் இல்லை, முதன் முதலில் இயற்கையொடு இறையை இணைத்துப் பார்க்கும் சூழல் சங்க இலக்கியத்தில் சில, கடவுள் வாழ்த்துப் பகுதியில் மிகச்சில காணப் பெறுகின்றன.

இத்தகைய மரபு சங்க இலக்கியங்களில் பரிபாடலிலும், திருமுறுகாற்றுப் படையிலும் மட்டும் காணப் பெறுகின்றது.

இதையே அறிஞர் ஒருவர்,

"மானுடம் பாடும் மரபிலிருந்து மாறுபட்டு இறைவனைப் புகழும் புதுமை முதலில் பரிபாடலில் தோன்றியது"[17] என்று குறிப்பிடுகின்றார்.

சங்க இலக்கியத்தில் பரிபாடல் முருகாற்றுப்படை தவிர்த்து உள்ள பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் அகவாழ்வுக்கு பின்பும் புறவாழ்வின் வீரம், கொடை, சிறப்பு முதலிய அரசன் புகழ் கிளத்திற்கும் மட்டுமே எழுந்தன. அந்நூலுள் முழுமையாக இயற்கை இறைவழிபாடு இல்லை.

"மனித உணர்வுகளை இயற்கையின் மீது திணிக்கும் போக்கினைச் சங்கப் பாடல்களிலும் சந்திக்கின்றோம். அவ்வாறே, தெய்வீக ஆற்றல்களை இயற்கைக்குப் புகட்டும் போக்கினை இடைக்காலப் பக்திப்பாடல்களில் காண்கிறோம்"[18] என்ற கருத்து சங்கப் பாடல்களில் பெரும் பான்மையும் இயற்கை வழிபாடில்லை என்பதைத் தெளிவு படுத்துகிறது.

காலத்தால் பிற்பட்டதாகக் கருதப்பெறும் பரிபாடலிலும், திருமுறுகாற்றுப்படையிலும் மட்டுமே சமய நோக்கோடமைந்த பாடல்கள் உள்ளன. இயற்கையொடு இறையை இணைத்துப் பார்க்கும் மரபு சங்ககால அந்நூல்களில் மட்டுமே காணப்பெறுகின்றன என்று தனிநாயக அடிகளாரும்[19] குறிப்பிடுகிறார்.

"தமிழ் இலக்கியங்களைப் பொறுத்தவரையில், இயற்கையின் மனிதச் செயல்களைக் காண்பதற்கு மாறாகத் தெய்வீகச் செயல்களை இணைத்துப் பேசும் போக்கு பிற்காலத்ததாகக் கருதப்பெறும் கலித்தொகை, பரிபாடல் ஆகிய தொகை நூல்களில்தான் முழுவடிவம் பெறுகின்றது. இப்போக்கின் கூறுகள் சங்க இலக்கியங்களில் ஆங்காங்கே இடம்பெற்ற போதிலும் பிற்காலத்தில்தான் வளர்ச்சி பெற்றது"[20] என்பார் கருத்தும் அதைத் தெளிவு படுத்துகிறது.

சங்க காலத்திலும் அதற்கு முற்பட்ட மிகப்பழங் காலத்திலும் வாழ்க்கையோடு இணைந்து சமயநெறி நடை பெறுவதாயிற்று. ஆனால் ஆழ்வார்கள், நாயன்மார்கள் காலத்தில்தான் சமயநெறி தனியிடம் பெற்றது. ஆகையால் தான் இயற்கையையும் இறையையும், இணைத்துப் பார்க்கும் மரபு பக்தி இலக்கியத்தில் முழு நிறைவு பெற்ற வளர்ச்சி அடைந்தது.

## 31. இறைவன் இயற்கைப் பொருள்களை அணிதல்

சிவபெருமான் தலையிலும் மார்பிலும் பலவகையான மலர்களை அணிந்துள்ளார். அவர், தன் தலையில் புனலைத் தாங்குகிறார். தலையிலும் மார்பிலும் இடுப்பிலும் கையிலும் பாம்புகளை அணிந்துள்ளார். தலையில் சந்திரனைத் தரித்துள்ளார் மேலும் அவர் ஆடையாக மானின் தோலையும் புலித்தோலையும் யானைத் தோலையும் அணிந்துள்ளார். ஆமை ஓட்டையும் பன்றிப் பல்லினையும் மார்பிலணிந்துள்ளார்.

இவற்றை இரண்டு வகையாக அமைக்கலாம் ஒன்று இயற்கைப் பொருள்களை அப்படியே அணிந்தமை, மற்றது, இயற்கைப் பொருள்களை அழித்து அவற்றின் ஒரு கூற்றை அணிந்தமை என்பன. மலர்கள், பாம்புகள், சந்திரன், புனல் என்பன முதல் வகையிலும் மான்தோல், புலித்தோல், யானைத்தோல் ஆமையோடும் பன்றிப்பல் என்பன இரண்டாம் வகையிலும் அடங்கும்.

## 3 2. மலர்களை அணிதல்

சிவபெருமான் தலையிலும் மார்பிலும் பல வகையான மலர்களை அணிந்துள்ளார். மாலையெனவும் தார் எனவும் பொதுவாக மலர் எனவும் அவை குறிக்கப் பெறுகின்றன.

திருஞானசம்பந்தர் தம் பாடல்களுள்,

கொன்றை, வன்னி, கோடல், கூவிளம், மத்தம், இண்டை கொக்கிற்கு அலரி, எருக்கு, கோங்கு, செருந்தி, புன்னை, மல்லிகை, எருக்கு, மகிழம், தும்பை, கரந்தை, அகத்தி ஆகிய மலர்களைச் சிவபெருமான் அணிந்துள்ளதாக முன்னூற்றிருபது [320] இடங்களில் குறிப்பிடுகிறார். இவற்றுள் தொண்ணூறு விழுக்காடு கொன்றை மலரையே சிறப்பித்துக் கூறுகிறார். பொதுவாக மலர் எனும் பொதுச் சொல்லால் குறிப்பதுமுண்டு.

திருநாவுக்கரசர் தம் பாடல்களுள் கொன்றை, கண்டை, வேங்கை, கோடல், வன்னி, தும்பை, கொக்கிறகு, கூவிளம், குரவம், கோங்கம், துழாய், மல்லிகை, முல்லை, செண்பகம், செங்கமலம், கழுநீர், மத்தம், எருக்கு ஆகிய மலர்களை சிவபெருமான் அணிந்துள்ளதாக நூற்றுஎழுபத்தைந்து இடங்களில் குறிப்பிடுகிறார் இவரும் தொண்ணூறு விழுக்காடு கொன்றை மலரையே குறிப்பிடுகிறார். பொதுவாக 'மலர்' எனும் பொதுச் சொல்லால் குறிக்கும் இடங்களும் உள்ளன.

சுந்தரர் தம் பாடல்களுள் கொன்றை, குரவம், மத்தம், வன்னி, கரந்தை, கூவிளம், கொக்கிறகு, ஆகிய மலர்களைச் சிவபெருமான் அணிந்துள்ளதாக ஐம்பத்தேழு இடங்களில் குறிப்பிடுகிறார். இவர் குறைந்தவளவான மலர்களையே குறிப்பிட்டாலும் கொன்றை மலருக்கே முதலிடம் தந்துள்ளார் பொதுவாக 'மலர்கள்' எனவும் குறிப்பிடுகிறார்.

மாணிக்கவாசகர் தம் பாடல்களுள் கொன்றை, கழுநீர் மாலை, மந்தாரம், மத்தம், கூவிளம் ஆகியமலர்களைச் சிவபெருமான் அணிந்துள்ளதாக முப்பத்தாறு இடங்களில் குறிப்பிடுகிறார். சில மலர்களையே குறிப்பிட்டாலும் இவரும் தொண்ணூறு விழுக்காடு கொன்றை மலரையே சிறப்பிக்கிறார்.

ஒன்பதாம் திருமுறையில் திருமாளிகைத்தேவர் ஓரிடத்தில் மட்டும் கொன்றையையும் கொக்கிறகையும் குறிப்பிடுகிறார். சேந்தனார் ஓரிடத்திலும் கண்டராதித்தர் ஓரிடத்திலும் கொன்றையையும் மட்டும் குறிப்பிடுகின்றனர். திருவாலியமுதனார் கொன்றையையும் குவளையையும் ஓரிடத்தில் மட்டும் குறிப்பிடுகிறார். புருடோத்தும நம்பி ஓரிடத்திலும் சேதிராயர் இரண்டிங்களிலும் கொன்றை மலரைக் குறிப்பிடுகின்றனர். இவர்கள்

யாவரும் சிவன் தலையிலணிந்துள்ளதாகவே குறிப்பிடு கின்றனர்.

திருமூலர் தம்நூலுள் கொன்றை, கூவிளம் ஆகிய மலர்களை மட்டும் பதினைந்து இடங்களில் குறிப்பிடுகிறார். மலர் எனப் பொதுச்சொல்லால் குறிப்பதும் உண்டு. இவரும் கொன்றைமலரையே சிறப்பிக்கிறார்.

காரைக்காலம்மையார் தம் பாடல்களுள் எருக்கு, கொன்றை, வன்னி ஆகிய மலர்களை ஐந்து இடங்களிலும் ஐயடிகள் காடவர்கோன் கொன்றைமலரை ஒரே இடத்திலும் சேரமான் பெருமாள் நாயனார் கொன்றை மலரை இருபத்திரண்டு இடங்களிலும் அவரே இண்டையை ஓரிடத்தும் குறிப்பிடுகின்றனர்.

நக்கீரதேவநாயனார் கொன்றை, காந்தள், கூதாளம், ஆகிய மலர்களைப் பன்னிரண்டு இடங்களில் குறிப்பிடு கிறார். காந்தள், கூதாளம், எனுமிமருலர்களை முருகன் அணிந்துள்ளதாகவும் கொன்றை மலரைச் சிவன் அணிந்துள்ளதாகவும் குறிப்பிடுகிறார்.

கபிலதேவ நாயனார் தம் பாடல்களுள் கொன்றை, எருக்கு, புன்னை ஆகிய மலர்களை இருபத்தொரு இடங் களில் குறிப்பிடுகிறார். இவரும் தொண்ணூறு விழுக்காடு கொன்றையையே குறிப்பிடுகிறார்.

பரணதேவர் தம் பாடல்களுள் கொன்றை, மத்தம், தாமரை, ஆகிய மலர்களை எட்டிடங்களிலும் இளம் பெருமானடிகள் கொன்றை, எருக்கு. ஆகிய மலர்களை ஏழிடங்களிலும் பட்டினத்தடிகள் கொன்றை, மத்தம், தும்பை ஆகிய மலர்களைப் பதின்மூன்றிடங்களிலும் நம்பியாண்டார் நம்பி தம் நூலுள் கொன்றை, மத்தம் ஆகிய மலர்களை நான்கிடங்களிலும் குறிப்பிடுகின்றனர்.

இவர்களும் தொண்ணூறு விழுக்காடு கொன்றை மலரையே சிறப்பிக்கின்றனர்.

சேக்கிழார் தம்நூலுள் கொன்றை, கூவிளம், எருக்கு, வன்னி, இண்டை, தும்பை, அடம்பு, கொக்கிறகு, ஆகிய மலர்களை அறுபத்தொரு இடங்களில் குறிப்பிடுகிறார். இவரும் கொன்றைக்கே முதலிடம் தருகிறார். சிவபெருமான் பலவகை மலர்கள் அணிந்துள்ளதாகத் திருமுறையில் காணப்பெறும் இடங்களுள் சில;

**"குவளை மாமலர்க் கண்ணியும் கொன்றையும்**
**துன்று பொற்குழற்றிருச் சடை"**

**"கோடல் கூவிள மாலை அக்கமுஞ் செஞ்சடைக்குலாவி"**

**"கோடலர் வன்னிதும்பை கொக்கிற கலர்ந்த கொன்றை**
**ஏடமர் சடையும்"**

**"தாருந்தண் கொன்றையுங் கூவிளங்கனி மத்தமும்"**

**"தோடு லாமலர் இதழியந் தும்பையு மடம்புங்**
**காடு கொண்டசெஞ் சடைமுடிக் கடவுளார்"**

என்பன அவை[21] திருமுறையாசிரியர்களுள் பெரும் பான்மையும் சமயக் குறவர்களாகிய நால்வரே மிகுதியான குறிப்புகளைத் தந்துள்ளனர். அவர்கள் மீண்டும் மீண்டும் இறைவனைக் கண்டு அவனழகில் ஈடுபட்டுப் பாடியவர்களாகையால் அவர்கள் மிகுதியாகப் பாடினர் எனலாம்.

திருமுறையாசிரியர்கள் பெரும்பான்மையும் கொன்றை மலரையே குறிப்பிடுகின்றனர். அரசர்கட்கு அடையாள மாலையாக ஆத்திமலரும் வேம்பும் இருப்பது போல சிவபெருமானுக்கு அடையாளமாகக் கொன்றை அடைந்தது எனக் கொள்ளலாம். திருமாலுக்குத்துழாய் மாலையும் முருகனுக்குக் கடம்பமாலையும் சிறப்பாக அடையாளமாகக் கருதுவது போல சிவபெருமானுக்குக் கொன்றை மலரைச்

சிறப்பாகக் கூறுகின்றனர். அதன் காரணமாகவே சில இடங்களில் கொன்றைப் பூவில் சிவன் உள்ளதாகவும் குறிப்பிடுகின்றனர் மேலும் கொன்றை மலரையே வணங்கும் இடங்களும் உண்டு.

அம்மலர்களுள் கொன்றை, எருக்கு, மத்தம், இண்டை, தாமரை, தும்பை, கொக்கிறகு, அடம்பு, கூவிளம், கோங்கு, செருந்தி, அகத்தி முதலான மலர்கள் மக்கள் தம் தலையில் அணியாத மலர்களாகும் சில இடங்களில் மட்டும் மல்லிகை, முல்லை முதலிய மக்களும் அணியும் மலர்களைக் குறிப்பிடுகின்றனர்.

பெரும்பாலான மலர்கள் மஞ்சள், செம்மை, வெண்மை முதலிய நிறங்களால் புலவர்களை ஈர்த்திருக்கும். அவ்வழக்கில் ஈடுபட்ட அவர்கள் அத்தகைய அழகிய மலர்களை இறைவன் அணிந்துள்ளதாகக் குறிப்பிடுகின்றனர் என்றும் கொள்ளலாம்.

மேலும் விருப்பு வெறுப்பில்லாதவன் இவை அணியத் தக்கன அணியத்தக்கன அல்ல—எனும் கொள்கையின்றி எல்லாவற்றையும் ஏற்றுக் கொள்வான். இறைவன் என்பது ணர்த்தற்காய் இம்மலர்களைக் குறிப்பிட்டனர் என்று கொள்ளவும் வாய்ப்புண்டு.

இன்னும் மலர் வழிபாட்டினை மக்கள் மத்தியில் பரப்புதற்காகவும் இதை ஒரு உத்தியாகப் பயன்படுத்தினர் எனவும் சொல்லளாம்.

### 3.1.2 புனல் அணிதல் [அடக்கல்]

சிவபெருமான் தன் சடையில் கங்கையாம் புனலைத் தாங்கியுள்ளார் என்று திருமுறையாசிரியர்கள் பலவிடங்களில் குறிப்பிட்டுள்ளனர். அவர்கள் இதைக் கங்கையெனவும் ஆறு எனவும் புனலெனவும் நீரெனவும் வெள்ளம் எனவும் குறிப்பிடுகின்றனர்.

"புனல்பொ திந்தபுன் சடையினான்"

"ஆறணி சடைஎம் அற்புதக் கூத்தா"

"துறைஅ லைக்கங்கை சூடும் அறத்துறை இறைவா"[67]

"பூங்கங்கை தோய்ந்த சடையர்"

"ஆறணி நீள் முடி"

என்பன திருமுறையாசிரியர்களின் புனைவுகளுள் சில.[22]

புனல் அணியும் இச்செய்திக்குப் புராணகாரணமும் கூறப் பெறுகிறது. பெரும்பான்மையும் புனலணியும் செய்தி, பாம்பு, திங்கள் முதலியனவற்றோடு சேர்த்தே கூறப் பெற்றுள்ளது.

இயற்கையின் ஆற்றல் வலியது. அதை அடக்க இயலாது.

"நீர்மிகிற் சிறையுமில்லை..."[28]

என்னும் புறநானூற்றடி அத்தன்மையைத் தெளிவு படுத்து கிறது அடக்க இயலாத ஆற்றலுடைய நீரை-வெள்ளத்தைச் சுருக்கித் தன் சடையில் வைத்துக் கொண்டான் என்பது சிவபெருமான் வலிமையைக் காட்டுகிறது. இறைவனுக்குக் கட்டுப்பட்டதே இயற்கை; இறைவனுள் இயற்கை வந்தடங்கும். இயற்கையுள் இறைவன் அடங்கமாட்டான், இறைவன் இயற்கை ஆற்றலுக்கும் அப்பாற்பட்டவன் என்ற கருத்துக்களைத் தெளிவுபடுத்துவதற்கே இச்செய்தி கூறப்பெற்றுள்ளது என்பது பொருத்தமானதாகும்.

### 3.1.3 திங்களணிதல்

சிவபெருமான் தன் சடையில் பிறைமதியை அணிந்துள்ள தாகத் திருஞானசம்பந்தர் இறூற்று நாற்பதிடங்களிலும் திருநாவுக்கரசர் முந்நூற்று எழுபத்து நான்கிடங்களிலும் சுந்தரர் எண்பதிடங்களிலும் மாணிக்கவாசகர் முப்பத்தொரு இடங்களிலும் திருமாளிகைத் தேவர் ஓரிடத்தும் சேந்தனார்

ஆறிடங்களிலும் கருவூர்த்தேவர் ஆறிடங்களிலும் கண்டராதித்தர் ஓரிடத்தும் திருவாலியமுதனார் மூன்றிடங்களிலும் புருடோத்தும நம்பி மூன்றிடங்களிலும் திருமூலர் பத்திடங்களிலும் காரைக்காலம்மையார் இருபத்துநான்கு இடங்களிலும் சேரமான் பெருமாள் நாயனார் இருபத்தோரு இடங்களிலும் நக்கீர தேவநாயனார் ஆறிடங்களிலும் கபிலதேவநாயனார் பதினைந்திடங்களிலும் பரணதேவ நாயனார் மூன்றிடங்களிலும் இளம் பெருமானடிகள் பட்டினத்துப் பிள்ளையார் பன்னிரண்டு இடங்களிலும் நம்பியாண்டார் நம்பி ஆறிடங்களிலும் சேக்கிழார் முப்பத்திரண்டிடங்களிலும் குறிப்பிடுகின்றனர்.

"நீர்கொண்ட சடைமுடிமேன்மைதியம்"

"சடைமேற்கொள் பிறையானை"

"திங்கள் வெண் கொழுந்தணி சடையார்"

"ஒளிதரு வெண் பிறைச்சூடி"

"வெண்மதி சூடி விளங்கநின் றனன்"

என்பன அவற்றுள் சில.[24]

அவர்கள் மதி, திங்கள், பிறை என்ற சொற்களால் பிறையைக் குறிப்பிடுகின்றனர்.

சிவபெருமான் சடையில் பிறையணிந்துள்ள இச் செய்திக்குப் புராணக்காரணமும் கூறுவர்.

சிவ பெருமான் முழுமுதற் கடவுள் என்பதை எடுத்துக் காட்டவே இச்செய்தி கூறப் பெற்றது எனலாம். பழங்கால மக்கள் திங்களையே இறைவனாக வழிபட்டனர். அதற்கடுத்த காலத்து மக்கள், வேதகால மக்கள், திங்களுக்கு புனிதச் சாயல் பூசி அதைத் தனியாக, ஒரு கடவுளாக வழிபட்டனர். பல தெய்வ வழிபாடாகித் திங்கள் உருவங் கொடுக்கப் பெற்ற ஒரு கடவுளாக மாறியது. இவ்வழி ாட்டின், தொடர்ச்சியாய்த் திங்களையும் வழிபட்டு

இருப்பார்கள். இதைக்கண்ட திருமுறையாசிரியர்கள் பல தெய்வ வழிபாடு நீங்கி, சிவனே முழுமுதற் கடவுள் என்பது உணர்ந்த திங்களைச் சிவன் தலையில் அணிந்துள்ளதாகக் குறிப்பிடுகின்றனர். சிவனருளையே நோக்கி நிற்பன திங்களும் பிற தெய்வங்களும், சிவனே முழுமுதற் கடவுள் ஒளித் தெய்வங்கள் எல்லாம் சிவனருளாலேயே ஒளி தருகின்றன இயற்கையாகவும் ஒளி தருவனவாகவும் இருப்பனவும் சிவனுள் அடக்கம் என்பதுணர்த்தப்பெறுகிறது.

### 3.1.4 பாம்பணிதல்

சிவபெருமான் தன் தலையிலும், மார்பிலும், இடுப்பிலும், கையிலும் பாம்பணிந்துள்ளதாகப் பலவிடங் களில் திருமுறை ஆசிரியர்கள் பாடியுள்ளனர்.

திருஞான சம்பந்தர் முந்நூற்று முப்பத்தெட்டிடங் களிலும் திருநாவுக்கரசர் இருநூற்றுப் பதினான்கிடங்களிலும் கருவூர்த்தேவர் எட்டிடங்களிலும் திருவாலியமுதனார் ஓரிடத்தும் புருடோத்துமநம்பி ஓரிடத்தும் திருமூலர் இரண்டிடங்களிலும் காரைக்காலம்மையார் இருபத்தொரு விடங்களிலும் சேரமான் பெருமாள் நாயனார் பதினெட்டு இடங்களிலும் நக்கீரதேவநாயனார் பதின்மூன்றிடங்களிலும் கபிலதேவ நாயனார் பன்னிரண்டிடங்களிலும் பரணதேவ நாயனார் ஏழிடங்களிலும் இளம்பெருமானடிகள் மூன்றிடங் களிலும் பட்டினத்துப்பிள்ளையார் பதின்நான்கு இடங் களிலும் நம்பியாண்டார் நம்பி நான்கிடங்களிலும் சேக்கிழார். ஐம்பத்திரண்டு இடங்களிலும் சிவபெருமான் சடையிலும், மார்பிலும், இடுப்பிலும் பாம்பணிந்துள்ள செய்தியைக் குறிப்பிடுகின்றனர். சடையிலும் இடுப்பிலும் சிவபெருமான் அணிந்துள்ளதாகக் காட்டும் இடங்களே பெரும்பான்மையாக உள்ளன.

**"சுழலவாய் நாகம் பூண்டு"**

"விடலேறுபடநாகம் அரைக்கசைத்து"

"இரைக்கும் பாம்பும் எறிதரு திங்களும்
நுரைக்கும் கங்கையும் நுண்ணிய செஞ்சடை"

"பிறையும் புனலும் அலைரஞ் சூடும் இறைவற்கு"

"படங்கொள்நா கம்மரை யார்த்து"

"அரவம் அணிவார் பூசை"

"பிறையும் புனலும் அனலரவஞ் சூடும் இறைவர்"

என்பன அவற்றுள் சில.[25]

பெரும்பான்மையும் திங்களொடும், கங்கையொடும் மலரொடும் இணைத்தே பாம்பணிவது சொல்லப்பெற்று உள்ளது. இதற்கும் புராணக் காரணம் கூறுவர். 'பாம்பு என்றால் படையும் நடுங்கும்' என்பது மக்கள் மத்தியில் வழங்கும் ஒரு வழக்கு. பாம்பிற்கு அச்சப்படாதார் உலகில் மிகமிகக் குறைவு. அதன் நச்சுத்தன்மையால் மக்கள் வெறுப்பதுண்டு. நாகவழிபாடும் அச்சம் காரணமாக வந்ததே. நாகவழிபாடு மக்கள் மத்தியில் இருந்திருக்கலாம். அதை நீக்கவும் அவை இறைவனால் அடக்கப் பெறுவன என்பதை உணர்த்தவும் நன்மை, தீமை எதுவாயினும் இறைவன் ஏற்றுக் கொள்வான் என்பதுணர்த்தவும் இச்செய்தி கூறப்பெற்று இருக்கலாம் – சிவபெருமான் பரம்பொருள் என்பதுணர்த்த இச்செய்தி கூறப்பெற்றது என்பது பொருத்தமானது.

### 3.1.5. யானைத்தோலை அணிந்து கொள்ளல் அல்லது போர்வையாகக் கொள்ளல்

யானைத்தோலைப் போர்வையாகச் சிவன் அணிந்துள்ளதாகத் திருமுறையாசிரியர் பலவிடங்களில் பாடியுள்ளனர். யானையை உரித்ததாகவும் உரித்துப் போர்த்தியதாகவும் அவர்கள் தனித்தனியாகவும் இணைத்தும் கூறுகின்றனர்.

இச்செய்தியைத் திருஞான சம்பந்தர் நூற்று நாற்பது இடங்களிலும் திருநாவுக்கரசர் நூற்று இருபத்தேழு இடங்களிலும் சுந்தரர் ஐம்பத்தொரு இடங்களிலும் மாணிக்கவாசகர் பதினாறு இடங்களிலும் கருவூர்தேவர் ஓரிடத்தும் திருவாலியமுதனார் ஓரிடத்தும் சேதிராயர் ஓரிடத்தும் திருமூலர் நான்கிடங்களிலும் சேரமான் பெருமாள் நாயனார் மூன்றிடங்களிலும் நக்கீரதேவ ராயனார் நான்கிடங்களிலும் கபிலதேவநாயனார் நான் இடங்களிலும் பரணதேவநாயனார் இரண்டிடங்களிலும் இளம்பெருமானடிகள் இரண்டிடங்களிலும் பட்டினத்துப் பிள்ளையார் ஆறு இடங்களிலும் நம்பியாண்டார் நம்பி நான்கிடங்களிலும் சேக்கிழார் பத்தொன்பது இடங்களிலும் கூறியுள்ளனர்.

**"கைம்மாவின் தோல்போர்த்த காபாலி"**

**"புண்தலைய மால்யானை உரிபோர்த்தான்"**

**"மத்த யானை உரிபோர்த்து"**

**"போர்வை கவந்திகை கரியுரி"**

**"கைம்மலை ஈருரி போர்வை சாத்துங்கண்ணுதலார்"**

என்பன அவற்றுள் சில.[26] பெரும்பான்மையான இப்புனைவு களில் யானையின் வலிமை பலவகை அடைமொழிகளால் விதந்தோதப் பெறுகிறது. சிவபெருமானின் வலிமையைப் பெரிதும் போற்றிக் கூறவே அவ்வாறமைத்தனர். இச்செய்திக்குப் புராணக்காரணமும் காட்டுவர். விலங்கு களில் யானை மிகவும் வலியது. குறிஞ்சிக் காடுகளில் மலைவழிகளில் யானைகள் பல இயங்குதலைச் சங்க இலக்கியம் காட்டுகிறது. அப்புனைவுகளில் பெரும்பான் மையும் யானையின் வலிமை பெரிதும் காட்டப்பெறுகிறது. அத்தகைய யானையை அடக்கிப் பிளந்து, தோலை உரித்துப் போர்வையாக அணிந்து கொண்டான் என்று கூறுவதில் சிவபெருமானது பெருமை பெரிதும் காட்டப்

பெறுகிறது. அவர்கள் இயற்கைப் பொருள்களில் வலிய விலங்குகளாயினும் அடக்குதல் வல்லன் என்பதுணர்த்தி சிவபெருமானுக்கு முழுமுதற்றன்மைக்கு ஏற்றம் கொடுக்க இவ்வாறமைத்தனர்.

### 3.1.6 மானுரி

சிவபெருமான் மான்தோலை ஆடையாக அணிந்துள்ளான் என்று திருமுறையாசிரியர்கள் பலவிடங்களில் கூறியுள்ளனர். ஆயினும் இது பிற உரியை அணிந்துள்ள காட்சியைக் காட்டினும் மிகக்குறைவாகவே உள்ளன.

திருஞானசம்பந்தர் பன்னிரண்டு இடங்களிலும், திருநாவுக்கரசர் பதின்மூன்று இடங்களிலும் சுந்தரர் நான் கிடங்களிலும் காரைக்காலம்மையார் ஓரிடத்தும் சேக்கிழார் ஓரிடத்தும் இச்செய்தியைக் குறிப்பிட்டுள்ளனர்.

> "புள்ளி மானுரி உடையீர்"
> "புள்ளிமான் உரியாடை"
> "கருமானி னுரியாடை"
> "சிறுமா னுரியாடை"

என்பன அவற்றுள் சில.[27]

மான்தோலை உரித்து ஆடையாக அணிந்ததற்குப் புராணக்காரணம் காட்டுவர். மானின் தோலை உரித்தணிதல் சிவபெருமான் வீரத்திற்குச் சிறந்ததாகாது என்று எண்ணி மிகக்குறைவாக இச்செய்தியைக் குறிப்பிட்டுள்ளனர். திருமுறையாசிரியர்களுள் மிகக்குறைவானவர்களே இக் கருத்தைத் தம்பாடல்களுள் காட்டியுள்ளமைக்கும் காரணம் அதுவே.

### 3.1.7 புலியுரி

சிவபெருமான் புலித்தோலை ஆடையாக அணிந் துள்ளதைத் திருஞானசம்பந்தர் எழுபத்தொரு இடங்களிலும்

திருநாவுக்கரசர் நாற்பத்தெட்டு இடங்களிலும் சுந்தரர் பதினேழு இடங்களிலும் மாணிக்கவாசகர் ஆறு இடங் களிலும் திருமாளிகைத் தேவர் மூன்றிடங்களிலும் திரு வாலியமுதனார் மூன்றிடங்களிலும் புருடோத்துமநம்பி ஓரிடத்தும் திருமூலர் ஓரிடத்தும் காரைக்காலம்மையார் ஓரிடத்தும் நக்கீர தேவநாயனார் ஓரிடத்தும் பரணதேவ நாயனார் ஓரிடத்தும் இளம்பெருமானடிகள் ஓரிடத்தும் சேக்கிழார் ஓரிடத்தும் குறிப்பிடுகின்றனர்.

**"பூத நாத புலியதள் ஆடையன்"**
**"புலியதளரையினர்"**
**"புனிதனைபுலித் தோலுடை யானை"**

என்பன அவற்றுள் சில.[28] அவர்களில் புலித்தோல் அணி வதைத் தனியாக மிகுதியும் பாடியுள்ளார்கள். அவர்கள் மான்தோலுடனும் யானைத்தோலுடனும் இணைத்துப் பாடியுள்ளார். யானைத் தோலுக்குக் காட்டப்பெற்ற காரணம் இதற்கும் பொருந்தும். வலிய கொடிய விலங்குகளை அடக்கவல்லவன் சிவன் என்பதுணர்த்த அமைந்தது இச் செய்தி. இதற்கும் புராணக் காரணம் காட்டுவர் உளர்.

### 3.1.1.11 **கையில் மானை ஏற்றல்**

சிவபெருமான் அணிந்துள்ள இயற்கைப் பொருள்களோன ஒருபுடை ஒப்புமைகருதி இங்கு இது இணைக்கப்பெற்றது.

இச்செய்தியைத் திருஞானசம்பந்தர் அறுபதிடங் களிலும் திருநாவுக்கரசர் ஐம்பதிடங்களிலும் சுந்தரர் பதினான்கிடங்களிலும் மாணிக்கவாசகர் இரண்டிடத்தும் சேந்தனார் ஓரிடத்தும் கண்டராதித்தர் ஓரிடத்தும் திருவாலியமுதனார் ஓரிடத்தும் சேரமான் பெருமாள் நாயனார் ஓரிடத்தும் நக்கீரதேவநாயனார் இரண்டிடங் களிலும் கபிலதேவநாயனார் ஓரிடத்தும் பரணதேவ நாயனார் ஓரிடத்தும் இளம்பெருமானடிகள் ஓரிடத்தும்

நம்பியாண்டார் நம்பி ஓரிடத்தும் சேக்கிழார் பதினேழு இடங்களிலும் குறிப்பிடுகின்றனர்.

> "சிறு மான்மறி யீர்"
> "செழு மான்மறிக் கையினான்"
> "மானை இடத்ததொர் கையன்"
> "கைம்மான் மறியார்"

என்பன அவற்றுள் சில.[29]

இதை இறைவனுடைய அருளல் தன்மைக்கு உதாரண மாகக் காட்டவும் தன்னிடம் வந்து சரணடைபவர்களைச் சிவன் காப்பான். அவர்கட்கு முழுமையான பாதுகாப்பு உண்டு என்பதுணர்தற்கு இத்தகு செய்தி அமைந்தது எனலாம். மானினம் மிரட்சி உடையது. சிறுசிறு சலனங் களுக்கும் அச்சப்படுவனவாகும் ஆயினும் அவை சிவபெருமானிடத்தில் இருக்கும்போது அச்சம் நீங்கி வாழ்வதாகக் காட்டுகிறது அக்கருத்து.

### 3.1.10 எருதேறல்-வாகனமாதல்

எருது, ஏறு, பெற்றம், ஆன், விடை எனப் பல பெயர் களால் திருமுறைகளில் ஆளப்பெற்றுள்ளது. சிவபெருமான் எருதினை ஊர்தியாகக்கொண்ட செய்தியைத் திருஞான சம்பந்தர் இருநூற்று இருபத்தொன்பது இடங்களிலும் திருநாவுக்கரசர் நூற்றுஎழுபது இடங்களிலும் சுந்தரர் எழுபத்தைந்து இடங்களிலும் மாணிக்கவாசகர் இருபத்து நான்கு இடங்களிலும் பூந்துருத்தி நம்பி காடவநம்பி ஓரிடத்தும் திருவாலியமுதனார் நான்கிடங்களிலும் திருமூலர் பதினோரு இடங்களிலும் காரைக்காலம்மையார் இரண்டிடங்களிலும் சேரமான் பெருமாள் நாயனார் பத்திடங்களிலும் நக்கீர தேவநாயனார் ஐந்திடங்களிலும் கபிலதேவ நாயனார் பன்னிரண்டு இடங்களிலும் பரணதேவ நாயனார் எட்டிடங்களிலும் இளம்

பெருமானடிகள் மூன்றிடங்களிலும் அதிராவடிகள் ஓரிடத்தும் பட்டினத்துப் பிள்ளையார் எட்டிடங்களிலும் நம்பியாண்டார் நம்பி ஓரிடத்தும் சேக்கிழார் எண்பத் தொன்பதிடங்களிலும் குறிப்பிடுகின்றனர்.

**"பைங்கண்வெள் ளேற்றண்ணல்"**
**"சீருடைச் செங்கண்வெள்ளேறேறிய செல்வர்"**
**"பாயும் விடையொன் றதுவேறி"**
**"அடல் விடைப் பாக"**
**"அமலை விடை ஊர்தி"**
**"செங்கண் மால்விடை யார்"**

என்பன சில.[30] இதற்கும் புராணக்காரணம் காட்டுவார் உளர்.

பசுவை ஊர்தியாகக் கொள்வதை அறத்திற்குக் குறியீடாகக் கூறுவர். மேலும் ஆனினங்கள் பிறர்க்குப் பயன்படுவன; தனக்கெனப் பயன் எதிர்பாராதன; மிகவும் அமைதியான விலங்கு பலவகையிலும் மக்களுக்குப் பயன் படுவன. மேலும் இந்தியாவில் பசு புனிதமாகக் கருதப் பெறும் ஒன்று. ஒரு மன்னன் பிறிதொரு மன்னன் மேல் போர் செய்வதற்கு முன் அப்பகை நாட்டிலுள்ள ஆனிரைகளைக் கவர்வான். பசுக்களை காத்தல் நிமித்தமாக அச்செயல் நடைபெறுகிறது. மக்களிடத்தில் புனிதமானதாகக் கருதப்பெற்ற ஒன்றைச் சிவன், ஊர்தி யாகக் கொண்டார் எனில் இறைவனும் புனிதன். தன்னைச் சேர்வார்க்குப் புனிதத்தைத் தருபவன் என்பதுணர்த்துகிறது அது.

மேலும் பசுவின் ஒவ்வொரு உறுப்பிலும் பல தேவர்கள் முனிவர்கள் இருப்பதாக மக்கள் மத்தியில் இன்றும் நம்பிக்கை உள்ளது. அந்நம்பிக்கை பல தெய்வவழிபாட்டைக் காட்டுகிறது. அத்தேவர்களின் உருவாக விளங்கும் ஆனினத்தின் மேல் சிவன் அமர்ந்துள்ளான் என்றே கூறினர்.

சிவனே பரம்பொருள். அவனுக்குக் கீழ்ப்பட்டவர்களே பிற தேவர்கள் என்னும் கருத்து தோன்றுகிறது. இவ்வடிப் படையிலும் இக் கருத்து புனையப் பெற்றிருக்க வாய்ப்புண்டு.

### 3.1.9 கேழல் எயிறு

சிவபெருமான் கேழலின் எயிற்றைத் தம் மார்பில் அணிந்துள்ளதைத் திருஞானசம்பந்தர் இருபத்திரண்டிடங் களிலும் திருநாவுக்கரசர் பத்திடங்களிலும் சுந்தரர் நான் கிடங்கிலும், மாணிக்கவாசகர் ஓரிடத்தும் காரைக்கால் அம்மையார் ஓரிடத்தும், சேக்கிழார் ஓரிடத்தும் குறிப்பிடு கின்றனர். பெரும்பான்மையும் இது ஆமையணிவதோடு சேர்த்தே கூறப் பெற்றுள்ளது.

> **"ஏனமருப்பினோ டெழிலாமை யிசையப்பூண்டார்"**
> **"பூண்டதோர் கேடில் எயிறும் பொன்திக ழாமை"**
> **"வல்லேனக் கொம்பணிந்து மாதவனை"**
> **"வெள்ளேனப் பருக்கோடு பூண்ட பிரானை"**

என்பன அவற்றுள்சில.[31] இக்கருத்திற்கும் புராணக் காரணம் கூறுவாருளர். தன்னை எதிர்க்கிற, தன்னாற்றல் அறியாத பகைவரை அழிக்கும் ஆற்றல் பெற்றவன் சிவன் என்பது ணர்த்த இக்கருத்து பாடப் பெற்றுள்ளது.

### 3.1.8 ஆமையோடு அணிதல்

சிவன் தன்மார்பில் ஆமையோடு அணிந்துள்ளதாகத் திருஞானசம்பந்தர் நாற்பதிடங்களிலும் திருநாவுக்கரசர் எட்டிடங்களிலும் சுந்தரர் ஆறிடங்களிலும் பட்டினத்துப் பிள்ளையார் இரண்டிடங்களிலும் குறிப்பிடுகின்றனர்.

> **"விரைதருமார்பிற் படவரவாமையைக் கணிந்தவர்"**
> **"என்பும் ஆமையும் பூண்டு"**
> **"பூண்பதோர் இளவாமை"**

என்பன அவற்றுள் சில.[32] ஏனத்தின் எயிற்றுக்குக் கூறிய காரணம் இதற்குப் பொருந்தும். இதற்கு கருத்துக்கள்

மிகுதியும் தேவாரமூவர் பாடல்களிலே காணப்பெறு கின்றன. அவர்கள் மீண்டும் மீண்டும் இறையழகைக் கண்டு பாடியதும் மேலும் அவர்கள் நூல் இறைவன் புகழ் கிளத்தும் நூலாக இருப்பதும் அதற்குக் காரணமாகும். வீரம், அருளால் முதலிய இறைவன் குணநலன்களைத் புகழ்கிளத்தும் பாக்களில் அமைத்தல் இயல்பானதாகும்.

### 3.2. இயற்கைப் பொருள்களால் வழிபடல்

திருமுறையாசிரியர்களில் பெரும்பாலோர் பூவும் நீரும் பச்சிலையும் கொண்டு இறைவனை ஏத்தும் எளிய வழி பாட்டையே பலவிடங்களில் தம்நூலுள் கூறியுள்ளனர்.

திருஞான சம்பந்தர் எண்பத்து நான்கு இடங்களிலும் திருநாவுக்கரசர் இருபத்தொரு இடங்களிலும் சுந்தரர் மூன்று இடங்களிலும் திருமூலர் இருபத்தொரு இடங்களிலும் இதைக் குறிப்பிடுகின்றனர்.

**"வண்ண நன் மலர்கள்தூவி வாழ்த்துவார்"**

**"கடிகமழ் மாமலரிட்டுக் கறைமிடற்றானடி காண்போம்"**

**"சுரும்பார் விரைமல ரவைதூவி"**

**"நலகா மலரால் அருச்சிமின்"**

என்பன அவற்றுள் சில.[33]

மலரிட்டு வழிபடுதல் மிக எளிய வழிபாடு, காலச்சூழ் நிலையில் இவ்வெளிய வழிபாடு மக்களிடைக் காட்டப்பெற வேண்டிய ஒன்றாக விளங்கியது சமணரும் பௌத்தரும் மக்கள் ஆன்மீக நிலையில் உயர்நிலை பெறத் தவமும் யோகமும் செய்தல் வேண்டும் என்ற கருத்தைப் பரப்பினர். மக்கள் அதைக் கடினமாக எண்ணினர். அந்தக் காலத்தில் தான் இவர்கள் தம் பழைய காலத்து வழிபாட்டை நினைவுக்குக் கொண்டுவரப் பல இடங்களில் அதைப் பாடுகின்றனர்.

திருமூலர் ஒருபச்சிலையே போதும் இறைவனை ஏத்து தற்கு என்று குறிப்பிடுகிறார். ஆன்மீக நெறியின் எளிமை.

பழையன போற்றல் எனும் அடிப்படையில் இவை மக்கள் மத்தியில் மீண்டும் புத்துணர்வு பெறச்செய்தனர். எளியவழி பாடே போதும். அவ்வழிபாட்டையே பெரிதும் விரும்பு வான் என்னும் கருத்தை உணர்த்த எழுந்தது ஆகும்.

## 3.3 இறைவன் இறைவி உறுப்பு நலன்களை – அழகுகளை – இயற்கையொடு ஒப்பிட்டுக் காணல்

சிவபெருமான், உமையம்மையின் உறுப்பு நலன்களுக்கு இயற்கைப் பொருள்கள் உவமையாக வந்துள்ளமையைக் காண்பதிது.

### 3.2.1 சிவபெருமான் அழகும் இயற்கைப் பொருளுவமைகளும்

திருமுறையில் சிவபெருமானின் திருவடியும், திருமிடறு, திருச்சடை, திருமேனியழகு பல உவமைகளால் அழகு படுத்திக் காட்டப்பெற்றுள்ளன.

#### 3.3.1.1 திருவடியும் இயற்கைப் பொருளுவமைகளும்

சிவபெருமான் திருவடியழகில் ஈடுபட்டத் திருமுறை ஆசிரியர்கள் பல்வேறு உவமைகளால் அத்திருவடியழகைப் புனைந்துள்ளனர். திருஞானசம்பந்தர் தம்பாடல்களுள் சிவபெருமான் திருவடிகளுக்கு ஒப்புமையாகப் பத்திடங் களில் மலரைக் குறிப்பிடுகிறார். மேலும் அத்திருவடிகட்கு ஒப்புமையாகக் கொன்றைமலரையும் தாமரையையும் மூன்றிடங்களில் ஒப்புமையாகக் காட்டுகிறார்.[284]

"விரையினல்ல மலர்ச்சே வடியாரே"
"பங்கயம்மலர்ப் பாதர்"

என்பன அவற்றுள் சில.[34]

திருநாவுக்கரசர் இருபத்தைந்து இடங்களில் அத் திருவடிகட்கு மலரை ஒப்புமையாக்குகிறார். இங்கு எவ்வித மலரின்பெயரும் குறிக்கவில்லை. பொதுவாக மலர், பூ, போது எனும் பொதுச் சொற்களால் அதைக் கூறுகிறார்.

மேலும் பதின்மூன்று இடங்களிலும், தாமரையையும் காந்தளை ஓரிடத்திலும் மாணிக்கம் வயரத்தை பவளத்தை ஓரிடத்திலும் மாணிக்கத்தையும் கதிரை இரண்டிடங்களிலும் திங்களை இரண்டிடங்களிலும் தீத்திரளை இரண்டிடங் களிலும் ஒப்புமையாகக் காட்டுகிறார்.

திருமுறையாசிரியர்களிலேயே மிகுதியாகத் திருவடி களைப் பாடியவர் இவரே. மிகுதியான உவமைகளைத் தந்தவரும் இவரே. ஆவார். திருவடியை எண்ணி எண்ணிப் பாடும் நிலை இவரிடத்துக் காணப்பெறுகிறது. ஒரு பதிகத்தில் பாடல் முழுவதும் பாடலில் வரிகள் முழுவது மாகத் திருவடிகளேயே புகழ்ந்து பாடுவனவாக உள்ளன. அவண் பலவிதமான உவமைகள் கூறப்பெற்றுள்ளன. காலம் வீணே கழிந்ததற்கு இரங்கும் தன்மைபடைத்த இவர் அத்திருவடியைப் பற்றும் ஏக்கத்தோடு பாடியிருப்பார் எனலாம். பிற திருமுறையாசிரியர்கள் திருவடியின் மென்மையையும், நிறவன்மையையும் ஒப்புமைப்படுத்திக் காட்ட இவரோ திருவடியின் அருமையையும் பரம்பொருளின் சிறப்பினையும் தெளிவுபடுத்துகிறார். திருவடியின் அருமையும் பெருமையும் உணர்த்த பவளம், மாணிக்கம் கதிர்மதி முதலான உவமைகளைப் பயன் படுத்தியுள்ளார் எனலாம்.

**"மலர்ச்சே வடியென்மேல் வைத்தாய்"**
**"அரும்பித்த செஞ்ஞாயிறு ஏய்க்குமடி"**

என்பன அவற்றுள் சில.[35]

சுந்தரர் ஓரிடத்தில் பொதுவாக மலரையும் மூன்றிடங் களில் தாமரையையும் திருவடிகளுக்கு ஒப்புமையாகக் காட்டுகிறார்.

**"ஓரிக் கனகக் கமல மலரன்ன சேவடி"**

என்பன அவற்றுள் ஒன்று[36] இவர் மலர்களை மட்டுமே திருவடிகளுக்கு ஒப்புமையாகக் காட்டுகிறார்.

மாணிக்கவாசகர் தம் பாடல்களுள் ஏழிடங்களில் பொதுவாக மலரையும் நான்கிடங்களில் தாமரையையும் ஒப்பிட்டுக் காட்டுகிறார். திருமாளிகைத்தேவர் இரண்டிடங் களிலும் மலரை ஒப்புமையாகக் காட்டுகிறார். கருவூர்த் தேவர் இரண்டிடங்களில் பொதுவாக மலரையும் ஓரிடத்தில் தாமரையையும் திருவடிகட்கு ஒப்பிடுவார். திருவாலியமுதனார் இரண்டிடங்களிலும் புருடோத்தும நம்பி இரண்டிடங்களிலும் பொதுவாக மலரை ஒப்புமைப் படுத்துவர்.

திருமூலர் ஆறு இடங்களில் பொதுவாக மலரையும் ஆறிடங்களில் தாமரையையும் திருவடிகட்கு ஒப்பிடுவார்.

காரைக்காலம்மையார் ஓரிடத்தும் சேரமான் பெருமாள் நாயனார் ஓரிடத்தும் தாமரையை ஒப்பாக்குவர். பரணதேவ நாயனார் இரண்டிடங்களிலும், பட்டினத்துப் பிள்ளையார் ஓரிடத்தும் மலரை ஒப்புக்காட்டுவர்.

நம்பியாண்டர் நம்பி இரண்டிடங்களில் தாமரையை ஒப்பிடுகின்றார். தாமரையை இருபத்தைந்து இடங்களிலும் உவமையாக்கிக் காப்டுவார்.

**"பதுமநற் போதன்ன பாதத்தர்"**
**"பாத பங்கயம் பணிவித்து"**
**"மலர்ச்சே வடிகள்"**
**"அந்தா மரைபோல் அடி"**
**"பாத பங்கஜம் பணிவித்து"**
**"விரைமலர்த்தாள் போற்றி"**
**"புண்டரிகக்கழல் போற்றி"**
**"அம்பலத்தாடுவான் மலர்ச்சிலம்படி"**
**"பதுமநற் போதன்ன பாதத்தர்"**

என்பன சில.[37]

மிக அதிக இடங்களில் திருவடியை ஒப்பிட்டுக் காட்டியவராகச் சேக்கிழார் காணப்பெறுகிறார். பெரிய புராணம் அறுபத்து மூன்று நாயன்மார்களின் வரலாற்றைக் கூறும் நூல். அதில் அப்பாத்திரங்கள் இறைதிருவடியைப் புகழ்வதாகவும், காண்பதாகவும் பலவிடங்களில் வருவதால் இவர் மிகுதியாகத் திருவடிக்கு இடமளித்துள்ளார். ஆயினும் மிகுதியான உவமைகளைத் தந்தவர் திருநாவுக்கரசே ஆவார்.

### 3.3.1 திருமிடறு

சிவபெருமான் திருமிடறு கருநீல நிறமுடையது. சிவபெருமான் உண்ட ஆலகாலவிடம் மிடற்றிலேயே தங்கிவிட்டதால் செம்மைத்திருமேனியில் மிடறு மட்டும் கருநீலமாகக் காட்சியளிக்கிறது. அத்திருமிடற்றின் அழகினைப் பலவகை உவமைகளால் பாடுகின்றனர்.

திருஞானசம்பந்தர் நாற்பத்து நான்கிடங்களில் நீல மணியையும் எட்டிடங்களிலும் மேகத்தின் கருமையையும் ஓரிடத்தில் நீலமலரையும் ஓரிடத்தில் கருப்பு மலரையும் ஓரிடத்தில் காசைமலரையும் ஒப்புமையாக்கிக் காட்டுகிறார்.

திருநாவுக்கரசர் நீலமணியைப் பதினெட்டிடங்களிலும் கருமேகத்தை ஒன்பதிடங்களிலும் குவளை மலரை ஓரிடத்தும் குன்றிமணிய ஓரிடத்தும் நீலமலரை ஓரிடத்தும் இருளை ஏழிடத்தும் ஒப்புமையாக்கிக் காட்டுகின்றனர் சுந்தரர் தம்பாடலுள் திருமிடற்றுக்கு உவமையாக நீலமணியை ஐந்திடங்களிலும் கருமுகிலை மூன்றிடங் களிலும் இருளை ஓரிடத்தும் குறிப்பிடுகின்றார்.

மாணிக்கவாசகர் நீலமணியை ஓரிடத்தும் குவளையை இரண்டு இடங்களிலும் கருமுகிலை ஓரிடத்தும் காவிமலரை ஓரிடத்தும் மிடற்றுக்கு உவமையாக்குகிறார்.

திருமாளிகைத்தேவர், கருவூர்த்தேவர் ஆகிய இருவரும் ஒவ்வோரிடத்தில் மட்டும் குவளையையும் மிடற்றுக்கு ஒப்புமையாகக் காட்டுகின்றனர்.

காரைக்காலம்மையார் மிடற்றுக்கு உவமையாக இருளை மூன்றிடங்களிலும் கருமேகத்தை ஓரிடத்தும் இராக்காலத்து இருண்ட நீரின் நிறத்தை ஓரிடத்தும் நக்கீர தேவநாயனார் தம்பாடல்களுள் நீலமணியை ஓரிடத்தும் முகிலை மூன்றிடங்களிலும் கபிலதேவநாயனார் நீலமணியை மட்டும் ஓரிடத்தும் பட்டினத்துப் பிள்ளையார் ஓரிடத்திலும் இருளையும் சிவன். மிடற்றுக்கு உவமையாகக் காட்டு கின்றனர்.

சேக்கிழார் நீலமணியை எட்டிடங்களிலும் இருளை மூன்றிடங்களிலும் குவளை மலரை இரண்டிடங்களிலும் மிடற்றுக்கு ஒப்புமையாகக் காட்டுகிறார்.

> **''மணியார் திகழ் கண்டம் உடையான்''**
> **''வானிடை முகில்புல்குமிடறர்''**
> **''காசைமலர் போல் மிடற்று''**
> **''இருளுடைய கண்டத்தார்''**
> **''குன்றியிலடுத்தமேனிக் குவளையங்கண்டர்''**
> **''இராநீர் இருண்டமை கண்டத்தீர்''**
> **''பான லார்மணிமணி கண்டன்''**

என்பன அவற்றுள் சில.[38] சிவபெருமான் திருமிடற்றுக்கு ஒப்புமையாக நீலமணியையும், கருமுகிலையும் இருளையும், குவளைமலரையும் கூறுதல் எல்லார்மாட்டும் பொதுவாகக் காணப்பெறுகிறது. இவர்களுள் திருநாவுக்கரசரும் சுந்தரரும் மட்டும் குன்றிமணியை உவமையாகக் காட்டு கின்றனர். சிவந்த மேனியில் கருநிறமிடறுடைய சிவன் திருமேனிக்கு மிகப் பொருத்தமாக அவ்வுவமை அமைந்து உள்ளது. காரைக்காலம்மையார் ஒரு புதிய உவமையைத்

தந்துள்ளார். இருளின் நிறத்தைப் பிறர் மிடற்றுக்கு ஒப்பிட இவர் இருண்ட காலத்து நீரின் கருப்புநிறத்தை ஒப்புக் காட்டுகிறார்.

செம்மேனியம்மான் மிடறுமட்டும் கருமையாக உள்ளது. உடனே அனைவர் கண்ணிலும் படக்கூடியது. ஆகவேதான் அனைவரும் இதைப் பாடினர். மேலும் பிற கடவுளர்களின் உறுப்புகளின் அழகு யாவும் பாடப்பெறினும் மிடற்றினைப் பாடுவாரில்லை. சிவபெருமானின் திருமிடறு மட்டுமே போற்றிப் புனையப்பெறுகிறது.

அதுவன்றியும் இதில் ஓர் உள்பொருளும் உள்ளது அக்கரிய திருமிடற்றைக் கூறும்போதெல்லாம் சிவபெருமான் ஆலகாலவிடத்தை உண்டு தேவர்களைக் காத்த செய்தியும் மனக்கண்ணில் வருகிறது இங்கும் பிறதேவர்களினும் சிவபெருமானே உயர்ந்தவன் என்பது காட்டப்பெறுகிறது. இதன் மூலம் சிவனே பரம்பொருள் என்பதுணர்த்த மிகுதியாகச் சிவபெருமானின் திருமிடறு பாடபெற்றுள்ளது எனலாம்.

### 3.3 1.2 இறைவன் திருச்சடையழகும் இயற்கையுவமைகளும்

சிவபெருமான் திருச்சடை செந்நிறம் பொருந்தியது. அச்சடையழகில் ஈடுபட்டத் திருமுறைச் சான்றோர் பலர் பலவகையான உவமைகளைத் தந்துள்ளனர்.

திருஞானசம்பந்தர் தம் பாடல்களுள் சடையின் நிறத்திற்கு ஒப்புமையாகத் தீயின் நிறத்தை எட்டிடங் களிலும் மின்னலைப் பதினெட்டு இடங்களிலும் பவளத்தை இரண்டிடங்களிலும் பொன்னை ஓரிடத்தும் குறிப்பிடுகிறார். திருநாவுக்கரசர் தீயை நான்குகிடங்களிலும் மின்னலை நான்கிடங்களிலும் பவளத்தை இரண்டிடங்களிலும் மாலைக் காலத்து ஒளியை ஓரிடத்தும் திருச்சடைக்கு உவமையாகக் காட்டுகிறார்.

சுந்தரர் பவளத்தை ஓரிடத்தும் மின்னலை நான்கு இடங்களிலும் மாணிக்கவாசகர் மின்னலை நான்கிடங் களிலும் திருச்சடைக்கு ஒப்பாக்கினார்.

கருவூர்த்தேவர் ஓரிடத்தும் திருவாலியமுதனார் தீயை ஓரிடத்தும் திருமூலர் பவளத்தை ஓரிடத்தும் தீயை ஓரிடத்தும் திருச்சடைக்கு ஒப்பாக்கினார்.

காரைக்காலம்மையார் மின்னலை ஓரிடத்தும் செக்கர் வானை ஓரிடத்தும் மாலை ஒளியை ஓரிடத்தும் சடைக்கு ஒப்பிடுகிறார்.

சேரமான் பெருமாள் நாயனார் தம்பாடல்களுள் திருச்சடைக்கு உவமையாகத் தீயை இரண்டிடங்களிலும் மின்னலை இரண்டிடங்களிலும் கதிரின் ஒளிக் கற்றையை ஓரிடத்தும் குறிப்பிடுகிறார்.

நக்கீர தேவநாயனார் திருச்சடைக்குவமையாக மின்னலை மூன்றிடங்களிலும் பட்டிணத்துப்பிள்ளையார் மின்னலை ஓரிடத்தும் பவளத்தை ஓரிடத்தும் நம்பி யாண்டார் நம்பி மின்னலை ஓரிடத்தும் குறிக்கின்றனர்.

சேக்கிழார் மின்னலைப் பத்தொன்பது இடங்களிலும் செக்கர்வானை ஏழிடங்களிலும் தீயை இரண்டிடங்களிலும் திருச்சடைக்கு உவமையாகக் காட்டுகின்றார்.

**"எரிதரு சடையினர்"**
**"மின்னியல் செஞ்சடை"**
**"மின்னார் செஞ்சடை"**
**"மாலைச் சடையும் முடியுங் கண்டேன்"**
**"அவ்வான் மின்போல் வளர்சடை"**
**"எரிகின்ற வெங்கதிர் ஒத்தது செஞ்சடை"**
**"செக்கர்ச் சடை மவுலி"**

என்பன அவற்றுள் சில.[39]

தீயையும் பவளத்தையும் மின்னலையும் சிவபெருமான் திருச்சடைக்கு உவமையாகக் காட்டுதல் எல்லோரிடத்தும் பொதுவாகக் காணப்பெறுகிறது.

மாலைக்காலத்து ஒளியின் அழகை ஒப்பிடுதல் திருநாவுக்கரசர் காரைக்கால் அம்மையார் ஆகிய இருவரிடம் மட்டும் காணப்பெறுகிறது. இறைவன் திருமேனிக்குக் கூறப்பெற்ற செக்கர்வான் திருச்சடைக்கும் கூறப்பெற்றதைக் காரைக்காலம்மையார், சேக்கிழார் ஆகிய இருவரிடம் மட்டும் காணப்பெறுகிறது.

செக்கர்வானும் அந்தியொளியும் இரண்டும் ஒன்றுதான். செக்கர் வானத்தால் மாலைக் காலத்து ஒளி, மஞ்சள் கலந்து செம்மையாகக் காட்சி அளிக்கும். இவ்வழகிய காட்சி காண்போர் கண்ணைக் கவரும். திருமுறையாசிரியர் களின் சமயத் தொடர்பான அழகியலுணர்வுக்கு மிகச் சிறந்த எடுத்துக்காட்டு இது.

இயற்கையின் அழகில் இறைவனைக் காணும் அடிப்படையில் இதுவும் ஒன்று. இங்கு அவ்வழகிய உணர்வின் மூலம் இறைவனின் திருச்சடையழகுக் காணப்பெறுகிறது; காட்டப்பெறுகிது.

### 3.3.1.4 சிவபெருமான் திருமேனியழகு

இறைவன் திருமேனியும் திருச்சடையைப் போலவே செந்நிறத்தது. அச்செந்நிறத்திருமேனியழகைத் திருமுறை யாசிரியர்கள் பலவகை உவமைகளால் காட்டியுள்ளனர். அதுவன்றியும் அவற்றுள் திருநீற்றுத் திருமேனியையும் பாடியுள்ளார்.

சிவபெருமான் திருமேனிக்குத் திருஞானசம்பந்தர் தீயின் செந்நிறத்தை ஐம்பது நான்கிடங்களிலும் அந்தியொளியை நான்கிடங்களிலும் மின்னலை மூன்றிடங்களிலும் பவளத்தை

ஏழிடங்களிலும் செக்கர்வானை ஓரிடத்தும் கதிரொளியை ஓரிடத்தும் உவமையாகக் காட்டுகிறார்.

"அழலார் வண்ணத் தடிகள்"
"அந்திப் படியனார்"
"பவளம் போதுருவனார்"

என்பன அவற்றுள் சில [40] இவரே திருநீற்றுத் திருமேனியின் அழகையும் காட்டியுள்ளார். சங்கின் வெண்மை நிறத்தை இரண்டிடங்களிலும் பாலின் வெண்மையைப் பதினைந்து இடங்களிலும் குறிப்பிடுகிறார்.

"பாலன நீற்றர்"
சங்கே யொத்தொளிர் மேனிச் சங்கரன்"

என்பன அவற்றுள் சில[41] மிகுதியான குறிப்புகளைத் தந்தவர் இவரே ஆவார்.

திருநாவுக்கரசர் தம்பாடல்களுள் சிவன் திருமேனிக்குத் தீயை நாற்பத்தொரு இடங்களிலும் பவளத்தை இருபத்து நான்கு இடங்களிலும் அந்திச் செவ்வானைப் பத்தொன்பது இடங்களிலும் கதிரவன் ஒளியை ஐந்து இடங்களிலும் மின்னொளியை மூன்றிடங்களிலும் தளிர் நிறத்தை இரண்டிடங்களிலும் தாமரையை ஓரிடத்தும் உவமையாகக் காட்டுகிறார்.

"செக்கர்வா னொளியினானை"
"எரிகின்ற இளஞா யிறென்னமேனி"
"காய்கதிர்ச் சோதியானை"

என்பன அவற்றுள் சில[42]

இவரும் திருநீற்றுமேனியைப் பாடுகிறார். அதற்கு உவமையாகச் சங்கின் வெண்மையை ஓரிடத்தும் பாலின் வெண்மையைப் பதினான்கிடங்களிலும் முத்தின் வெண்மையை ஓரிடத்தும் குறிப்பிடுகிறார்.

"சங்கொத்த மேனிச் செல்வ"[43]

என்பன அவற்றுள் ஒன்று.

சுந்தரர், சிவபெருமான் திருமேனிக்கு ஒப்புமையாகத் தீயை எட்டிடங்களிலும் பவளத்தை இரண்டிடங்களிலும் அந்தியொளியை மூன்றிடங்களிலும் கதிரொளியை ஓரிடத்தும் மின்னலை மூன்றிடங்களிலும் தாமரையை ஓரிடத்தும் முருக்கமலரை ஓரிடத்தும் குறிப்பிடுகிறார்.

"அந்தி வானமும் மேனியோ"
"செக்கர்வா னத்திள ஞாயிறன்னோனே

என்பன அவற்றுள் சில.[44]

இவரும் திருநீற்றுத் திருமேனிக்கு வமையாகப் பாலின் வெண்மையை ஈரிடங்களிலும் முத்தின் வெண்மையை ஓரிடத்தும் குறிப்பிடுகிறார்.

"பால்வெண் ணீற்றன்"[45]

என்பது அவற்றுள் ஒன்று.

மாணிக்கவாசகர் செக்கர்வானை மூன்றிடங்களிலும் எரிசேர்தளிரை ஓரிடத்தும் தீயை எட்டிடங்களிலும் மின்னலை ஓரிடத்தும் பவளத்தை ஓரிடத்திலும் உவமை யாகக் காட்டுகிறார்.

"செக்கர் போலுந் திருமேனி"
"மின்னொளி கொண்ட பொன்னொளி திகழ"

என்பன சில,[46] சிவபெருமான் திருமேனி திருமாளிகைத் தேவர் செக்கர்வானை ஓரிடத்தும் கருவூர்த்தேவர் தாமரையை ஓரிடத்தும் தீயை இரண்டிடங்களிலும் பவளத்தை ஓரிடத்தும் அந்திமொழியை இரண்டிடங்களிலும் திருவாலிய முதனார் தீயின் நிறத்தை இரண்டிடங்களிலும் ஒப்புமையாகக் காட்டுகின்றனர்.

ஒன்பதாம் திருமுறையில் திருவாலியமுதனார் மட்டுமே திருநீற்றுத் திருமேனிக்கு உவமையாகப் பாலின் வெண்மையை ஓரிடத்தும் முத்தின் வெண்மையை ஓரிடத்தும் பனிபடர்ந்த பவளமலையை ஓரிடத்தும் குறிப்பிடுகிறார்.

திருமூலர் ஏழிடங்களில் தீயையும் ஓரிடத்தில் அந்தி யொளியையும் ஓரிடத்தில் தாமரையையும் திருமேனிக்கு ஒப்புமையாக்குகிறார் இவரும் திருநீற்றுத் திருமேனிக்கு உவமையாகப் பாலின் வெண்மையை இரண்டிடங்களில் கூறியுள்ளார்.

காரைக்காலம்மையார் எரியின் நிறத்தை நான்கிடங் களிலும் மின்னலை இரண்டிடங்களிலும் பவளத்தை இரண்டிடங்களிலும் செக்கர்வானை இரண்டிடங்களிலும் காலைக்கதிரை ஓரிடத்தும் உவமையாகக் காட்டுகிறார்.

சேரமான் பெருமாள் நாயனார் ஞாயிற்றொளியை ஓரிடத்தும் பவளத்தை ஓரிடத்தும் காட்டுகிறார்.

அவரே திருநீற்றுத் திருமேனிக்குப் பாலின் வெண்மையை ஓரிடத்துக் காட்டுகிறார். நக்கீரதேவ நாயனாரும் இவ்வுவமையை ஓரிடத்துக் காட்டுகிறார். மேலும் தீயை இரண்டிடங்களில் செந்திருமேனிக்கு உவமையாக்குகிறார். கபிலதேவநாயனார் எரியை ஓரிடத்தும் கதிரை ஓரிடத்தும் அந்தி ஒளியை ஓரிடத்தும் பரணதேவநாயனார் தீயை ஓரிடத்தும் திருநீற்றுத் திருமேனிக்குப் பாலின் வெண்மையை ஓரிடத்தும் இளம் பெருமான்அடிகள் எரியை ஓரிடத்தும் செக்கர்வானை ஓரிடத்தும் பட்டினத்துப்பிள்ளையார் அந்திவானை ஓரிடத்தும் ஒப்பிட்டுக் காட்டுகின்றனர்.

சேக்கிழார் அந்திவானை மூன்றிடங்களிலும் தீயை ஓரிடத்திலும் பவளத்தை ஓரிடத்திலும் மாணிக்கத்தை

ஓரிடத்திலும் திருமேனியின் அழகுக்கு ஒப்பிடுகின்றார்.

"பால் வெண்ணீற்றன்ன"
"விரிகின்ற ஞாயிறு போன்றது மேனி"
"தழற்கொண்ட சோதிச்செழு மேனி"

என்பன அவற்றுள் சில.[47]

நிறத்தின் அடிப்படையில் அவை உவமையாயினும் அதற்குமேலும் ஓர் உள்பொருள் அதற்குள்காணமுடியும். எரியும் ஞாயிறும் திங்களும் பழங்காலத்தில் தனித்தனிக் கடவுளாக வழங்கப் பெற்றன. அவையாவும் பலதெய்வ வழிபாட்டு வகையில் அடங்கும். அவற்றின் நிறத்தைச் சிவபெருமானின் திருமேனிக்கு ஒப்பிடுவதால் அவை சிவபெருமானுக்குள் அடக்கம் என்பதை உணர்த்தி நிற்கின்றன. சிவனே பரம்பொருள் என்னும் கருத்துக்கு இவ்வுமைகள் அமைந்தன எனலாம்.

### 3.3.2 இறைவியின் உறுப்புநலன்களும் இயற்கையுவமைகளும்

உமையம்மையைப் பூங்கொடியோடும் பூங்கோதையோடும் ஒப்பிட்டுக் காண்பர். திருஞானசம்பந்தர் ஐந்திடங்களில் பூங்கொடியாகவும் இரண்டிடங்களில் மலர்க்கோதையாகவும் உமையம்மையைக் காட்டுகிறார். குவளைக் கோதையாகத் திருநாவுக்கரசர் உமையம்மையை ஓரிடத்துக் காட்டுகிறார். மாணிக்கவாசகர் பூங்கொம்பாகக் காட்டுகிறார்.

#### 3.3.2.1 திருவடி

திருமுறையுள் உமையம்மையின் திருவடிக்கும் பஞ்சியும் தாமரையும் தளிரும் உவமையாகக் கூறப்பெற்றுள்ளன.

திருஞானசம்பந்தர் ஐந்திடங்களிலும் திருநாவுக்கரசர் ஆறிடங்களிலும் சுந்தரர் மூன்றிடங்களிலும் பஞ்சியை உமையம்மையின் திருவடிக்கு ஒப்பிடுகின்றனர்.

"பஞ்சுலாவிய மெல்லடிப் பார்ப்பதி"
"பஞ்சேர் மெல்லடி மாமலை மங்கை"
"பஞ்சின் மெல்லடிப் பாவை"

என்பன அவற்றுள் சில.[48]

தாமரைமலரைத் திருஞானசம்பந்தர் ஓரிடத்தும் திருநாவுக்கரசர் ஓரிடத்தும் பட்டினத்துப்பிள்ளையார் ஓரிடத்தும் திருவடிக்கு ஒப்பிடுகின்றனர். அவற்றுள்

"பங்கயச் சீறடி யாள்"[49]

என்பதொன்று.

சுந்தரர் மட்டும் ஓரிடத்தில் தளிரைத் திருவடிக்கு ஒப்புமையாகக் கூறுகிறார். பட்டினத்துப்பிள்ளையார் ஒருவரைக் தவிர்த்த பிறர் தேவார மூவர்களை இவ்வுமையின் இறைவியின் திருவடியின் மென்மையும் அழகும் உணர்த்தப் பெறுகிறது.

### 3.3.2.2 இடை

உமையம்மையின் இடைக்கு உவமையாகக் கொடியும் மின்னலும் அரவும் திருமுறையில் காட்டப்பெற்றுள்ளது.

**கொடியிடை:** உமையம்மையின் இடைக்குக் கொடியை உவமையாகத் திருஞானசம்பந்தர் ஆறிடங்களிலும் திருநாவுக்கரசர் இரண்டிடங்களிலும் சுந்தரர் மூன்றிடங்களிலும் பட்டினத்துப்பிள்ளையார் ஓரிடத்தும் நம்பியாண்டார் நம்பி ஓரிடத்தும் குறிப்பிடுகின்றனர்.

"பொற்கொடியிடைத் துவர்வாய்"
"கொடிகள் பூ நுண்ணிடையாள்"

என்பன அவற்றுள் சில.[50] கொம்பு எனவும் குறிக்கப் பெற்றுள்ளன.

### 3.3.2.2.1 மின்னலிடை

திருஞானசம்பந்தர் பதஇடங்களிலும் திருநாவுக்கரசர் பத்திடங்களிலும் சுந்தரர் இரணடிடங்களிலும் திருவாலிய முதனார் ஓரிடத்தும திருமூலர் ஓரிடத்தும் மின்னலை உமையம்மையின் இடைகக்கு ஒப்புமையாகக் காட்டியுள்ளார்.

**"மின்போன் மருங் குன்மட வாளோடு"**

**"மின்னி னேரிடையாள் உமை"**

என்பன அவற்றுள் சில.[51]

### 2. அரவிடை

திருஞானசம்பந்தர் இரண்டிடங்களிலும் சுந்தரர் நான்கு இடங்களிலும் மாணிக்கவாசகர் ஓரிடத்தும் இடைக்கு அரவினை ஒப்புமையாகக் காட்டியுள்ளார்.

**"பரவேரிடை மடவாள் உமை"**

**"அரவேரிடையாள்"**

என்பன அவற்றுள் சில.[52]

மின்னலும் கொடியும் இடைக்கு உவமையாக வருவது மரபு வழிப்பட்டது. அரவு உவமையாக வந்துள்ளது, புதுமையாக உள்ளது.

### 3.3.2.3 உமையல்குல்

திருஞானசம்பந்தர் பதின்மூன்றிடங்களிலும் திருநாவுக்கரசர் மூன்றிடங்களிலும் சுந்தரர் ஐந்திடங்களிலும் உமையம்மையின் அல்குலுக்கு ஒப்புமையாகப் பாம்பைக் காட்டுகின்றனர்.

**"பையா ரரவே ரல்கு லாளொடும்"**

**"பையா ருமரவே ரல்கு லாளிவன்"**

என்பன அவற்றுள் சில.[53]

### 3.3.2.4 கொங்கை

உமையம்மையின் கொங்கைக்கு உவமையாக பொதுவாக அரும்பினையும் கோங்கு, தாமரை முகையை யும் இவர்கள் காட்டுகின்றனர்.

திருஞானசம்பந்தர் கோங்கின் முகையை இரண்டிடங் களிலும் குரும்பையை ஓரிடத்தும் உமையம்மையின் கொங்கைக்கு உவமையாக்குகிறார்.

அரும்பினை உவமையாகத் திருநாவுக்கரசர் ஓரிடத்தும் திருஞானசம்பந்தர் நான்கிடங்களிலும் மாணிக்கவாசகர் ஓரிடத்தும் ஒப்பாகக் காட்டுகின்றனர். தாமரை முகையைப் பட்டினத்துப் பிள்ளையார் ஓரிடத்தில் காட்டுகிறார்.

**"அரும்பின் முலையாள் பங்கன்"**
**"கோங்கன்ன குவிமுலையாள்"**

என்பன அவற்றுள் சில.[54] இவையாவும் மரபுவழி வந்தனவே

### 3.3.2.5. முகம்

திங்களை உமையம்மையின் முகத்திற்கு திருஞான சம்பந்தர் இரண்டிடங்களிலும் சுந்தரர் ஓரிடத்தும் ஒப்பு மையாகக் காட்டியுள்ளனர்.

**"பங்கய மாமுகத்தா ளுமை"**[55]

என்பது அவற்றுள் ஒன்று. இதுவும் மரபு வழிப்பட்டது.

### 3.3.2.6. கண்

பொதுவாக மலரையும், சிறப்பாகக் குவளை, நீலம், தாமரை ஆகிய மலர்களையும் மானின் விழியையும் மாவின் வடுவையும், கயலையும், சேலையும் கண்ணுக்குத் திருமுறை யில் உவமைகளாகக் கூறப்பட்டுள்ளன.

மலர் எனப் பொதுவாக மலரை உமையம்மையின் கண்ணுக்கு உவமையாகத் திருஞானசம்பந்தர் மூன்றிடங்

களிலும் திருநாவுக்கரசர் நான்கிடங்களிலும் குறிப்பிடு கின்றனர். குவளை மலர்களைத் திருஞானசம்பந்தர் இரண்டிடங்களிலும் மாணிக்கவாசகர் ஓரிடத்தும் உமையம்மையின் கண்ணுக்கு ஒப்பிடுகின்றனர். நீலமலரை ஒப்புமையாகத் திருஞானசம்பந்தர் இரண்டிடங்களிலும் திருநாவுக்கரசர் ஓரிடத்தும் காவி மலரைத் திருஞான சம்பந்தர் இரண்டிடங்களிலும் திருநாவுக்கரசர் ஓரிடத்தும் சுந்தரர் ஓரிடத்தும் ஒப்பிடுகின்றனர்.

**"கருந்தட மலர்க்கண்ணி"**

**"நீல முண்தடங் கண்ணுமை"**

என்பன அவற்றுள் சில [56]

மானின் விழியைத் திருஞானசம்பந்தர் பதினெட்டு இடங்களிலும் திருநாவுக்கரசர் மூன்றிடங்களிலும் சுந்தரர் மூன்றிடங்களிலும் உவமையாகக் கூறுகின்றனர்.

**"மானை மேவிய கண்ணி னாள் மலை மங்கை"**[57]

என்பது அவற்றுள் ஒன்று.

மாவடுவைத் திருஞானசம்பந்தர் மூன்றிடங்களிலும் திருநாவுக்கரசர் மூன்றிடங்களிலும் சுந்தரர் ஓரிடத்தும் உவமையாகக் காட்டுகின்றனர்.

**"மாழையொண்கண் மடவாளை யொடு"**[58]

என்பது அவற்றுள் ஒன்று.

கயல்மீனைத் திருஞானசம்பந்தர் பதின்மூன்றிடங் களிலும் திருமாளிகைத் தேவர் ஓரிடத்தும் பட்டினத்துப் பிள்ளையார் நம்பியாண்டார் நம்பி ஓரிடத்தும் உமையம் மையின் கண்ணுக்கு உவமையாகக் காட்டியுள்ளனர்.

சேல்மீனைத் திருஞானசம்பந்தர் ஆறிடங்களிலும் திருநாவுக்கரசர் இரண்டிடங்களிலும் கெண்டைமீனைத்

திருநாவுக்கரசர் ஓரிடத்தும் சுந்தரர் இரண்டிடங்களிலும் உமையம்மையின் கண்ணுக்கு ஒப்பாகக் காட்டுகின்றனர்.

"கயலார் தடங்கண் ணியொடும்"
"சேலை யாடிய கண்ணுமை"

என்பன அவற்றுள் சில.[59] பெரும்பான்மையும் மரபு ஒட்டி வந்ததாக உள்ளன. திருமுறையாசிரியர்களுள் தேவார மூவர் இத்தகு குறிப்புகளை மிகுதியாகத் தந்துள்ளனர்.

### 3.3.2.7 நுதல்

திருஞானசம்பந்தர் ஐந்திடங்களிலும் திருநாவுக்கரசர் மூன்றிடங்களிலும் சுந்தரர் இரண்டிடங்களிலும் பட்டினத்தார் ஓரிடத்தும் உமையம்மையின் நுதலுக்குப் பிறையை ஒப்புமையாகக் காட்டுகின்றனர்.

"பிறையணி வாணுதலாள்"
"பிறைநுதல் அரிவையொடும்"

என்பன அவற்றுள் சில.[60] இவையும் மரபு வழி வந்தனவே.

### 3.3.2.8 இதழ்

உமையம்மையின் இதழுக்குக் கொவ்வை எனப்படும் தொண்டைக் கனியை உவமையாகத் திருஞானசம்பந்தர் நான்கிடங்களிலும் திருநாவுக்கரசர் நான்கிடங்களிலும் மாணிக்கவாசகர் ஓரிடத்தும் முருக்கிதழை உவமையாகத் திருஞானசம்பந்தர் ஓரிடத்தும் பவளத்தை உவமையாகத் திருஞானசம்பந்தர் ஓரிடத்தும் திருமாளிகைத்தேவர் ஓரிடத்தும் இலவமலரைச் சுந்தரர் ஓரிடத்தும் ஒப்பிடுகின்றனர்.

"தொண்டை வாயுமை"
"இலவவிதழ் வாயுமை"

என்பன அவற்றுள் சில.[61] இவையும் மரபுவழி வந்தனவே.

3.3.2.9 **கரம்**

திருநாவுக்கரசர் ஓரிடத்தில் கரத்தைக் கமலக்கரமாகக் காட்டுகிறார். திருஞானசம்பந்தர் காந்தள் விரலாக ஓரிடத்தில் காட்டுகிறார். பிற எக்குறிப்பும் இல்லை.

**"காந்தளம் மெல்விரல் தையல்"**[62]

என்பதது

3.3.2.10 **கூந்தல்**

உமையம்மையின் கூந்தலுக்கு உவமையாக மேகத்தைத் திருஞானசம்பந்தர் ஓரிடத்தும் காரைக்காலம்மையார் ஓரிடத்தும் அரவினை உவமையாகப் பட்டினத்துப் பிள்ளையார் ஓரிடத்தும் குறிப்பிடுகின்றனர்.

3.3.2 11 **மொழி**

கரும்பு, தேன், பால், கிளியின் குரல், குயிலின் குரல் முதலியன உமையம்மையின் இன் குரலுக்கு உவமையாக வந்துள்ளன.

கரும்பைத் திருஞானசம்பந்தர் இரண்டிடங்களிலும் திருநாவுக்கரசர் இரண்டிடங்களிலும் தேனைத் திருஞான சம்பந்தர் ஏழு இடங்களிலும் திருநாவுக்கரசர் ஓரிடத்தும் பாலைத் திருஞானசம்பந்தர் ஓரிடத்தும் திருநாவுக்கரசர் மூன்றிடங்களிலும் சுந்தரர் இரண்டிடங்களிலும் உமை யம்மையின் இன்மொழிக்கு உவமையாகக் கூறப்பெற்றுள்ளன.

**"கரும்பின் மொழியாள்"**

**"பாலொத்த மென்மொழியாள்"**

என்பன அவற்றுள் சில.[63]

3.3.2 1.2 **முறுவல்:**

முத்து, நிலவு, முல்லை எனும் மூன்றும் உமையம்மையின் முறுவலுக்கு உவமையாக வந்துள்ளன. இவை முறையே நிறம், ஒளி, கூர்மை பற்றி வந்தவனாகக் கொள்ளலாம்.

முத்தினை. உவமையாகத் திருஞானசம்பந்தர் ஆறிடங்களிலும் திருநாவுக்கரசர் மூன்றிடங்களிலும் சுந்தரர் ஓரிடத்தும்

முல்லையை உவமையாகத் திருஞானசம்பந்தர் இரண்டிடங்களிலும் திருநாவுக்கரசர் மூன்றிடங்களிலும் சுந்தரர் இரண்டிடங்களிலும்

நிலவின் ஒளியை உவமையாகத் திருஞானசம்பந்தர் ஓரிடத்தும் பட்டினத்துப் பிள்ளையார் ஓரிடத்தும் ஒப்பிடுகின்றனர்.

> "முத்த வெண்முறுவ லுமை"
> "முல்லை வெண்முறு வன்னகை யாள்"
> "கதிர்நிலாமுறுவல் செய்தருள

என்பன. அவற்றுள் சில.[64]

### 3.3.2.13 நடை

அன்னம், பிடி ஆகியவற்றின் நடையொடு உமையம்மையின் நடை ஒப்பிட்டுள்ளது.

அன்னத்தின் நடையைத் திருஞானசம்பந்தர் பத்திடங்களிலும் திருநாவுக்கரசர் இரண்டிடங்களிலும்

பிடியின் நடையதைத் திருஞானசம்பந்தர் மட்டும் நான்கிடங்களிலும் ஒப்பாக காட்டுகின்றனர்.

> "அன்னமென்ன மென் நடையாள்"
> "மாதர்ம டப்பிடியும் மடஅன்னம் மன்னதோர்
> நடையுடையும் மலை மகள்"

என்பன அவற்றுள் சில.[65]

### 3.3.2.14 சாயல்

உமையம்மையின் சாயலுக்கு மயிலின் சாயலைத் திருஞானசம்பந்தர் பதினொரு இடங்களிலும் திருநாவுக்கரசர் ஓரிடத்தும் ஒப்புமையாகக் காட்டியுள்ளனர்.

"மயிலுறு சாயல் வனமுலை யொருபால்"[66]

என்பதவற்றுள் ஒன்று.

### 3.3.2.14 மேனி

தளிர் உமையம்மையின் மேனிக்கு உவமையாக வந்துள்ளது.

பொதுவாகத் தளிர் உவமையாகத் திருஞானசம்பந்தர் ஏழிடங்களிலும் திருநாவுக்கரசர் மூன்றிடங்களிலும் மாந்தளிர் உவமையாகத் திருஞானசம்பந்தர் மட்டும் மூன்றிடங்களில் ஒப்புமைப்படுத்தியுள்ளனர்.

"முறிகொள்மேனி மங்கை"
"வருமாந் தளிர்மேனி மாது"

என்பன சில.[67]

உமையம்மையின் உறுப்பு நலன்களுக்கும் அழகு வந்த குறிப்புகள் பெரும்பான்மையும் தேவாரமூவருடையனவாகும். ஏறக்குறைய தொண்ணூறு விழுக்காடு தேவார மூவர்களின் குறிப்புகளே. அவருள்ளும் திருஞானசம்பந்தரே மிகுதியான குறிப்புகளைத் தந்துள்ளார். உமையம்மையிடம் ஞானப்பாலுண்ட நினைவும் நன்றியுணர்வும் அவர் உமையம்மையைப் பலவாறு புகழ்ந்து காட்டக் காரணமாகலாம்.

## 3.4.0 இறைவனின் பண்பு நலன்களும் இயற்கை பொருள் களும்

### 3.4.1 இறைவன் இனியவன்

கரும்பு, கனி, பால், தேன் ஆகிய இயற்கைப் பொருள்களோடு தொடர்பு படுத்தி இறைவனைக் காட்டுவதிலிருந்தும் இறைவனொடு ஒப்பிடுவதிலிருந்தும். சிவபெருமானது இனிமைத் தன்மை விளங்குகிறது. தனித்தனியாக ஒன்று சேர்ந்தும் இவற்றை ஒப்பிடுகின்றனர்.

இறைவனின் இனிமைக்குக் கரும்பை ஒப்புமையாகத் திருஞானசம்பந்தர் ஏரிடத்திலும் திருநாவுக்கரசர் பதினான்கிடங்களிலும் சுந்தரர் மூன்றிடங்களிலும் மாணிக்கவாசகர் ஏழிடங்களிலும் கருவூர்த்தேவர் மூன்றிடங்களிலும் திருமூலர் ஓரிடத்தும் குறிப்பிடுகின்றனர்.

கனியைத் திருஞானசம்பந்தர் ஓரிடத்தும் திருநாவுக்கரசர் ஏழிடங்களிலும் சுந்தரர் ஓரிடத்தும் மாணிக்கவாசகர் மூன்றிடங்களிலும் திருமாளிகைத் தேவர் ஓரிடத்தும் சேந்தனார் ஓரிடத்தும் கருவூர்த்தேவர் நான்கிடங்களிலும் பரணதேவ நாயனார் ஓரிடத்தும் பட்டினத்துப் பிள்ளையார் இரண்டிடங்களிலும் உவமையாகக் காட்டுகின்றனர்.

இறைவனைப் பாலாகத் திருநாவுக்கரசர் எட்டிடங்களிலும் மாணிக்கவாசகர் ஆறிடங்களிலும் சேந்தனார் ஓரிடத்தும் கருவூர்த்தேவர் இரண்டிடங்களிலும் கண்டராதித்தர் ஓரிடத்தும் திருவாலியமுதனார் ஓரிடத்தும் குறிப்பிடுகின்றனர்.

தேனாகத் திருஞானசம்பந்தர் மூன்றிடங்களிலும் திருநாவுக்கரசர் இருபத்திரண்டு இடங்களிலும் சுந்தரர் இரண்டு இடங்களிலும் மாணிக்கவாசகர் இருபத்து ஐந்திடங்களிலும் திருமாளிகைத் தேவர் ஓரிடத்தும் சேந்தனார் இரண்டிடங்களிலும் கருவூர்த்தேவர் இரண்டிடங்களிலும் கண்டராதித்தர் ஓரிடத்தும் திருவாலியமுதனார் ஓரிடத்தும் பட்டினத்தடிகள் நான்கிடங்களிலும் குறிப்பிடுகின்றனர்.

**"தேனைப் பாலைத் திகழொளியை"**

**"சிற்றம்பலத்தெந் திகழ்கனியை"**

**"தேனினுமினியர் பாலனநீற்றர் தீங்கரும்பனையர்"**

**"அமுதினைத் தேனை"**

**"ஆவின் பாலைஅண்ணிக்குந் தீங்கரும்பை"**

என்பன அவற்றுள் சில.[68] பால், தேன், கனி, கரும்பு எனும் நான்கும் இனிமை தரும். பொருள்கள். குடித்தல், நக்கல், தின்னல், கடித்தல் என்னும் நால்வேறு வகைமுறையில் அவற்றின் இனிமை பெறப்படுகிறது. இவ்வேறுபாடுகள் இறைவனருள் எல்லாவகையிலும் அருள் தரும் இனியவனாக விளங்குகிறார் என்பதைக் காட்டுகின்றன.

இவை இம்மைக்கு இன்பமும் இனிய உணவுமாயின. மேலும் பால், தேன் மருந்துமாகும் குணம் உண்டு. அவ்வாறே இறைவன் இனியனாய் இருப்பதொடு மருந்து மாக விளங்குகின்றான் என்பதைக் காட்டுகிறது.

### 3.4.2 இறைவன் ஆற்றல் (அ) வீரம்

கங்கை அணிதல், பாம்பணிதல், திங்களணிதல் முதலானவை இறைவன் ஆற்றலை, வீரத்தைக் காட்டும் குறியீடுகளாயின. அவையின்றி மேலும் களிறு; ஏறு சிங்கம், காளை என்ற விலங்கினங்களை இறைவனுக்கு ஒப்புமைப் படுத்தியும் சிலவிடங்களில் உருவகப்படுத்தியும் காட்டுவர்.

சிங்கத்தை திருநாவுக்கரசர் இரண்டிடங்களில் நக்கீர தேவநாயனார் ஓரிடத்தும் களிற்றைத் திருநாவுக்கரசர் இரண்டிடங்களிலும், சுந்தரர் ஓரிடத்தும் ஏற்றைத் திருநாவுக்கரசர் நான்கிடங்களிலும் சுந்தரர் மூன்றிடங் களிலும் பரணதேவர் ஓரிடத்தும் உவமையாகவும் உருவக மாகவும் அமைத்துக்காட்டுகின்றனர்.

**''சாவா மூவாச்**
**சிங்கமே உன்னடிக்கே போதுகின்றேன்''**
**''ஏறொப்பானை''**
**''வாரி மதக்களிறே போல்வான்''**

என்பன அவற்றுள் சில[69]

சில விலங்குகளைப் பிடித்துப் பிளந்து உரித்ததையும் சிலவற்றை அழித்து அவற்றின் பல், உரி போன்றவற்றை. அணிந்து கொண்டதும் இவ்வகையிலடங்குவன ஆகும்.

### 3.4.3 அருள்வள்ளல்

சிவன் அருளே உருவமாக எடுத்தவன், அவனருள் பருகப்பருக குறையாதது. இக்கருத்தைச் சுந்தரர் இரண்டிடங்களிலும் மாணிக்கவாசகர் ஒன்பதிடங்களிலும் சேந்தனார் மூன்றிடங்களிலும் கருவூர்த்தேவர் ஓரிடத்தும் திருமூலர் ஐந்திடங்களிலும் சேக்கிழார் ஓரிடத்தும் குறிப்பிடு கின்றனர்.

**"கரையிலாக் கருணை மாகடலை**
**திளைப்பதும் சிவனருட் கடலே"**

என்பன சில.[70] அவனுடைய அருள் பரந்து விரிந்தது; ஆழங்காண முடியாதது; எடுக்க எடுக்கக் குறையாதது என்பதுணர்த்த கடல் இங்கு உருவகமாக அமைந்தது. பக்தி இலக்கியங்களில் உருவகம் முக்கிய இடம் பெறும் ஒன்று.

திருவடியை நிழலாகக் காட்டும் பகுதியும் இவ்வகையில் அடங்குவனவே. திருவடி என்பது இறைவன் அருளைக் குறிப்பதே ஆகும். தமிழகத்தில் நிழல் பெரிதும் போற்றத் தக்கது. குளிர்நாடாகிய வெளிநாடுகளில் வெப்பம் வரவேற்கப்படுவதல் போல் வெப்பநாடாகிய தமிழகத்தில் குளிர்ச்சி வரவேற்கப்படுகிறது. வெப்பம் தணிய நிழல் பெரிதும் பயன்தருகிறது. ஆகவேதான் திருமுறையாசிரியர் களும் திருவடியை நிழலாக உருவகித்தனர்.

திருஞானசம்பந்தர் ஆறிடங்களிலும் திருநாவுக்கரசர் பன்னிரண்டிடங்களிலும் திருமூலர் ஓரிடத்தும் இளம்பெரு மானடிகள் ஓரிடத்தும் குறிப்பிடுகின்றனர்.

"அடிநிழல் அளியவோ"
"கேடிலாப்பொன் னடியின் நிழல்"
"அடிநிழற் கீழ்தன்றோ என்றனாருயிர்"

என்பன அவற்றுள் சில.[71]

நிழலும் இறைவனருளை உணர்த்தும் குறியீடாக அமைந்துள்ளன.

### 3.4.4 அரியவன்

இறைவன் அரியவன் என்பதுணர்த்த முத்து, பவளம், மாணிக்கம், மரகதம், வயிரவம் ஆகிய மணிகள் உவமையாகவும் உருவகமாகவும் கூறப்பெறுவது பலவிடங்களில் காணப்பெறுகிறது. இறைவனுக்கு உறுப்புகளுக்கு, மேனிக்கு உவமைகளாக வந்த இவை, அதனினும் மேம்பட்ட நிலையில் இங்குக் காட்டப்பெறுகின்றன.

நீல மணியைத் திருஞானசம்பந்தர் இரண்டிடங்களிலும் திருநாவுக்கரசர் பத்திடங்களிலும் சுந்தரர் ஐந்திடத்திலும் மாணிக்கவாசகர் ஓரிடத்தும் சேந்தனார் இரண்டு இடங்களிலும் குறிப்பிட்டுள்ளனர். இறைவனாக உருவகப் படுத்தியும் இறைவனுக்கு ஒப்புமைப்படுத்தியது.

முத்தினை இறைவனாக உருவகமாகவும் இறைவனை உவமையாகத் திருஞானசம்பந்தர் இரண்டிடங்களிலும் திருநாவுக்கரசர் பதினான்கிடங்களிலும் சுந்தரர் ஐந்திடங்களிலும் மாணிக்கவாசகர் ஓரிடத்தும் குறிப்பிடுகின்றனர்.

பவளத்தை இறைவனாக உருவகித்து திருஞான சம்பந்தர் ஓரிடத்தும் உருவகமாகவும் ஒப்புமையாகவும் திருநாவுக்கரசர் பதினைந்திடங்களிலும் சுந்தரர் இரண்டிடங்களிலும் திருவாலியமுதனார் ஓரிடத்தும் குறிப்பிடுகின்றனர்.

மரகதமாக இறைவனைத் திருநாவுக்கரசர் இரண்டிடங்களில் குறிப்பிடுகின்றார்.

வயிரமாக இறைவனைத் திருநாவுக்கரசர் மூன்று இடங்களிலும் சுந்தரர் ஓரிடத்தும் குறிப்பிடுகின்றனர்.

**''மாநீர் முத்தை மரகதத்தை மாமணியை''**

**''நித்திலத்தொத்தினை .. பவளத்தை''**

**''முத்தினை மணிதன்னை மாணிக்கத்தை ..**

**வயிரத்தை''[71]**

**''முத்தினை மணிதன்னை''**

**''மணியே முத்தே மரகதமே''**

என்பன அவற்றுள் சில [72] திருமுறையாசிரியர்கள் இறைவன் அரியவன் என்பதை உணர்த்த இவ்வுருவகங்களையும் உவமைகளையும் அமைத்தனர். மாணிக்கம் பவளம், மரகதம், முத்து முதலிய மணிகள் அரிய மணிகள். அவற்றை ஒப்பிடுவதன் மூலம் இறைவனின் அருமைத் தன்மை மக்களுக்கு காட்டப்பெறுகிறது. அதுவன்றியும் இறைவன் உயிரில் கலந்துள்ள இயல்புக்கு அதைக் காட்டாகக் கூறுவர். மணி தன்னில் இருந்து வெளிப்படும் ஒளியாலாயே சிறப்பு பெறுகிறது. மணியின் ஒளி மணியிலேயே பிரியற இருப்பது, பிரிக்க இயலாதது. அது போல இறைவன் உயிரில் கலந்துள்ளான் என்பதைக் குறிப்பிடலாம்.

## 3.5.0 இயற்கைப் பொருள்கள் இறைவனை வழிபடல்

ஆறு, கடல் முதலிய நீர்நிலைகளும், குரங்கு, யானை ஆகிய விலங்கினங்களும் கதிரவன் மதியாகிய இயற்கைப் பொருள்களும் இறைவனை வணங்குவதாகத் திருமுறையில் பலவிடங்களில் காணப்பெறுகின்றன.

### 3.5 1 நீர்நிலைகள்

1. ஆறுவழிபடுதல் – காவிரியும் மணிமுத்தாறும் இறைவனை வழிபடுவதாகத் திருமுறையாசிரியர்கள் காட்டி உள்ளார்கள்.

மணிமுத்தாறு திருமுதுகுன்றத்திறைவனை வணங்கி வழிபட்டுச்செல்வதாகத் திருஞானசம்பந்தர் இரண்டிடங் களிலும்

சுந்தரர் இரண்டிடங்களிலும் குறிப்பிடுகின்றனர்.

**"கொத்தார்மலா குளிர்சந்தகி லொளிரிகுங்**
**குமங்கொண்டு"**

**"முத்தாறுவந் தடிவழதரு முதுகுன்று"**
**"எத்திசை யுந்திரை யேற மோதிக் கரைகள் மேல்"**
**"முத்திமுத் தாறு வலஞ்செய் யும்முது குன்று"**

என்பன அவற்றுள் சில.[73]

காவிரி வழிபடுவதாகத் திருநாவுக்கரசர் ஓரிடத்தும் சுந்தரர் ஓரிடத்தும் சேக்கிழார் ஓரிடத்தும் குறிப்பிடு கின்றனர்

**"வம்பு லாமலர் நீரால் வழிபட்டுச்**
**செம்பொன் வார்கரை எண்ணில் சிவாலயத்து**
**எம்பிரானை இறைஞ்சலால்... காவிரி ."**

**"...கிளர்புரை காவிரி**
**வட்ட வாசிகை கொண்டடிதொழு தேத்தும்பாண்டிக்**
**கொடுமுடி"**

என்பன அவற்றுள் இரண்டு.[74]

பழங்கால மக்கள் ஆற்றினைத் தம் பொருளாதார வாழ்வுக்கு வளம் சேர்ப்பதாக வழிபட்டனர். இன்றும் ஆற்றுத்திருவிழாக்கள் தமிழகத்தில் நடைபெறுவதன் காரணமும் அதுவே. ஆற்றினை வழிபடுவதைக் காட்டிலும்

அவ்வாறே இறைவனை வழிபடுவதாகக் காட்டினால் சிவபெருமானின் தனித்தன்மைக்குப் பெருமை சேர்கிறது. அவ்வாற்றிற்கு மூலகாரணன் இயக்குபவன் யாவும் இறைவனாகிய சிவனே என்பதைக் காட்ட இவ்வகைப் புனைவு அமைந்திருக்கும். மேலும் மக்களுக்கு இறையுணர்வு ஊட்டுவதற்கு ஓர் உத்தியாகவும் இதைக் கொள்ளலாம்.

**2. கடல் வழிபடுதல்**

திருநாவுக்கரசர் மட்டும் கடல் இராமேசுரத்திறைவனை இறைஞ்சுவதாக ஓரிடத்தில் காட்டியுள்ளார்.

**"திரைகள்முத்தால் வணங்கும் திருவிரா மேச்சுரம்"**[75]

என்பதது.

கடல் தன்னுடைய அலைக்கரங்களால் இறைவன் திருவடியில் முத்துக்களையிட்டு வழிபடுவதாக அவர் காட்டியுள்ளார்.

பயன் கருதி கடலை இறைவனாக வணங்கி வழிபட்ட நிலை பழைய நிலை. அதைத் தெய்வ உருவமாக்கி வழிபட்டது இரண்டாம் நிலை. இன்றும் மீனவர்கள் கடல் தெய்வத்தை வணங்கும் நிலை உண்டு. அந்நிலையை மாற்றிக் கடலே இறைவனை வணங்குவதாகக் காட்டுவது சிவபெருமானின் பரம்பொருள் தன்மையை உயர்த்திக் காட்டுவதற்கே ஆகும். மேலும் உயிர்கள் உணர்த்தற்கும் இதைக் கொள்ளலாம்.

### 3.5.2 விலங்குகள் வழிபடுதல்

குரங்குகள், யானைகள் வழிபட்டதாகத் திருமுறை ஆசிரியர்கள் பலவிடங்களில் திருமுறையில் குறிப்பிடு கின்றனர்.

1. குரங்குகள் இறைவனை வழிபடுவதாகத் திருஞான சம்பந்தர் மூன்றிடங்களிலும் சுந்தரர் ஓரிடத்தும் குறிப்பிடு

கின்றனர். அவர்கள் கடுவன், மந்தி முதலிய குரங்குகளை இவ்வகைக்குக் காட்டுகின்றனர்.

> "மந்தி யேறி யினமாய் மலர்கள் பல கொண்டு
> முந்தித் தொழுது வணங்கும்"
> "மந்தி வந்து கடுவனொடு கூடிவணங்கும்"

என்பன அவற்றுள் சில.[76]

2. யானைகள் இறைவனை வணங்குவதாகத் திருஞான சம்பந்தர் ஐந்திடங்களிலும் திருநாவுக்கரசர் ஓரிடத்தும் சுந்தரர் இரண்டிடங்களிலும் குறிப்பிடுகின்றனர்.

> "பிடியெலாம் பின்செலப் பெருங்கை மாமலர்தழீஇ
> விடியலே தடமூழ்கி விதியினால் வழிபடும்"
> "பூந்தண் நறுவேங்கைக் கொத்திறுத்து மத்தகத்திற்
> பொலியவேந்தி
> "கூந்தற் பிடியும் களிறு முடன் வணங்கும்"

என்பன அவற்றுள் சில.[77]

இவற்றுள் விலங்குகளில் குரங்கும் யானையும் மட்டுமே இவ்வகை அமைப்பிற்குப் பயன்படுத்தியுள்ளனர். குரங்கின் குணங்களில் 'போலச் செய்யும்' செயல் மிகுதியாக உள்ளது. மனிதன் செயல்களைக் குரங்குகள் முழுமையாக அப்படியே செய்து காட்டும் அவை அலைகளிலும், காடுகளிலும் சிவனடியார்களும் முனிவர்களும் இறைவனை வழிபடும் முறையைப் பலகாலும் அங்குள்ள குரங்குகள் பார்த்திருக்கும். அவர்கள் செய்வது போலவே தானும் செய்திருக்கலாம். அதுவன்றியும் மக்களுணர்வை இறையுணர்வுக்காய் மாற்ற இதை ஒரு உத்தியாகப் பயன்படுத்தினர் என்று கொள்வதும் பொருந்தும். யானைகளும் மனிதர்கள் பழக்குவது போலச் செய்யும் பிற விலங்கினங்களைக் காட்டிலும் இவ்விரண்டு இனங்களை மனிதர் பழக்குவனவற்றை எளிதில் பற்றிக்

கொள்ளும். ஆகவே இவையே இவ்வகைக்குப் பயன்படுத்தப் பெற்றன.

இவர்கள் தம் நூல்களில் துணையொடு வந்து வணங்குவதாகக் காட்டுதல் இறைவழிபாடு இல்லற நெறியிலிருந்து செய்யக் கூடியது என்பதை உணர்த்த சமணர்கள் கூற்றுப்போல் தவம் செய்யத் தேவையற்றது என்பதுணர்த்தற்காகும்.

### 3.5.3 பறவைகள் வணங்குகள்

பறவைகளில் கிளி மட்டுமே இறைவனை ஏத்துவதாகத் திருமுறையில் காட்டப் பெற்றுள்ளன.

கிளிகளின் இச்செயல்களைத் திருஞானசம்பந்தர் ஐந்து இடங்களிலும் சுந்தரர் ஓரிடத்திலும் சேக்கிழார் மூன்று இடங்களிலும் காட்டுகின்றனர். கிளிகள் சோலைகளில் வேதங்களைக் கூறுகின்றன. வேதத்தின் பொருளைக் கூறுகின்றன. அங்குப் பிறர் கூறுகையில் ஏற்படும் தவறுகளை நீக்குகின்றன. 'அரகர' என சிவன் முன் பயில்கின்றன முதலான செயல்களை அவர்கள் கூறுகின்றனர்.

> **"வேதத் தொலியாற் கிளிசொற் பயிலும்"**
> **"அரகர என்றே சிவமுன் பயில்மொழி பகர்கின்றன"**
> **"பாரிசையும் பண்டிதர்கள் பயின்றோதுமோசை கேட்டு**
> **வேரிமலி பொழிற்கிள்ளை வேதங்கள் பொருட்சொல்லும்**

என்பன அவற்றுள் சில.[78]

பறவையினங்களில் கிளிக்குச் சொற்பயிலும் ஆற்றல் உள்ளது. சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளை என்னும் உலக வழக்கும் அதையே காட்டுகிறது. இன்னும் அதைக் கிளிவளர்ப்பாரிடம் காணமுடிகிறது. பிற பறவைகளுக்கு அத்தகு ஆற்றல் இல்லை. இக்காரணம் பற்றியே சங்க இலக்கியத்திலும் பல இடங்களில் கிளிக்குச் சொற்பயிற்றும் காட்சிகளாகக் காட்டியுள்ளனர். அங்குக் காதலுக்குப்

பயன்பெற்ற கிளி, இங்கு ஆன்மீகத்திற்குப் பயன்படுத்தப் பெறுகிறது.

பலவகையிலும் அறிவும் ஆற்றலும் கொண்ட பறவைகளாகிய கிளிகள் இறைவனை வணங்குவதின் மூலம் இவ்வாசிரியர்கள் மக்களின் மனத்தில் தாங்களும் இறை வழிபாட்டில் ஈடுபட வேண்டும் என்னும் உணர்வை ஊட்டுகின்றனர். மேலும் இறைவன் நாமம் கூறல், புகழ்கிளத்தல் ஆகிய செயல்களே இறைவழிகாட்டுக்குப் போதுமானவை என்பதுணர்த்தவும் இக்காட்சி காட்டப் பெறுகிறது.

### 3.5.4 கதிர்கள் வழிபடுதல்

சிவபெருமானைக் கதிரவனும் திங்களும் வழிபடுகின்றன. சிவனே பரம்பொருள் என்பதுணர்த்த இக்காட்சியமைக்கப் பெற்றுள்ளது. இது இருசுடரும் இறைவனும் என்னும் பகுதியில் விரிவாக ஆயப்பெற்றுள்ளது.

## 3.6 காணும் காட்சி யாவும் இறைக்காட்சியாக விளங்குதல்:

மெய்யுணர்வாளனுக்குத்தான் இத்தகுக் காட்சி அமையும். அவன் எப்போதும் இறைமையை நினைத்துக் கொண்டிருக்கிறான். அவனுடைய நெறி எப்போதும் தன்னையும் இறைவனையும் இணைத்துப் பார்க்கும் நெறி. உலகையும் அவனையும் நினைத்துப் பார்க்கும் நெறி. மெய்ஞ்ஞானியாகிய அவன், அவனே தானாகியவன் ஆகையால் அவனுக்குக் காட்சிகள் யாவும் இறைமைக் காட்சியாக விளங்கும்.

"உலக முழுவதும் உள்ள மெய்ஞ்ஞானிகள் ஒரே இயல்பினராகவே காணப்பெறுகின்றனர். காணப்பெற்றனர். அவர்களின் ஒரே மொழி நான் நேரிடையாக இறைவனைக் காண்கிறேன்; கண்டிருக்கிறேன் நீங்களும் வாருங்கள் வந்து காணுங்கள் என்பதே ஆகும். அவ்வகையில் இயற்கையில் மூல இறைமாட்சியைக் கண்ட திருமுறையாசிரியர்கள் தாம்

கண்ட காட்சியை மக்களும் காணுமாறு தம் பாடல்களில் படைத்து விடுகின்றனர்.

இத்தகைய காட்சிகளைத் திருநாவுக்கரசரும் மாணிக்க வாசகரும் சேக்கிழாரும் தெளிவாகக் காட்டுகின்றனர்.

1. **விலங்குகளின் செலவு**

திருநாவுக்கரசர் தம் வழிச்செலவின் போது திருவை யாற்றுக்கு அருகில் வரும்போது கண்டு, கேட்ட காட்சி களைச் சிறப்பாக இவ்வகைக்குக் காட்டலாம். விலங்கு களையும் பறவைகளையும் ஆணும் பெண்ணுமாக இறைவன் இறைவியாகக் காண்கிறார். அவர் திருவை யாற்றுப் பதிகத்தின் பதினொரு பாடல்களிலும் அக் காட்சியைக் காட்டுகிறார். களிறு, ஏனம், கலை, ஆடு ஆகிய விலங்கினங்களையும் குயில், மயில், மகன்றில், நாரை, கிளி ஆகிய பறவைகளையும் துணையொடு காண்கிறார்.

**"... ஐயா றடைகின்ற போது"**
**காதன் மடப்படி யோடுங் களிறு வருவன கண்டேன்"**
**"கோழி பெடையொடுங் குளிர்ந்து வருவன கண்டேன்"**

என்பன அவற்றுள் சில.[79]

திருநாவுக்கரசர் வரலாற்றைப் பாடிய சேக்கிழாரும் தன்னூலுள் அவர் கண்ட காட்சியை,

**"ஐயாற்றில் விரவும் சராசரம் எல்ராம்**
**காதல் துணையொடும் கூடக் கண்டேன்"**[80]

என்று கூறிச் சிறப்பிக்கிறார். "இயற்கை உலகை நோக்க நோக்க அர்த்த நாரீசுரத்தின் நுட்பம் இயற்கை உலகில் புல் முதல் மக்கள் ஈறாக உள்ள எல்லாம் ஆண் பெண் மயமாயிருத்தல் வெள்ளிடைமலை. பெண் ஆணாய்இலங்கும் இயற்கை உலகில் படம்- ஓவியம் அர்த்தநாரீசுரம்"[81] என்பார் கருத்திற்கேற்ப அவரின் கருத்து விளங்கக்

காணலாம். இது ஒரு மெய்ஞ்ஞானியின் பார்வையகத்தான் இருக்க முடியும். திருநாவுக்கரசர் காட்டும் இயற்கை இறைவனை வணங்குகின்ற பகுதியில் காட்டப் பெற்ற கடல் தன் அலைக்கரத்தால் இறைவனை வணங்கும் காட்சியும் இவ்வகையில் அடங்கும்.

2. **பொய்கையும் மலர்களும்:**

மாணிக்கவாசகரும் இரண்டிடங்களில் இக்காட்சியைக் காண்கிறார்; காட்டுகிறார். அவரின் கண்ணுக்குக் குவளை மலர்களும் தாமரை மலர்களும் மலர்ந்து பொலிந்து விளங்குகின்ற பொய்கையை இறைக்காட்சியாகக் காண்கிறார்.

> **"பைங்குவளைக் கார்மலரால் செங்கமலப் பைம்போதால்**
> **தங்கள் ... ... பொங்கும் மடு"**[82]

என்பது அது, அந்தப் பொய்கையே இறைவனின் இறைவியாகக் காட்சியளித்திருக்கிறது. மேலும் மழை உருவாகிப் பொழியும் காட்சியையும் இறைக்காட்சியாகக் காண்கிறார். இறைவியின் நிறம்போல் கருத்து, இடைபோல மின்ன, காலின் சிலம்புபோல சிலம்ப, புருவமென்ன வளைய அருளைப் போல மழை பொழிதல் காட்டுகிறார்.

> **"முன்னிக் கடலைச் சுருக்கி யெழுந்து உடையாள்**
> **என்னத் திகழ்ந்தெம்மை ஆளுடையாள் இட்டடியின்**
> **மின்னிப் பொலிந்தெம் பிராட்டி திருவடிமேற்**
> **...பொன்னஞ் சிலம்பிற் சிலம்ப**
> **இன்னருளே என்னப் பொழிவாய்"**[83]

என்று பாடல் அதைக்காட்டுகிறது.

3. **நரியின் ஊளையும் தவளை அரற்றலும்**

பட்டினத்துப்பிள்ளையார் தாம் கண்ட காட்சியைத் தன் பாடலில் அமைத்துள்ளார்.

> **"ஓடும் பலநரி ஊளைகேட் டரனைப்**
> **பாடின என்று படாம்பல அளித்தும்"**

"குவளைப் புணலில் தவளை அரற்ற
ஈசன் தன்னை ஏத்தின என்று
காசும் பொன்னும் கலந்து தூவி"

என்பன அவை.[84]

நரியின் ஊளையும் தவளையின் ஓசையும் இறைவனைப் பரவும் ஓசையாக அவர் கண்ணுக்கும் மனத்திற்கும் தெரிகின்றது. உலக உயிர்கள் யாவும் இறைவனால் படைக்கப் பெற்றன. அவையாவும் இறைவனையே ஏத்துகின்றன. தான் காணுகின்ற காட்சிகள் யாவும் இறைக் காட்சிகளே என்னும் மெய்ஞ்ஞானியின் கருத்தை இங்குக்காணமுடிகிறது.

## 4. நெற்படையில் தாமரை

சேக்கிழாரும் இத்தகைய இறைமைக் காட்சியைக் காட்டுகின்றார். இவர்தம் நூலுள் பதினொரு இடங்களில் இத்தகு காட்சி காணப்பெறுகிறது. மலர்க்காட்சியும் பயிர்க் காட்சியும் மலைக்காட்சியும் காவிரிக் காட்சியும் கடலொலி யும் இத்தகு காட்சிகளை அவர் தந்துள்ளார்

நெற்படையில் தாமரை பூத்துக்கிடக்கும் காட்சி வேள்விக்களத்தில் தீயாகவும் அத்தாமரையின்மேல் தேமாங் கனி இலை வழிவிழும் மதுவின் தோற்றம் ஆகுதிவேட்கும் காட்சியாகத் தோன்றியுள்ளது.

## 5. பொய்கை

அதுவன்றியும் பொய்கையில் மலர்ந்த மலர்களும் குவிந்த தாமரை மொக்கும் பூத்துக்கிடந்த பொய்கைக் காட்சி தில்லைக்குவரும் ஞானசம்பந்தரைக்கண்டு மலர்ந்த முகத் தோடும் குவிந்த சரத்தோடும் வணங்குவதாகத்

**"தாமரை மதுவாகப்**
**பொங்கு செம்முகை கரங்குவித் தலர்முகங் காட்டின**
**புனற்பொய்கை"[85]**

என்பவற்றுள் ஒன்று

6. **கடலொலி**

கடலொலியானது சேக்கிழார்க்கு,

**"எத்திசை யினும் அரவென்னும் ஓசைபோல்[86]**
**தத்துநீர்ப் பெருங்கடல் தானு ஆர்த்ததே"**

எனும் பாடலில் கடலொலி 'அர' எனும் ஓசையாகக் கேட்கிறது.

அவர்க்கு வானத்தின் இருட்டு அஞ்செழுத்து உணரா அறிவிலார் மனம் போலக் காட்சியளித்துள்ளது. பனி படர்ந்த மலை [இமயம்] திருநீறு பூசிய மலையாகக் காட்சி தந்துள்ளது. காவிரியின் ஆற்றொழுக்கு இறைவியின் கருணையைக் காட்டியுள்ளது. காவிரி மலர்களோடு செல்லுதல் இறைவனை வணங்குவதாகத் தெரிந்துள்ளது.

7. **நெற்கதிர் வளைதல்**

வயலில் சூல்முதிர் பாலைக் கொண்ட நெல், அரனுக்கு அன்பர் ஆன சிந்தைபோல அலர்ந்தன என்கிறார். நெற்கதிர் முற்றி வளைந்து காணப்பெறுதல் இறைவனை வணங்கும் பக்தரைக் காட்டுகிறது.

**"பக்தியின் பாலராக...**
**தலையினால் வணங்குமாபோல்"[87]**

...முதிர்தலை வணங்கி விளைந்ததாக அவர்க்குக் காட்சிதந்துள்ளது.

சேக்கிழார் மிகுதியாகக் குறிப்புகளைத் தந்துள்ளார். அவர்கள் காப்பியமாகையால் நாடுநகரச் சிறப்பின் இயற்கைப் புனைவில் இத்தகையன மிகுதியும் அமைக்கமுடிகிறது.

## 3.7 இறைவனும் இயற்கையும்

இப்பகுதியில் சிவபெருமான் இயற்கையாக விளங்குதலும் இயற்கையில் கலந்து விளங்குதலும், இயற்கைப் படைப்பவனாக விளங்குதலும் இயற்கையைக் கடந்தவனாக விளங்குதலும் ஆகிய கருத்துக்கள் தொகுத்தும் வகுத்தும் ஆயப் பெறுகின்றன.

### 3.7.1 இயற்கையாக இறைவன்

இறைவனை அட்டமூர்த்தி என்று அழைக்கும் மரபு பன்னிரு திருமுறையில் பலயிடங்களில் காணப்பெறுகிறது. மண், நீர் முதலான பஞ்சபூதங்களாகவும் கதிரவன், மதியாகிய இருசுடராகவும் உலகத்துயிர்களாகவும் இறைவன் விளங்குதலை அது குறிக்கின்றது.

சிவபெருமான் மண்முதலாகிய ஐம்பூதங்களாக விளங்குகிறான்; இருசுடராக விளங்குகிறான்; உலகத்துயிர்களாக விளங்குகிறான்; மழையாகவும், காலமாகவும், பருவமாகவும் பருவப்பயனாகவும் விளங்குகின்றான் என்று திருமுறையில் பலவிடங்களில் காணப்பெறுகின்றன. திருமுறையில் ஐம்பூதங்களாகவும் அட்டமூர்த்தியாகவும் ஒன்றாகத் தொகுத்த நிலையிலும் மண், நீர் எனத்தனித் தனியாகவும் அவற்றொடு சில சேர்த்தும் இறைவன் இயற்கையாக விளங்குவது காட்டப்பெற்றுள்ளது. தொகுத்து வகுத்தாய்தல் நோக்கி அவற்றைத் தனித்தனியாக இங்கு வகைப்படுத்தப் பெறுகிறது.

திருஞானசம்பந்தர் உலகம் எனும் பொதுச்சொல்லால் இறைவன் உலகமாக விளங்குவதை மூன்றிடங்களில் குறிப்பிடுகிறார். இறைவன் மண்ணாக விளங்குவதைப் பதினான்கு இடங்களிலும் நீராக விளங்குவதைப் பதினொரு இடங்களிலும் தீயாக விளங்குவதைத் தொண்ணூற்று

ஒன்பதிடங்களிலும் வளியாக விளங்குவதைப் பதினொரு இடங்களிலும் வானாக விளங்குவதைப் பதினொரு இடங்களிலும் கதிரவனாக விளங்குவதை ஏழிடங்களிலும் மதியாக விளங்குவதை நான்கிடங்களிலும் உயிராக விளங்குவதை மூன்றிடங்களிலும் குறிப்பிடுகிறார்.

**"அந்தமா யுலகாதி யுமானான்"**
**"மண்ணொடுங் ரனல்காலோ டாகாயம் மதியிரா**
**எண்ணிலவரு மிமான னிகபரமு கமண்டிசையம்**
**பெண்ணினொடான் பெருமை யொடு சிறுமையாம்**
**பேராளன்"**

என்பன அவற்றுள் சில.[87] பெரும்பான்மையான பாடல்களில் ஐம்பூதங்களாகச் சேர்த்தே குறிப்பிடுகிறார். இறைவன் தீயாக விளங்குவது இவரால் மிகையான இடங்களில் கூறப்பெறுகிறது. அவற்றுள்ளும் திருமாலும் பிரமனும் சிவபெருமானின் திருவடி, திருமுடி தேடிய புராணக்கதை கூறுமிடங்களில் இறைவன் எரியாக நின்றதைக் குறிப்பிடுகின்றார். இவர் மேலும் இறைவன் காலமாக விளங்குவதை இரண்டிடங்களிலும் மலையாக விளங்குவதை மூன்றிடங்களிலும் பருவவிளைவாக விளங்குவதை இரண்டிடங்களிலும் மழையாக விளங்குவதை மூன்றிடங்களிலும்குறிப்பிடுகிறார்.

**"பருவத்தில்வந்து பயனுற்ற பண்பன்"**
**"உலகிற்கொரு மழையானவன்"**

என்பன அவற்றுள் சில.[88] இவர் உலகப்பொருள்கள் இயற்கைப் பொருள்கள் எல்லாம் சிவபெருமானே என்னும் கருத்தினை இதன்மூலம் புலப்படுத்துகிறார்.

திருநாவுக்கரசரும் முன்னவர் போலவே இறைவனை அட்ட மூர்த்தியாகவும், ஐம்பூதங்களாகவும் தொகுத்துச் சொல்வதோடு தனித்தனியாகவும் பிறவற்றோடும் கவனித்தும் இக்கருத்தைப் புலப்படுத்துகிறார்.

பொதுவாக, உலகமாக இறைவன் விளங்குகிறான் என்பதை இருபத்தாறு இடங்களில் குறிப்பிடுகிறார்.

"சேய உலகமுஞ் செல்சார்பு மானானை"[89]

என்பனவற்றுள் ஒன்று.

சிவபெருமான் மண்ணாக விளங்குவதை நாற்பத்தாறு இடங்களிலும் நீராக விளங்குவதை ஐம்பத்தாறு இடங்களிலும் தீயாக விளங்குவதை அறுபத்தைந்து இடங்களிலும் வளியாக விளங்குவதை நாற்பத்தெட்டு இடங்களிலும் வானாக விளங்குவதை ஐம்பத்தேழு இடங்களிலும் கதிரவனாக விளங்குவதை நாற்பத்து மூன்றிடங்களிலும் மதியாக விளங்குவதை நாற்பத்து நான்கிடங்களிலும் உயிராக விளங்குவதைப் பதினாறு இடங்களிலும் திருநாவுக்கரசர் குறிப்பிடுகின்றார்.

" மலைநிலம் தீவளியா காசமாம் ஈசனை."
"நீரவன் தீயினொடு நிழலவன் எழிலதாய
பாரவன் விண்ணின்மிக்க பரமவன்"
"அட்டமூர்த்தியாய ஆதியை"
"நிற்பனவும், நடப்பனவும் நீயேயாகி"
"நீர்நிலந்தீ வளிகாற் றாகி நிற்பனவும் நடப்பனவு
மாயினானை"

என்பன அவற்றுள் சில.[90] இவரும் சிவபெருமான் தீயாக விளங்குவதை மிகுதியான இடங்களில் குறிப்பிட்டுள்ளார். அதைப் புராணக் கதையொடு இணைத்தும் கூறியுள்ளார்.

மேலும் காலமாக விளங்குதலை இரண்டிடங்களிலும் மின்னலாக விளங்குதலை மூன்றிடங்களிலும் விண்மீன்களாக விளங்குதலை மூன்றிடங்களிலும் மழையாக விளங்குதலைப் பதினொரு இடங்களிலும் இரவு பகலாக விளங்குதலை எட்டிடங்களிலும் கடலாக விளங்குதலைப் பதினைந்திடங்களிலும் குறிப்பிடுகிறார்.

"மின்னானை மின்னிடைச்சே ருருமி னானை
வெம்முகிலாய்
எழுந்துமழை பொழிவான் தன்னை"
"காற்றாகிக் கார்முகிலாய்க் காலம் மன்றாய்"
"அல்லாய்ப் பகலானாய் நீயே"

என்பன அவற்றுள் சில.[91]

திருஞானசம்பந்தரினும் இவர் இரவு பகலாகவும் திசைகளாகவும், விண்மீன்களாகவும், மின்னலாகவும் இறைவன் விளங்குதலைக் காட்டுகிறார். மேலும் எல்லா வகையிலும் இவர் திருஞானசம்பந்தரினும் மிகுதியான குறிப்புகளைத் தந்துள்ளார். இவர் எங்குக் காணினும் இறைவனாகவே கண்டுள்ளார். இவர் இறைவனாகிய சிவனையே எண்ணி ஏங்கித் தவித்த இடங்கள் இவர் பாடல்களில் மிகுதி, ஆகவேதான் இவர் மிகையான குறிப்புகளை இவ்வகையில் தந்துள்ளார்.

சுந்தரரும் முன்னிருவரைப்போல அட்டமூர்த்தியாகவும் ஐம்பூதமாகவும் விளங்குவதைத் தொகுத்தும், தனித் தனியாகவும், சிலவற்றோடு இணைத்தும் இறைவன் இயற்கையாக விளங்குதலைப் புலப்படுத்துகிறார். இறைவன் மண்ணாக விளங்குதலைப் பதினொரு இடங்களிலும் நீராக விளங்குதலைப் பதினொரு இடங்களிலும் தீயாக விளங்குதலை இருபது இடங்களிலும் வளியாக விளங்கு தலைப் பதினெட்டிடங்களிலும் வானாக விளங்குதலைப் பன்னிரண்டு இடங்களிலும் கதிரவனாக விளங்குதலை ஒன்பதிடங்களிலும் மதியமாக விளங்குதலை ஆறிடங் களிலும் உயிராக விளங்குதலை ஆறிடங்களிலும் இவர் குறிப்பிடுகிறார்.

"எட்டான மூர்த்தியை"[92]

என்பது அவற்றுள் ஒன்று.

ஐம்பூதமாகச் சேர்த்துக் காட்டும் இடங்களே இவர் பாடல்களில் மிகுதியாகக் காணப்படுகின்றன.

மேலும் காலமாக விளங்குதலை மூன்றிடங்களிலும் பகலிரவாக விளங்குதலை நான்கிடங்களிலும் மலையாக விளங்குதலை நான்கிடங்களிலும் கடலாக விளங்குதலை ஐந்திடங்களிலும் மழையாய் விளங்குதலை நான்கிடங் களிலும் மின்னலாக விளங்குதலை மூன்றிடங்களிலும் குறிப்பிடுகிறார். இவையும் தனித்தனியாகவும் ஒன்றோ டொன்றிணைத்தும் கூறப் பெற்றுள்ளன.

**"ஞாலம் ஞாயிறு மாகிநின் றார்கழல்"**
**"கார்க்கின் றமழை யாய்பொழி வானை"**
**"பகலுங் கங்குலு மாகிநின் றானை"**

என்பன அவற்றுள் சில.[93]

இவர் தரும் குறிப்புகளில் பெரும்பான்மையும் இறைவன் இயற்கையாக விளங்குகின்றான் என்னும் வகையில் அடங்குவனாகவே உள்ளன. இயற்கை இறைவன் படைப் பையும், இயற்கையில் இறைவன் கலப்பையும் இவர் பெரிதும் பாடவில்லை.

மாணிக்கவாசகர் தம்பாடல்களுள் இறைவன் உலகாக விளங்குகின்ற பொதுக் கருத்தை ஏழிடங்களில் குறிப்பிடு கிறார். இறைவன் மண்ணாக விளங்குதலை ஒன்பதிடங் களிலும் நீராக விளங்குதலை எட்டு இடங்களிலும் தீயாக விளங்குதலைப் பதினொரு இடங்களிலும் வளியாக விளங்குதலை எட்டிடங்களிலும் வானாக விளங்குதலைப் பதினெட்டு இடங்களிலும் கதிரவனாக விளங்குதலை நான்கு இடங்களிலும் மதியாக விளங்குதலை நான்கிடங்களிலும் உயிராக விளங்குதலை ஆறிடங்களிலும் குறிப்பிடுகிறார்.

**"தானே உலகேழும் ஆயானை"**
**"அனைத்துலகு மாய நின்னை"**

"பாரொடு விண்ணாய் பரந்த எம்பரனே"

என்பன அவற்றுள் சில.[94]

இவர் குறிப்புகளில் ஐம்பூதங்களாகவும் அட்டமூர்த்தி யாகத் தொகுத்தும் கூறுதல் மிகுதியாக உள்ளன. மேலும் இறைவன் வானாக விளங்குதலை மிகையாகக் குறிப்பிடு கிறார் இறைவன் எல்லாவற்றையும் தன்னுள் அடக்கும் தன்மையே பெரிதும் இவரைக் கவர்ந்திருக்கும். அதுவே மிகையான குறிப்புகள் தர ஏதுவாயிற்று.

ஒன்பதாம் திருமுறையில் திருமாளிகைத்தேவர், கருவூர்த் தேவர், திருவாலியமுதனர் ஆகிய மூவர்மட்டுமே இவ்வகையமைப்பில் பாடியுள்ளார்.

திருமாளிகைத் தேவர் உலகாய் விளங்குதலை மட்டும் பொதுநிலையில் இரண்டிடங்களில் குறிப்பிடுகிறார்.

"உலகாய் அல்லையா னாயை"[95]

இவற்றுள் ஒன்றில் விளங்குதலையும் காட்டிவிடுகிறார்.

ஐம்பூதமாகவோ, அட்டமூர்த்தியாகவோ. தனித்தனி யாகவோ இறைவனை இயற்கையாகக் காட்டவில்லை.

கருவூர்த்தேவர் இறைவன் அட்டமூர்த்தியாகவும், ஐம்பூதமாகவும் விளங்குதலைத் தொகுப்பாக இரண்டு இடங்கள் மட்டும் குறிப்பிடுகிறார்.

"அம்பரா அனலா அனிலமே புவி –
அப்புவே இந்துவே இரவி
உம்பரால் ஒன்றும் அறியொணா அணுவாய்
ஒழிவற நிறைந்த வொண்சுடரே"[96]

என்பனவற்றுள் ஒன்று.

திருவாலியமுதனார் இறைவன் ஐம்பூதமாக விளங்கு தலையும் அட்டமூர்த்தியாக விளங்குதலையும் குறிப்பிட

வில்லை. இவர் ஓரிடத்தில் மட்டும் இரவாகவும் பகலாகவும் விளங்குவதைக் குறுப்பிடுகிறார்.

"அல்லாய்ப் பகலாய் இரவாய் உருவாய்"97

என்பது அது.

ஒன்பதாம் திருமுறையில் இம்மூவர் மட்டுமே இவ் வகையில் பாடியுள்ளார் அவர்களும் மிகக் குறைந்த குறிப்புகளையே தந்துள்ளார்.

திருமூலர் சமயக்குரவர் நால்வர்களின் அமைப்பில் காணப்பெறுதல் போலவே தமது பாடல்களிலும் இறைவன் ஐம்பூதமாகவும் அட்டமூர்த்தியாகவும் விளங்குதல் காணப் பெறுகிறது இவர் இவ்வகையிலும் உலகப் படைப்பாளன் இறைவன் என்னும் கருத்தினையே மிகுதியாகத் தந்துள்ளார்.

சிவன் உலகமாக விளங்குதலைப் பொது முறையில் ஐந்திடங்களில் குறிப்பிடுகின்றார். மண்ணாக விளங்குதலை ஆறிடங்களிலும் நீராக விளங்குதலை ஐந்திடங்களிலும் தீயாக விளங்குதலைப் பதினைந்திடங்களிலும் வளியாக விளங்குதலை ஒன்பதிடங்களிலும் வானாக விளங்குதலை ஏழிடங்களிலும் உயிராக விளங்குதலை மூன்றிடங்களிலும் குறிப்பிடுகின்றார்.

"உயிராய் உலகமதாகி"
"தானே தனக்குத் தராதலம்"
"மண்ணுளும் நீரனல் காலுளும் வானுளுங்
"கண்ணுளும் மெய்யுளும் காணலு மாயே".

என்பன அவற்றுள் சில.98

மேலும் இவர் இறைவன் மழையாக விளங்குதலை நான்கிடங்களிலும் மலையாக விளங்குதலை இரண்டு இடங்களிலும் கடலாக விளங்குதலை மூன்றிடங்களிலும்

காலமாக விளங்குதலை இரண்டிடங்களிலும் பயனாக விளங்குதலை ஓரிடத்தும் குறிப்பிடுகின்றார்.

**"தானொரு காலந் தண்மழை யாய்நிற்கும்"**
**"தானே மழைபொழி தையலு மாய்"**

என்பன அவற்றுள் சில.[99]

பதினொன்றாம் திருமுறையில் காரைக்காலம்மையார், சேரமான் பெருமாள் நாயனார், நக்கீரதேவ நாயனார், கபில தேவநாயனார், பரணதேவர் பட்டினத்துப் பிள்ளையார் ஆகிய அறுவர் இவ்வமைப்பில் பாடியுள்ளனர்

காரைக்காலம்மையார் தம் நூல்களுள் ஒரே இடத்தில் மட்டும், மண், தீ, ஞாயிறு, திங்கள், வான், நீர், வளி என்னும் இயற்கைப் பொருள்களாக விளங்குதலைக் காட்டுகிறார்.

**"அவனே இருசுடர்தீ ஆகாசம் ஆவான்**
**அவனே புவிபுனல் காற்றாவான்"**[100]

என்பதது. இறைவன் இயற்கையில் கலந்துள்ளதையோ உலகிறைவன் இயற்கை இறைவன் படைப்பு என்பதையோ இவர் குறிப்பிடவில்லை.

சேரமான் பெருமாள் நாயனார் ஓர் இடத்தில் மட்டும் இறைவன் நீராகவும், தீயாகவும், அவனியாகவும், மதிய மாகவும்,விண்ணாகவும் காற்றாகவும், உயிராகவும் விளங்கும் அட்டமூர்த்தி நிலையைக்காட்டுகிறார்.

**"அமையார் புனல் அனல் ஞாயி**
**றவனி மதியம் விண் கால்**
**தொலையா உயிர்உடம் பாகிய**
**சோதியை"**[101]

என்பது அது.

நக்கீர தேவ நாயனார் பொதுநிலையில் இறைவன் உலகமாக விளங்குதலை ஓரிடத்தும் ஐம்பூதமாக விளங்கு தலை இரண்டிடங்களிலும் காலமாக விளங்குதலை ஓரிடத்தும் தீயாக விளங்குதலைத் தனித்து ஓரிடத்தும் மலையாக விளங்குதலை இரண்டிடங்களிலும் குறிப்பிடு கின்றார்.

"விண்முதற் பூதம் ஐந்தவை நீயே"
"மால்வரைநீயே மறிகடல் நீயே"

என்பன அவற்றுள் சில.[102] ஐம்பூதமாகத் தொகுத்துக் காட்டியதே மிகுதியாகும்.

கபிலதேவ நாயனார் இறைவன் அட்டமூர்த்தியாக விளங்குதலை ஓரிடத்தும் மண், விண், காலமாக விளங்கு தலை ஓரிடத்தும் கதிராக விளங்குதலை ஓரிடத்திலும் குறிப்பிடுகிறார்.

"புயலில் விண்ணொடு மண்முழு
தாய்பொழு தாகின்ற
மயிலியல் மாமறைக் காடர்"[103]

என்பது அவற்றுள் ஒன்று.

பரண தேவ நாயனார் இறைவன் பொதுவகையில் உலகமாக விளங்குதலை ஓரிடத்தும் காலமாக விளங்கு தலை ஓரிடத்தும் வளியாக விளங்குதலை ஓரிடத்தும் குறிப்பிடுகிறார்.

"நிலைத்திவ் வுலகனைத்தும் நீரேயாய் நின்றீர்
நிலைத்திவ் வுலகனைத்தும் நீரே"[104]

என்பத வற்றுள் ஒன்று.

பட்டினத்துப் பிள்ளையார் இறைவன் ஐம்பூதமாக விளங்குதலை ஒரே இடத்தில் மட்டும் குறிப்பிடுகிறார்.

"நிலம் நீர் தீவளி உயர்வான் என்றும்
உலவாதி தொல்புகழ் உடையோய்"[105]

என்பது அது.

பதினொன்றாம் திருமுறையில் இவ்வாறே வரும் மிகச் சில குறிப்புகளையே தந்துள்ளனர்.

சேக்கிழார் தம்நூலுள் இறைவன் உலகமாக விளங்குதலை ஓரிடத்தும் அட்டமூர்த்தியாய் விளங்குதலை ஓரிடத்தும் குறிப்பிடுகிறார்.

**"வானகி நிலனாகி அனலுமாகி**
**மாருதமாய் இருசுடராய் நீருமாகி**
**ஊனாகி உயிராகி உணர்வுமாகி**
**உலகங்கள் அனைத்துமனாய்"[106]**

என்பது அவற்றுள் ஒன்று

திருமுறையில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் சுந்தரர் மாணிக்க வாசகர் ஆகிய நால்வரும் மிகையான குறிப்புகளைத் தந்துள்ளனர். பிற திருமுறை ஆசிரியர்கள் மிகச் சில குறிப்புகளையே தந்துள்ளனர். மூவர் தேவாரங் களும் மாணிக்கவாசகர் திருவாசமும் முழுமையான தோத்திர நூல். [புகழ்நூல்] மேலும் பாடல்களின் எண்ணிக் கையும் மிகுதி ஆகையால் அவர் தம்நூலுள் இக்கருத்துக்கள் மிகையாகக் காணப்பெறுகின்றன.

சிவபொருமான் ஐம்பெரும் பூதங்களாகவும், இருசுடர் களாகவும், உயிராகவும், மழையாகவும், காலமாகவும் விளங்குதலை இவர்கள் மிகுதியாகப் பாடக் காரணம். சிவபெருமானுக்குப் பரம்பொருள் தன்மையை ஏற்றிக் கூறவே ஆகும். சமணம் பௌத்தம் என்னும் புறமதத் தாக்குதல் ஒருபுறம், தீயையும், ஞாயிற்றையும் நீரையும் காற்றையும், மழையையும் தனித்தனியாக வழிபடுகிற மக்கள் ஒருபுறம்; அக்காலத்து சூழலிது. தமிழக மக்களைச் சிவபெருமானே மூலமுதல்வன் முழுமுதல்வன் என்பது உணர்த்த வேண்டியது இவர்கள் முன்முயற்சியாக கடமையாக ஆகியது.

தீ, ஞாயிறு முதலான தெய்வங்கள் சிறுதெய்வங்கள், சிவனைத்தவிர பிற தெய்வங்கள் இல்லை. சிவபெருமானே அவ்வவ் இயற்கைப் பொருள்களாக விளங்குகிறான். என்னும் கருத்தைத் தந்தனர். அதன் மூலம் மக்களைப் பல தெய்வவழிபாட்டிலிருந்து விலக்கி, சிவனையே வழிபடு மாறு செய்ய எண்ணி இவ்வகையில் பாடல்கள் பாடினர் இவ்வகைக் கடமையும் முன் முயற்சியின் காரணமாகவும் தேவார மூவர் பாடல்களில் மட்டுமிவை மிகையாக இருக்கக் காரணமாயின எனலாம்.

### 3.7.2 இறைவன் [சிவபெருமான்] இயற்கையோடு கலந்து உள்ளான்

முன்பு இயற்கையாக இறைவன் விளங்குதல் காட்டப் பெற்றது. அவ்வகையில் இயற்கை வேறு அன்று இயற்கையே இறைவன் என்னும் கருத்து புலனாகியது.

ஆனால் இவ்வகைப்பாடே அதனினும் வேறுபட்டது. இறைவன் இயற்கையில் கலந்துள்ள நிலையை இது காட்டுகிறது. இங்கு இறைவன் வேறு இயற்கை வேறாகப் பிரிக்க இயலும்.

திருஞானசம்பந்தர் தம்பாடல்களுள் சிவபெருமான் உலகத்தோடு கலந்துள்ளான் எனப்பொதுநிலையில் ஓரிடத்திலும் மண்ணில் கலந்துள்ளமையை இரண்டிடங்களி லும் நாளில் கலந்துள்ளமையை மூன்றிடங்களிலும் தீயிற் கலந்துள்ளமையை மூன்றிடங்களிலும் வளியிற் கலந்துள்ள மையை மூன்றிடங்களிலும் வானிற் கலந்துள்ளமையை மூன்றிடங்களிலும் குறிப்பிடுகின்றார்.

இதுவன்றியும் உயிர்களில் கலந்துள்ளமையை ஓரிடத்தும் கடல், கழி, காடு, நாடு, மலை, வழி முதலியன வற்றில் கலந்துள்ளார் என்றொரு இடத்திலும் குறிப்பிடு கிறார்.

"நீருளான் தீயுளா னந்தரத்துள்ளான்"
"கழியுளாரெனவும் கடலுளாரெனவும் காட்டினார்"

எனவும்

"உறை சேரு மென்பத்து நான்குநூ றாயிரமாம் யோனிபேதம்
நிறை சேரப் படைத்தவற்றி னுயிர்க்குயிரா யங்கே நின்றான்"

என்பன அவற்றுள் சில.[107]

திருநாவுக்கரசர் தம் நூலுள் எழுபது பாடல்களில் இறைவன் இயற்கையோடு கலந்துள்ள தன்மையைக் காட்டுகிறார்.

அவற்றுள் பொதுநிலையில் உலகத்தோடு கலந்து உள்ளமையை ஓரிடத்தும் மண்ணில் கலந்துள்ளமையை இரண்டிடங்களிலும் நீரில் கலந்துள்ளமை மூன்றிடங்களிலும் தீயிற் கலந்துள்ளமையை மூன்றிடங்களிலும் வளியிற் கலந்துள்ளமையை ஐந்திடங்களிலும் வானிற் கலந்து உள்ளமையை இரண்டிடங்களிலும் மலையிற் கலந்து உள்ளமையை இரண்டிடங்களிலும் கடலிற் கலந்து உள்ளமையை ஓரிடத்தும் கொன்றைப் போதிற் கலந்து உள்ளமையை ஓரிடத்தும் குறிப்பிடுகிறார்.

"கனலைக் காற்றைக் கனைகடலைக் குலவறையைக்
கலந்து நின்ற பெரியானை"

"நறுங் கொன்றைப் போதிலுள்ளான் பொருப்பிடையான்
நெருப்பிடையான் காற்றினுள்ளான் கனத்தகத்தான்"

என்பன அவற்றுள் சில.[108]

மாணிக்க வாசகர் தம் நூலுள் மூன்றிடங்களில் இறைவன் இயற்கையொடு கலந்துள்ள தன்மையைக் காட்டுகிறார்.

"பாரிடை ஐந்தாய் பரந்தாய் போற்றி"
"விண்ணாகி மண்ணாகி யித்தனையும்"

என்பன சில.[109] சுந்தர பாடல்களிலும் ஒன்பதாம் திருமுறை யிலும் இத்தகைய குறிப்புகள் காணப்பெறவில்லை.

ஆயினும் இத்திருமுறையில் இவ்வியல்பை வேறு வகை யாகக் காட்டியுள்ளார். இறைவன் இயற்கையோடு கலந்து உள்ளமையை சில உவமைகள் மூலம் விளக்கியுள்ளன. திருமூலர் தம்நூலுள் காணப்பெறும் இறைவன் இயற்கை யாக விளங்கும் கருத்துக்கள் தேவார மூவர்களின் அமைப்பிலேயே உள்ளன. உலகு எனப் பொதுவகையால் ஓரிடத்தில் கூறுகிறார்.

சிவபெருமான் மண்ணில் கலந்துள்ளமையை ஒன்பதிடங் களையும் நீரில் கலந்துள்ளமையை எட்டிடங்களிலும் தீயிற் கலந்துள்ளமையை ஒன்பதிடங்களிலும் வளியிற் கலந்து உள்ளமையை ஒன்பதிடங்களிலும் வானிற்கலந்துள்ளமையை பத்திடங்களிலும் கதிரவனிற் கலந்துள்ளமையை ஓரிடத்தும் மதியில் கலந்துள்ளமையை ஓரிடத்தும் உயிரில் கலந்து உள்ளமையை ஓரிடத்தும் குறிப்பிடுகிறார். இறைவன் ஞாயிற்றிலும் மதியிலும் கலந்துள்ளமையை நேரிடையாக இவர் மட்டுமே குறிப்பிடுகிறார்.

"திருவுரு பார்முதலாகப் பயிலும்"
"வெளிகால் கலைப்பு மேவுமண் ணின்ற
வளியா கியதற் பரங்கான்"

எனபன அவற்றுள் சில.[110]

மேலும் அவர், காலத்திலும், மலையிலும் இறைவன் கலந்துள்ளதாகவும் இரண்டிடங்களில் குறிப்பிட்டுள்ளார். பெரும்பாலும் ஐம்பூதங்களின் கலந்துள்ளமையையே காட்டி யுள்ளனர்.

உயிரில் இயற்கையொடு இறைவன் கலந்துள்ளமையை இயற்கை உவமைகள் மூலம் காட்டுதல்.

உயிரில் கலந்துள்ள இறைவனைச் சில உவமைகளின் மூலம் திருமுறையாசிரியர் காட்டுகின்றனர். இறைவன் உயிரில் கலந்துள்ள நிலை வெளிப்படத் தெரியாது அவன் உயிர்களிற் கரந்து, கலந்து விளங்குகிறான். சைவதத்துவ நூல் ஒன்றாய், வேறாய், உடனாய் விளங்கும் மூவகை இறையியல்புகளைக் காட்டுகின்றது. அவற்றுள் உடனாய் விளங்கும் நிலையை இவை காட்டுகின்றன.

இறைவன் உயிரிற் கலந்துள்ள இயல்புக்குப் பல வகையான இயற்கை உவமைகள் காட்டப்பெற்றுள்ளன. அவை: 1) பூவில் வாசம் 2) எள்ளில் எண்ணெய், 3) பாலில் நெய், 4) கரும்பிற் கட்டி, 5) நீரிற் பால், 6) காற்றில் ஊறு, 7) பழத்தில் சுவை, 8) புனிலிற் பொற்பு, 9) சாந்தின் நாற்றம், 10) விறகில் தீ, 11) நீரும் உப்பும் கலந்த நிலை எனும் பதினொரு வகை உவமைகளின் மூலம் இறைவனியல்பைப் புலப்படுத்துகின்றனர்.

> **"காணாத கடவுளைக் காணும் உலகில் கண்டுணரும் முறை சிறந்த முறையாகும்"**[111]

என்பாரின் கருத்திற்கேற்ப இறைவன் உயிரிற் கலந்து விளங்கும் தன்மை இவ்வியற்கைப் பொருள்கள் மூலம் உணர்த்தப் பெறுகிறது.

பூவில் வாசத்தை உயிரிற் கலந்துள்ள இயல்புக்கு திருஞானசம்பந்தர் ஓரிடத்தும் திருநாவுக்கரசர் ஏழிடங்களிலும் சுந்தரர் ஓரிடத்தும் மாணிக்கவாசகர் மூன்றிடங்களிலும் திருமூலர்பத்திடங்களிலும் நக்கீரதேவ நாயனார் ஓரிடத்தும் குறிப்பிடுகின்றனர்.

இறைவன் உயிரிற் கலந்துள்ள இயல்புக்கு உவமையாக எள்ளில் எண்ணெய் என்பதை மாணிக்கவாசகர் மட்டும் ஓரிடத்தில் குறிப்பிடுகிறார்.

பாலில் நெய்யாக என்னும் உவமையைத் திருமூலர் இரண்டு இடங்களிலும் திருநாவுக்கரசர் மூன்றிடங்களிலும் குறிப்பிடுகின்றனர்.

விறகில் தீயாக என்னும் உவமையைத் திருநாவுக்கரசர் மட்டும் இரண்டிடங்களில் பயன்படுத்தியுள்ளார்.

காற்றில் ஊறு, பழத்தில் சுவை, நீரிற் பால், புனலிற் பொற்பு, சாந்தின் நாற்றம், நீரும் உப்பும் ஆகிய உவமைகளைத் திருமூலர் மட்டுமே குறிப்பிடுகிறார்.

**"பூத்தானாம் பூவின் திறத்தானுமாம் பூக்குளால் வாசமாய் மன்னி நின்ற கோத்தானாம்":**

**"பூவினில் வாசம் புனலிற் பொற்பு புதுவிரைச் சாந்தினி னாற்றத்தொடு"**

**"பூவில்வா சத்தை"**

என்பன அவற்றுள் சில.[112]

இறைவன் உயிர்களில் வெளிப்படத் தோன்றாது கலந்து விளங்கும் தன்மையை இவ்வுவமைகள் தெளிவாகக் காட்டுகின்றன. மேலும் ஆன்மா பக்குவ நிலையில் சிவன் உயிரிற் கலந்துள்ளமை அறியும். மலர்கள் பருவம் அடையும் போது மணம் வீசுதலும் பால் பக்குவமடைந்த போது நெய் கிடைத்தலும், கனி முதிர்ந்தபோது சுவை பெறுதலும் எடுத்துக்காட்டுக்களாயின. பக்குவ நிலை அடையும் போது உயிர்களில் சிவமணம் பூத்திருப்பதை சிவன் அறியும் என்பதை அவை உணர்த்துகின்றன. மேலும் உயிரில் கலந்துள்ள இறைவன் உயிரின் தன்மையை அடைய மாட்டான். தன் தன்மையிற்றிரிய மாட்டான் என்னும் இறைவன் இயல்பையும் இயற்கைக் காட்சியின் மூலம் மாணிக்கவாசகர் ஓரிடத்தும் திருமூலர் இரண்டிடங்களிலும் காட்டுகின்றனர்.

"வான்கெட்டு மாருதம் பாய்ந்து சுழலுநீர் மழை
தான் கெட்ட லின்றிச் சலிப்பறியா"[113]

இறைவன் உயிரிற் கலந்துள்ளனெனினும் ஆன்மவியற்பிற் தொடக்குறாதவன் என்பதை வானையும் முகிலையும் காட்டித் தெளிவு படுத்தியுள்ளனர். வானத்தில் மேகம் மழை முதலியன சென்றாலும் வானம் எவ்விதமாறுதலும் விளைவுகளும் பெறுவதில்லை. தனித்தன்மையில் அது திரிவதில்லை என்னும் கருத்தை அதற்கு ஒப்புமையாக அவர்கள் காட்டியுள்ளனர்

8. **இறைவன் இயற்கைப் படைப்பாளி**

இயற்கையாவும் இறைவனால் படைக்கப் பெற்றதே என்னும் கொள்கையை வலியுறுத்துவது இது. மண், விண் முதலான ஐம்பூதங்களையும் கதிர்மதி ஆகிய இரு சுடர் களையும் உயிர்களையும் இறைவன் படைத்ததாகத் திருமுறையாசிரியர்கள் பலவிடங்களில் குறிப்பிடுகின்றனர்.

திருஞானசம்பந்தர் இறைவன் மண்ணைப்படைத்ததாக ஆறு இடங்களிலும் நீரைப் படைத்ததாக ஆறிடங்களிலும் தீயைப்படைத்ததாக ஐந்திடங்களிலும் வளியைப் படைத்த தாக ஐந்திடங்களிலும் வானைப் படைத்ததாக ஐந்திடங் களிலும் கதிரவனைப் படைத்ததாக ஓரிடத்தும் மதியைப் படைத்ததாக ஓரிடத்தும் உயிரைப் படைத்ததாக இரண்டிடங்களிலும் குறிப்பிடுகிறார். இதுவன்றியும் பொது வகையில் உலகைப் படைத்தான் என மூன்று இடங்களில் குறிப்பிட்டுள்ளார்.

"உலகில லுயிர்நீர் நிலமற்றும் பலகண்டவன்"
"வளதரு நீருமண்ணும் விசும்போடனல் காலுமகி"
அளிதரு பேரருளாளன்"

என்பன சில.[114] பெரும்பான்மையும் ஐம்பூதங்களையும் தொகுத்தே கூறுகிறார்.

திருநாவுக்கரசர் இறைவன் உலகைப் படைத்தான் எனப் பொது வகையில் மூன்றிடங்களிலும் கதிரவனைப் படைத்ததாக மூன்றிடங்களிலும் மதியைப் படைத்ததாக இரண்டிடங்களிலும் மண்ணைப் படைத்ததாக ஓரிடத்தும் வானைப் படைத்ததாக ஓரிடத்தும் கடலைப் படைத்ததாக ஓரிடத்தும் மழையை இரவு பகலை உண்டாக்கியதாக ஓரிடத்தும் குறிப்பிடுகிறார். இவர் திருஞானசம்பந்தரின் ஒருசிலவற்றையே குறிப்பிடுகிறார்.

> **"நிறைகடல் மண்ணும் விண்ணும் நீண்டவானுலகம்**
> **எல்லாம் குறைவறக் கொடுப்பர்"**
> **"உலகங்க ளனைத்தும் வைத்தார்"**
> **"சொரிவிப் பார்மழை சூழ்கதிர்த் திங்களை"**
> **"விரிவிப் பார்வெயிற் பட்ட விளங்கொளி**
> **எரிவிப்பார்."**

என்பன அவற்றுள் சில [115] ஓரிடத்தில் முத்துக்களும் மலரரும் புகளும் இறைவனப்பு என்கிறது.

> **"இன்னுயிர் பார்படைத் தான்"[116]**

என்பதது. பிற குறிப்புகள் ஏதுமில்லை தேவார மூவருள் இவர் மட்டுமே மிக்க குறைந்த குறிப்புகளைத் தந்தவராவார்.

மாணிக்கவாசகர் மூன்றிடங்களில் உலகைப் படைத்த தாகவும் ஐம்பூதங்களைப் படைத்தானென்றும் குறிப்பிடு கிறார். இவரும் மிகச்சில குறிப்புகளே தந்துள்ளார் என்பது ஒன்று.

ஒன்பதாம் திருமுறையில் பூந்துருத்தி நம்பி. காடவ நம்பி மட்டும் இறைவன் உலகைப் படைத்தான் என்பதைக் குறிப்பிடுகிறார்.

> **"சத்தியாய்ச் சிவமாய் உலகெலாம் படைத்த**
> **தனிமுழு முதலுமாய் அதற்கோர் வித்துமாய்"[117]**

என்ற பாடலடிகள் அதைப் புலப்படுத்துகின்றன.

திருமூலர் தம்நூலுள் பிற திருமுறை யாசிரியர்களிலும் மிகையான இடங்களில் இவ்வியற்கை யாவும் இறைவன் படைப்பே என்று தெளிவாகக் குறிப்பிடுகிறார்.

பொதுவான நிலையில் உலகைப் படைத்தான் என்று பன்னிரண்டு இடங்களில் குறிப்பிடுகிறார். இறைவன் ஐம்பூதங்களைப் படைத்தான் என ஒன்பதிடங்களிலும் முத்தியைப் படைத்தான் என ஒன்பதிடங்களிலும் குறிப்பிடு கின்றார். கதிருக்கு இறைவன் அளித்ததும் படைப்பிலடக்கப் பெற்றது.

மேலும் இறைவன் கதிரவனைத் தனியாக இரண்டிடங் களிலும் தீயை மூன்றிடங்களிலும் கடலை இரண்டிடங் களிலும் நீரை ஓரிடத்தும் காற்றை இரண்டு இடங்களிலும் திசைகள் முழுமையும் படைத்ததாக இரண்டு இடங்களிலும் குறிப்பிடுகிறார்.

> "பரந்துல கேழும் படைத்த பிரானை"
> "விச்சும் விரிசுடர் மூன்றும் உலகுக்குத்
> தச்சும் அவனே சமைக்கவல் லானே"

என்பன அவற்றுள் சில.[118]

பதினொன்றாம் திருமுறையில் சேரமான் பெருமான் நாயனாரும் பட்டினத்துப் பிள்ளையாரும் இக்கருத்தைக் கூறுகின்றனர்.

சேரமான் பெருமாள் நாயனார் இவ்வுலகம் இறைவன் படைப்பு என்று பொதுவகையில் ஒரே இடத்தில் மட்டும் குறிப்பிடுகிறார்.

> "தவனே உலகுக்குத் தானே
> முதல்வன் படைத்த எல்லாம்"[119]

சிவனே என்பதது.

பட்டினத்துப் பிள்ளையாரும் இக்கருத்தை ஒரே இடத்தில் மட்டும் குறிப்பிடுகிறார்.

**"தோற்றுவ தெல்லாம் தன்னிடைக் தோற்றித்
தோற்றும் பிறிதில தோற்றாச் சுடர்முனை"[120]**

என்பதது. உலகத்துப் பொருள்கள் எல்லாம் இறைவனிட மிருந்து தோன்றுகிறன. இறைவன் படைப்பே இவ்வுலகம் என்று காட்டுகிறார் இவர்.

சேக்கிழாரும் உலகம் இறையின் படைப்பு என்பதைக் காட்டுகிறார். ஆயின் அவர் இறைவன் படைத்ததாகக் காட்டுகிறார். சக்தி என்பது சிவனின் செயலாற்றல் எனக் கொள்ளின் அது சிவன் படைப்பே என்று புலனாகும் அவர் இரண்டிடங்களில் அத்தகைய கருத்தைப் புலப்படுத்துகிறார்

**"அனை யாயுலகங் களனைத்தையும் ஈன்றாய்"
"உயிர்கள் யாவையும் ஈன்றஎம் பிராட்டி"**

என்பன அவை.[121]

இறைவன் உலகைப் படைத்தான் எனும் கருத்தைத் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், திருமூலர் ஆகிய மூவரும் பிறரைக் காட்டிலும் மிகையாகவும் தெளிவாகவும் பாடியுள்ளனர். திருஞானசம்பந்தர்க்கும் திருநாவுக்கரசர்க்கும் காலச்சூழல் காரணம் பல தெய்வ வழிபாடுநீக்கி சிவனே பரம்பொருள் எனப்பரப்புதல் காரணம் ஆகும். திருமூலர் தத்துவ விளக்கங்கள் பல கூறுவதால் அவர் நூலுள் இக்கருத்து மிகையாக இருத்தற்குக் காரணமாயின.

இறைவன் இவ்வுலகப் படைப்பிற்குக் காரணன் என்பதை இயற்கை மூலமும் இவர்கள் தெளிவுபடுத்தி யுள்ளனர். இவர்கள் இறைவனை வித்தாகவும் முளையாகவும் காட்டும் இடங்கள் இதற்குச் சான்றுகள்.

இறைவனை வித்தாக உருவகப்படுத்திக்காட்டுவர், திருஞானசம்பந்தர் இரண்டிடங்களிலும் திருநாவுக்கரசர்

பத்திடங்களிலும் பூந்துருத்தி காடவ நம்பி ஓரிடத்தும் குறிப்பிடுகின்றனர். இவ்வித்துத் தாவர வகைக்கெல்லாம் மூலமாக விளங்குவது, வித்தின்றி ஏதும் முளையாது. வித்தே தாவரப்படைப்பிற்கு மூலகாரணம். இறைவனை வித்தாகக் காட்டுவது ஒரு குறியீடு. இயற்கை இறைவன் படைப்பு என்பதற்கு இதைப் பயன்படுத்தி உள்ளனர்.

## 3.8 இயற்கையைக் கடந்தவன் இறைவன்

இறைவன் இயல்பில் இது ஒன்று. இயற்கையைக் கடந்தவனாக இறைவன் விளங்குகிறான் "ஒன்றாய் வேறாய் உடனாய்" விளங்கும் இறை இயல்புகளில் வேறாய் விளங்கும் இயல்பினை இது குறிக்கிறது. இயற்கையாக விளங்கிய இறைவன் இயற்கையை படைத்த இறைவன் இயற்கையில் வந்து காணப்பெறும் இறைவன் இயற்கையை கடந்தும் விளங்குகின்றான்.

இறைவன் இயற்கைக்கு அப்பாற்பட்டவனாகக் கடந்தவனாக திருஞானசம்பந்தர் மூன்றிடங்களிலும் திருநாவுக்கரசர் இரண்டிடங்களிலும் மாணிக்கவாசகர் இரண்டிடங்களிலும் ஒன்பதாம் திருமுறையில் திருமாளிகைத்தேவர் ஓரிடத்தும் திருமூலர் இரண்டிடங்களிலும் குறிப்பிடுகின்றனர்.

"பூதமவை ... வேறயுடானானை"

"பெருநில நீர் தீவளி ஆகாச மாகி அண்டத்துக்
கப்பாலாய் இப்பா லானே"

"உலகாய் அல்லை ஆனாயை"

என்பன அவற்றுள் சில.[122] இறைவன் இயற்கைக்கு அப்பாற்பட்டவன், அவனுடைய ஆற்றல் அதனினும் வலிது என உணர்த்துகிறது.

## 3 9 இருசுடரும் இறைவனும்

பன்னிரு திருமுறையில் கதிர், மதி எனும் இருசுடர்களும் சிவபெருமானோடிணைக்கப் பெற்றுப் பல விடங்களில் பலவாறாகப் புனையப் பெற்றுள்ளன. அப்பர் தேவாரத்தில் சிவசூரிய வழிபாட்டை ஆங்கே ஆய்வாளர் ஆ. வேலுப்பிள்ளை அவர்கள் சிவனொடு கதிரைத் தொடர்புபடுத்தியதை ஐந்துவகை அமைப்பில் காட்டுகிறார் அவரை முன்னோடியாகக் கொண்டது இப்பகுதி ஆய்வு.

பன்னிரு திருமுறையில் [முழுமையாக] இருசுடர்களையும் சிவபெருமானோடு தொடர்புபடுத்தப் பெற்ற பகுதிகளைத் தொகுத்து ஒப்பு நோக்கின் அவற்றைப் பதினொரு வகைப்பாட்டின்கீழ் அடக்கவியலும் அவை,

1. கதிராகவும் மதியாகவும் சிவபெருமான் விளங்குதல்
2. கதிர்மதி அகியவற்றின் ஒளி சிவன் ஒளியாக விளங்குதல்
3. கதிருக்கும் மதிக்கும் சிவன் ஒளிதருதல்
4. சிவபெருமானும் பகையும்
5. கதிரையும் மதியையும் சிவன் இயக்குதல்
6. கதிரும் மதியும் சிவனின் இருகண்களாக விளங்குதல்
7. கதிரையும் மதியையும் சிவபெருமான் ஒறுத்தல்
8. கருதிக்கும் மதிக்கும் சிவனருளியது
9. கதிரும் மதியும் சிவன் திருவடி திருமேனி ஆகியவற்றுக்கு உவமையாக வருதல்
10. கதிரும் மதியும் சிவனை வழிபட்டதாகக் காட்டுதல்
11. கதிருக்கும் மதிக்கும் சிவன் அப்பாற்பட்டவன்.

என்பன இவ்வகைப் பாட்டின் கீழ் அக் குறிப்புகள் ஆயப பெறுகின்றன,

## 1. சிவபெருமான் கதிராகவும் மதியாகவும் விளங்குதல்

திருமுறையில் இக்கருத்து இருசுடரையும் இணைத்தும் தனித்தனியாகவும் கூறப்பெறுகின்றன. இணைத்துக் காட்டுவனவே பெரும்பான்மை. சிவபெருமான் கதிராக விளங்குகிறான் என்னும் இக்கருத்தைத் திருஞானசம்பந்தர் ஏழிடங்களிலும் திருநாவுக்கரசர் நாற்பத்தெட்டிடங்களிலும் சுந்தரர் பதினொரு இடங்களிலும் மாணிக்கவாசகர் நான்கிடங்களிலும் கருவூர்த்தேவர் ஓரிடத்திலும் திருமூலர் பதினாறு இடங்களிலும் காரைக்கால் அம்மையார் இரண்டிடங்களிலும் சேரமான் பெருமாள் நாயனார் ஓரிடத்தும் கபிலதேவ நாயனார் இரண்டிடங்களிலும் பட்டினத்துப் பிள்ளையார் ஓரிடத்தும் குறிப்பிடுகின்றனர்.

**"காய்கதிர்ச் சோதியினானை"**

**"முத்தன்காண் முத்தீயு மாயினான் காண்"**

**"எட்டான மூர்த்தியை"**

**"ஞாயிறாய் மதியமாய் நின்றவெம் பரன்"**

என்பன அவற்றுள் சில.[123] இங்கு ஞாயிறும் திங்களும் சிவபெருமானாகக் காட்டப் பெறுகின்றன.

சிவபெருமான் மதியாக விளங்குகின்றான் என்னும் கருத்தைத் திருஞானசம்பந்தர் ஆறிடங்களிலும் திருநாவுக்கரசர் நாற்பத்தைந்து இடங்களிலும் சுந்தரர் நான்கிடங்களிலும் மாணிக்கவாசகர் மூன்றிடங்களிலும் கருவூர்த்தேவர் ஓரிடத்தும் திருமூலர் ஏழிடங்களிலும் காரைக்கால் அம்மையார் இரண்டிடங்களிலும் சேரமான் பெருமாள் நாயனார் ஓரிடத்தும் கபிலதேவ நாயனார் ஓரிடத்திலும் குறிப்பிடுகின்றனர். இவர்களுள் திருநாவுக்கரசர் மிகுதியாக் இக்கருத்தைக் கூறுகிறார்.

"இக்கால ஆராய்ச்சியாளர் வகுத்துக்காட்டும் பரிணாமவாத முறைப்படி நோக்கும் போது சிவபெருமான் சூரியனாக வழிப்பட்டாரென்று கூறுவதிலும் பார்க்க, சூரியன் பெருமானாக வழிபடப்பட்டாரென்று கூறுவது கூடிய அளவு பொருந்தக் கூடியது"[124] என்பார் கருத்தை மேற்கருத்து வலியுறுத்தக் காணலாம். மேலும், ஞாயிறே சிவன் என்னும் பெயரால் ஆதியில் வழிபடப் பட்டாரென்பது உலகமக்களின் பழைய வரலாறுகளை நோக்குமிடத்து நன்கு புலனாகும்"[125] என்பார் கருத்தும் அதைத் தெளிவு படுத்துகின்றன. இவ்வகைக் கருத்துக்கு இத் திருமுறைப் பாடல்களில் காணப்பெறும் குறிப்புகள் சான்று பகர்கின்றன.

## 2 சிவபெருமான் அவற்றின் ஒளியாக விளங்குதல்

சிவபெருமான் கதிரவன் ஒளியாகவும் மதியின் ஒளி யாகவும் விளங்குகின்றான். என்பதைத் திருஞான சம்பந்தர் ஓரிடத்தும் திருநாவுக்கரசர் ஓரிடத்தும் மாணிக்கவாசகர் ஓரிடத்தும் திருமூலர் ஐந்திடங்களிலும் குறிப்பிடுகின்றனர்.

> "செக்கர்க் கோர்சோதி தானாம்"
> "சோதியாய்ச் சுடருமானார்"

என்பன அவற்றுள் சில [126]

## 3. சிவபெருமான் அவற்றுக்கு ஒளிதருபவனாக விளங்குதல்

சிவபெருமான் கதிருக்கும் மதிக்கும் ஒளிதருபவனாகத் திருநாவுக்கரசர் ஓரிடத்தும் மாணிக்கவாசகர் ஓரிடத்தும் திருமூலர் நான்கிடங்களிலும் குறிப்பிடுகின்றனர்.

> "வெண்மதியைக் கலைசேர்த்த திண்மையான்"
> "சோதியாய்ச் சுடருமானார்"

என்பன அவற்றுள் சில.[127]

## 4. கதிரவனையும் மதியையும் சிவபெருமான் படைத்தல்

*கதிரும் மதியும் சிவபெருமானால் படைக்கப் பெற்ற தாகத் திருமூலர் மட்டுமே நான்கிடங்களில் குறிப்பிடுகிறார். பிறர் இக்கருத்தினைக் கூறவில்லை.*

**"பரிசறிந் தங்குளன் அங்கி அருக்கன்"**[128]

*என்பது அவற்றுள் ஒன்று.*

## 5. கதிரையும் மதியையும் சிவன் இயக்குதல்

*கதிரையும் மதியையும் சிவபெருமான் இயக்குவதாகத் திருநாவுக்கரசர் இரண்டிடங்களிலும் திருமூலர் ஓரிடத்தும் குறிப்பிடுகின்றனர்.*

**"கதிர்க் திங்களை**
**விரிவிப்பார் வெயிற்பட்ட விளங்கொளி**
**எரிவிப்பார்"**

**"வெங்கதிர் எரிய வைத்தார்"**

*என்பன அவற்றுள் சில.*[129]

## 6. கதிரும் மதியும் சிவன் கண்களாக விளங்குதல்

*கதிரும் மதியும் சிவபெருமானின் இருகண்களாக விளங்குகின்றன என்னும் கருத்தைத் திருநாவுக்கரசர் இரண்டிடங்களிலும் மாணிக்கவாசகர் ஓரிடத்தும் திருமூலர் நான்கிடங்களிலும் கபிலதேவ நாயனார் ஓரிடத்தும் பரணதேவ நாயனார் ஓரிடத்தும் பட்டினத்துப் பிள்ளையார் ஓரிடத்தும் குறிப்பிடுகின்றனர்.*

**"சுடர் மூன்றாய் உருவம் ஒன்றாய் நயன மூன்றாகி"**

**"கண்கள்சுடர் மூன்று"**

**"ஒளியார் சுடர் மூன்றும் கண் மூன்றாக"**

"பாவகன் பரிதி பனிமதி தண்ணாடும்
மூவகைச் சுட்டும் நின்நுதல் நேர்நாட்டம்"

என்பன அவற்றுள் சில.[130]

அறிஞர் ஒருவர்,

"சிவபெருமானின் வலது கண் கதிரவன் என்றும் இடது கண் மதி என்றும் நெற்றிக் கண் நெருப்பு என்றும் குறிப்பிட்டுள்ளார். முச்சுடர்கள் சிவபெருமானுக்குக் கண்களாக அமைந்ததை மக்கள் ஞாயிறு, திங்கள், தீ என்பவைகளுக்கு மேலான தனிப்பெரும் பொருள் ஒன்று உண்டு என்று கொண்ட காலத்தில் அவர்கள் பழைய அப்பன் வடிவத்துக்கு முச்சுடர்களைக் கண்கள் எனக் கொண்டார்"[131] என்ற கருத்தும் வலியுறுத்திக் காரணம் காட்டுகிறது.

## 7. கதிருக்கும் மதிக்கும் சிவனருளல்

கதிரவனுக்கும் மதிக்கும் சிவன் அருளியதாகத் திருஞானசம்பந்தர் ஓரிடத்தும் நாவுக்கரசர் இரண்டிடங்களிலும் திருமூலர் இரண்டு இடங்களிலும் குறிப்பிடுகின்றனர்.

"திங்களுக் கருளிச் செய்தார்"

"அந்திக் கோன்தனக் கேயருள் செய்தவர்"

"இயங்குகின்ற இரவி திங்கள்
நினைவாற் சித்தந் தெளிகின்ற"

என்பன அவற்றுள் சில.[132]

## 8 கதிரையும மதியையும் சிவன் கண்டித்தல்

கதிரவன் பல்லைத் தகர்த்ததாகவும் வெகுண்டதாகவும் திருமுறையில் திருஞான சம்பந்தர் ஓரிடத்தும் திருநாவுக்கரசர் எட்டிடங்களிலும் சுந்தரர் ஓரிடத்தும் மாணிக்கவாசகர் ஐந்திடங்களிலும் சேதிராயர் ஓரிடத்தும் திருமாளிகைத் தேவர் ஓரிடத்தும் சேந்தனார் ஓரிடத்தும்

குறிப்பிடுகின்றனர். பெரும்பான்மையும் கதிரவன் பல்லைத் தகர்த்த செயலே பேசப்படுகின்றது.

மதியை உதைத்ததாகவும் தேய்த்ததாகவும் திரு முறையில் திருஞானசம்பந்தர் இரண்டிடங்களிலும் திரு நாவுக்கரசர் ஐந்திடங்களிலும் சுந்தரர் ஓரிடத்தும் மாணிக்கவாசகர் ஓரிடத்தும் சேந்தனார் ஓரிடத்தும் திருமூலர் ஓரிடத்தும் குறிப்பிடுகின்றனர்.

**"வெய்யவன் பல்லுகுத்தது குட்டியே"**
**"இந்துவினைத் தேய்த்தானை இரவிதன்**
**தன்பல்பறித்தானை"**
**"அன்ற ருக்கனைப் பல்லிறுத்தானை"**
**"செற்றுமதிக் கலைகிதையத் திருவிரலாற் றேய்வித்த"**

என்பன அவற்றுள் சில.[133] சிவபெருமானின் ஆற்றலையும் பிறதெய்வங்களைக் காட்டிலும் சிவனே உயர்ந்தவன் என்பதையும் காட்ட இவர்கள் இவ்வாறு புனைந்துள்ளனர். "சிவபரத்துவத்தை நிலைநாட்டுவதற்கு ஒரு வழி சூரியன் சிவபெருமானிடம் தோற்றவன் என்று கூறுவதாகும்."[134] என்னும் கருத்தும் அதை வலியுறுத்துகின்றது.

## 9. கதிரும் மதியும் சிவனை வணங்குதல்

இவை சிவனைக் காணப்படுவதாகத் தனித்தனியாகவும் இரண்டையும் சேர்த்தும் திருமுறையில் கூறப்பெற்றுள்ளன.

சிவனைக் கதிரவன் வழிபடுவதைத் திருஞானசம்பந்தர் ஓரிடத்தும் சுந்தரர் ஓரிடத்தும் திருமூலர் ஓரிடத்தும் குறிப்பிடுகின்றனர். சிவனை மதி வழிபடுவதாகத் திருஞானசம்பந்தர் ஓரிடத்தில் குறிப்பிடுகிறார்.

சுந்தரர், கதிரும் மதியும் இணைந்து சிவனை வழி படுவதாகத் திருஞானசம்பந்தர் ஆறிடங்களிலும் திருநாவுக்கரசர் நான்கிடங்களிலும் குறிப்பிடுகின்றனர்.

"விண்ணவர் தம்மொடு வெங்கதிரோன்"
"வெய்ய விரிசுடரோன்........"
"மற்றொப்பா ரில்லா தாளை மதிகதிரும் வானவரும்"
"சந்திரன் கதிரவன் தருபுகழ்யானொடும்"
"இந்திரன் வழிபட விடுத்த வெம்பரன்"

என்பன[135] அவற்றுள் சில. இவையும் சிவபரத்துவத்தை நிலைநாட்டுவதற்காக இவ்வாறு கதிரும் மதியும் சிவனை வழிபாடு செய்வதாகப் பாடியுள்ளனர்.

10. **சிவபெருமான் திருவடி திருமேனிக்குவமையாகக் கூறுதல்**

சிவபெருமான் திருவடிக்குவமையாகக் கதிரையும் மதியையும் திருநாவுக்கரசர் மட்டுமே குறிப்பிடுகிறார். பெரும்பான்மையும் மலர்களைத் திருவடிக்கு உவமை காட்டுதல் சங்க இலக்கியம் தொட்டுவந்த மரபு. பக்தி இலக்கிய காலத்தில் வளர்ந்த மரபும் அதுவே. ஆயின் இவர் மட்டுமே இத்தகு கருத்துக்களை படைத்துள்ளார்.

"அரும்பித்த செஞ்ஞாயி றேய்க்குமடி"
"செறிகதிருந் திங்களுமாய் நின்றவ்வடி"
"மறுமதியை மாசு கழுவுட்டி"
"செஞ்ஞாயி றடிவண்ணம"

என்பன அவற்றுள் சில.[136] சிவபெருமான் திருமேனிக் குவமையாகக் கதிரைத் திருஞானசம்பந்தர் ஓரிடத்தும் திருநாவுக்கரசர் மூன்றிடங்களிலும் சுந்தரர் ஓரிடத்தும் திருமாளிகைத்தேவர் ஓரிடத்தும் சேரமான் பெருமாள் நாயனார் ஓரிடத்தும் குறிப்பிடுகின்றனர். சிவபெருமான் திருமேனிக்குவமையாகத் திங்களைத் திருஞானசம்பந்தர் ஓரிடத்தும் திருநாவுக்கரசர் ஓரிடத்தும் குறிப்பிடுகின்றனர்.

"செங்கதிரென நிறமனைய தொர் செழு மணிமார்பர்"
"வளர் ஞாயி றன்ன ஒளியார்"
"செக்கர்வா னத்திள ஞாயி றன்னானே"
"விரிகின்றது ஞாயிறு போன்றது மேனி"

என்பன[137] அவற்றுள் சில. சிவபெருமான் திருவடிக்கு மதியையும் கதிரையும் ஒப்பிட்டது சிவபரத் தத்துவத்தை நிலைநாட்டுவதற்கேயாகும்.

**11. சிவபெருமான் கதிருக்கும் திங்களுக்கும் அப்பாற்பட்டவன்**

சிவபெருமான் கதிருக்கும் திங்களுக்கும் அப்பாற்பட்டவனாகத் திருமூலர் மட்டுமே இரண்டிடங்களில் குறிப்பிடுகிறார்.

> **"தாணுவும் ஞாயிறுந் தண்மதி யுங்கடந்து**
> **ஆண்முழு தண்டமு மாகிநின் றானே"[138]**

என்பது ஒன்று இவையன்றியும் சிவபெருமான் மதியைத் தன் சடையில் அணிந்துள்ளதாகவும் திருமுறை கூறுகின்றது.

சிவபெருமான் கதிரவனாகவும் மதியாகவும் விளங்குதல், அவற்றின் ஒளியாக விளங்குதல் என்பன சிவன் உலக இயற்கையாக விளங்குகின்றான். என்பதுணர்த்த வந்தது. உலக இயற்கையெல்லாம் சிவனே என்பது கருத்து கதிரையும் மதியையும் படைத்தல், அவற்றுக்கு ஒளி அளித்தல் முதலியன இயற்கையைச் சிவன் படைத்ததைக் காட்டுகிறது; சிவன் படைப்பே என்பதை உணர்த்துகிறது.

கதிரும் மதியும் சிவனை வழிபடுவதாகவும் அவற்றுக் கருள்வதாகவும் அவற்றை ஒறுத்ததோகவும் குறிப்பிடுதல் அவ்வியற்கைப் பொருள் அவ்வியற்கைத் தெய்வங்களிலும் சிவனே உயர்ந்தவன் என்பதுணர்த்துகிறது. சிவபெருமானே பரம்பொருள் என்பதுணர்த்த இது காட்டப்பெறுகிறது.

இப்பதினொரு வகையமைப்பையும் ஒப்பு நோக்கிக் கொள்கையில் கதிரை வழிபடுதல் மதியை வழிபடுதல் முதலான இயற்கை வழிபாட்டின் பின் அவற்றை ஒவ்வொரு தெய்வமாக உருவாக்கி வழிபடும் பல தெய்வ வழிபாடு தோன்றியது. அது பிற்காலத்தும் தொடர்ந்தது. அவற்றை மக்கள் வழிபடுவதிலும் சிவனை வழிபடுதலே சிறந்தது.

அவையாவும் சிவன் ஆற்றலால் செயல்படுவன; சிவனுக்குக் கட்டுப்பட்டன; சிவனைக் காட்டிலும் தாழ்மையுடையன என்று பலவகையாகக் கூறி சிவபெருமானுக்குப் பரம் பொருள் தன்மை ஏற்றி உரைத்தனர். அக்காரணம் பற்றியே இப்புனைவுகள் இவ்வாறமைந்தன.

"இயற்கைத் தெய்வங்களை வழிபட்ட ஒரு நிலையி லிருந்து சிவனையே முழுமுதலாகக் கொண்ட சைவம் எவ்வாறு தோன்றி வளர்ந்திருக்கக்கூடும் என்ற வினாவுக்கு விடை தருவதாகவே மேற்கண்டவை அமைந்துள்ளது"[139] என்ற அறிஞர் கூற்றும் இதை மெய்ப்பிக்கிறது.

### 3.10 இயற்கையும் அடியார் நிலையும்

சிவனடியார்களாகிய நாயன்மார்கள் தங்கள் நிலையை இயற்கைப் பொருள்களால் உவமைகள் மூலமும் பழமொழி கள் மூலமும் காட்டியுள்ளனர்.

இறைவனை வழிபடாமல் காலங் கழித்தமை அழியும் உலகியலில் பெரும் விருப்பு கொண்டமை, புலனின்பங்களில் ஆர்வம் கொண்டமை, உடல், பொருள் வாழ்க்கை முதலிய வற்றை நிலைத்தவையாகக் கருதியமை, இறையருளுக்கு இரங்கியமை, இறையருள் பெற்றமை முதலான அடியாரின் நிலைகள் இயற்கை மூலம் காட்டப்பெற்றுள்ளன.

திருநாவுக்கரசர் இறைவனைத் தொழாமல் வீணே காலங்கழித்தமையை ஏழு இயற்கைப் பொருள் பழ மொழிகள் மூலம் விளக்குகிறார். அது மட்டுமில்லாமல் தான் முன்னம் சைவசமயத்தின் பெருமைகளையும் உண்மையையும் உணராது சமண சமயத்தில் சார்ந்திருந் தமையையும் அதன் மூலம் புலப்படுத்துகிறார்.

கனியிருக்கக் காய் கவர்தல், முயல் விட்டு காக்கைபின் போதல், விளக்கிருக்க, மின்மினிக் காய்தல், கரும்பு இருக்க இரும்பு கடித்தல் முதலான பழமொழிகள்

மூலம் தன்நிலையை விளக்குகின்றார். சைவத்தைக் கனியாகவும், கரும்பாகவும் சமணத்தைக் காயாகவும் இரும்பாகவும் காட்டுகிறார்.

2. அழியும் ஐம்புலன் இன்பத்தில் உலகின்பத்திலும் அழிந்த தன்மைக்குச் சுடுநீரில் உலை உள்ள ஆமை, இரு தலைக் கொள்ளி எறும்பு, நீர்க்குமிழி முதலான உவமை களைத் தன் நிலைக்குக் காட்டுகிறார். தன்னைப் புழுவினும் கடையனாகவும் நாயினுங் கடையனாகவும் காட்டுகிறார். அழிகின்ற உடம்பை மட்டுமே போற்றும் தன்னிலைக்கும் பாம்பின் வாய்த் தேரையை உவமையாகக் காட்டுகிறார்.

சிவபெருமானுக்குச் சொந்தமில்லாமல் போய்விட்ட தால் உறவென்று சிவனைத்தான் கொள்ளாமையால் மன்றத்துப் புன்னை போல மரம்படு துயரம் எய்தியதாகக் காட்டுகிறார். உலகியலில் ஈடுபட்டமையை நெஞ்சம் என்னும் கயத்தில் வஞ்சம் என்னும் சுழியிற் பட்டமையை உணர்த்துகிறார். இவர் தன்னிலையாகக் குறிப்பனவற்றைச்

1. சிவனை வணங்காமல் காலந் தாழ்த்தமையும்

2. சைவஞ்சாராமல் பிற மதஞ் சார்ந்திருந்தமையும்.

3. புலனின்பங்களிலும் உலகியல் இன்பங்களிலும் அழுந்திமையும் என்று மூவகையாக வகைப்படுத்தலாம்.

இவருடைய பாடல் யாவும் கழிந்ததற்கிரங்கல் என்னும் அமைப்பில் காணப்பெறுகின்றன. அழுதழுது திருவடி யடைந்த அடியார் ஆகையால் இவருடைய. பாடல்களில் மிகுதியும் இவ்வகையிலே அமையக்காரணமாயின.

சுந்தரர் உலகியலின்பங்களிலும் புலனின்பங்களிலும் அழுந்தியதைப் பெரிதும் குறிப்பிடுகிறார். தன் உள்ளத்தின் அவ்வியல்புக்கு இரண்டு இடங்களில் அதற்கொப்புமையாக

நீர்ச்சுழியில் நீரைக் காட்டுகிறார். நீர்ச்சுழி தன்னை அடைந்தாரை உள் ளமுத்தல்மட்டுமல்லாமல் மீளவிடாமலும் அழுத்திடும். அத்தகையதே புலன் இன்பங்கள்.

தலைவனை அறியாமல் காலங்கடத்தினமைக்கும் தலைவனறிந்த பிறகும் அவன்பால் பற்றில்லாமல் இருந்தமைக்கம் நாயினுங்கடையேன் என்று குறிப்பிடுகிறார். சிற்றின்பத்தைப் பலவின் கனி ஈயாகக் காட்டுகிறார். இளமை நிலையாமை, வாழ்க்கை நிலையாமை, செல்வம் நிலையாமை ஆகிய நிலையாமைகளை அறிந்தும் அவற்றையே பேணினமைக்கும் உவமைகளாகக் காட்டு கிறார்.

மாணிக்கவாசகர் தன்னிலையாகக் குறிப்பிடுவனவற்றை இரு வகையுள் அடக்கலாம். ஒன்று புலனின்பங்கள் அழிந்தமை மாறாது இறைவன் அருள் பெற்றமை ஆகும். இறைவனை மறந்தமை, பிறிதொன்று,

புலனின்பங்களில் அழிந்தமைக்கு நெய்க்குடத்தில் மொய்க்கும் எறும்பையும் எறும்பிடை நாங்கூழ்ப்புழுவையும் ஆற்றங்கரையில் வேருறு மரத்தையும் மதம் பிடித்த யானையையும் பிறவிக்கடலில் காமச் சுறாவின்கண், அகப்படுதலையும் குறிப்பிடுகிறார்.

உலகியல் சாதி குலம் முதலியவற்றில் பற்றுகொண்ட தன்மைக்கு நீர்ச்சுழியைக் காட்டுகிறார்: தன் இழிந்த நிலைக்கு நாயை ஒப்பிடுவதோடு இருவகையானை என யானையையும் ஒப்பிடுகிறார். மதம்பிடித்த போது யானை தன்னையும் அறியாது; தலைவனை யறியாது, பிற மக்களையும் அறியாது என்ற மதம்பிடித்த யானையின் இயல்பைத்தான் கொண்டிருந்ததாகக் காட்டுகிறார்.

திருவாசகத்தில் மட்டும் தன்னை அறுபத்திரண்டு இடங்களில் நாய் என்று குறிப்பிடுகின்றார். திருமுறை

யாசிரியர்களில் மிகையான இடங்களில் தன்னை நாயின் தன்மை ஒப்பிட்டது இவரேயாவார். இவையும் முன்னர் கூறப்பெற்றுள்ளது.

பிற ஆசிரியர்களைக் காட்டிலும் மாறுபட்ட நிலை கண்ட இவர் இறைவன் அருள் பெறற நிலைக்கு இயற்கை இயல்பை உவமையாகக் காட்டியுணர்த்துகிறார். இது இவர் மட்டுமே கூறும் ஒன்று. இறைவனருள் தன்னில் சேர்ந்ததை இரு உமைகளால் காட்டுகிறார். பள்ளந்தாழ் உறுபுலனையும் சிறைபெறா நீரையும் உவமையாகக் காட்டுகிறார். அருள் பெற்றக் கால் உள்ளம் பெற்ற நிலைக்கு உவர்க் கடல் நீரை. உவமையாக்குகிறார். மதிநாளன்று முழுமதி நாளன்று கடலலையின் உயரம் மிகவும் அதிகமாகத் தோன்றும். கடல்பொங்குவதுபோல் காட்சியளிக்கும் அத்தன் மையை இவர் இறை அருள் பெற்ற தன் உள்ளத்துக்கு உவமையாகக் காட்டுகிறார்.

அருள் பெறாத நிலையில் தன் உள்ளத்தைக் காட்டும் போக்கும் உண்டு. கருணை வெள்ளம் பாயாததால் நெஞ்சம் கல்லாயிற்றாம்; கண் மரமாயிற்றார். அவரின் உணர்வற்றுக் கிடந்த நிலையையும் பயனற்றுக்கிடந்த நிலையையும் கல்லும் மரமும் காட்டி நின்றன. மேலும் இறைவன் மேலும் மேலும் வணங்கவேண்டிய நிலைக்கு கன்றகல் புனிற்றாப்போல் கசிந்துருக வேண்டுமெனக் காட்டுகிறார். கருவூர்த்தேவர் உலகியல் அழுந்தின நிலையை ஓரிடத்தில் பிறவிப் பௌவநீர் நீந்தும் ஏழை என்று குறிப்பிடுகிறார்.

திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய மூவரும் கூறுவது போல நாயின் தன்மையைத் தன்னிலைக்கு உவமையாகக் காட்டுகிறார். மேலும் இவர் தன்னைப் பிறர்யாரும் கூறாத வகையில் "மைக்கடா அனைய என்னை"[140] என்று எருமைக்கடாவின் தன்மைக்கு ஒப்பிடு கிறார். மிகுதியும் உணர்வற்ற தன்மையுடையது எருமை.

சிந்தையில் இறைவுணர்வற்ற தன்னிலைக்கு அதை உவமையாக்கிக் காட்டுகிறார்.

வேணாட்டிகள் தன்னிலையை நாயினுங்கடை[141] என்று குறிப்பிடுகிறார். இறையருள் பெற ஏங்கித் தவித்த தன்னிலைக்குக் கன்றகல் புனிற்றாவைக் காட்டுகிறார்.

திருமூலர் தன் நிலையைக் குறிப்பிடுவதினும் அடியவர்கள் இன்னின்னவாறு இருக்க வேண்டும் என்பன வற்றையும் பொதுநிலையில் நிலையாமைக் கருத்துக் களையும் மிகுதியும் கூறியுள்ளார். ''கன்றகல் புனிற்றா'' வை இவரும் மூன்றிடங்களில் குறிப்பிடுகிறார்.

சேரமான் பெருமான் நாயனார் இறைவன் புகழ் பாடும் தன்மைக்கு மாமதி தோன்ற மின்மினி விரிகின்ற தன்மையை ஒப்பாகக் காட்டுகிறார். விண்ணவர் யாவரும் உன்னையே வணங்கி நிற்கிறார்கள். அவர்களுக்கிடையில் தான்வந்து இறைவன் புகழ்பாடுதல் என்பது மதியொளி முன் மின்மினி ஒளிபோன்றது என்று தன்னுடைய எளிய நிலையைக் குறிப்பிடுகிறார்.

சேக்கிழார் தன்னிலை கூறுவதாகப் பாயிரப் பகுதியில் கூறப்பெறும் ஓரிடம் தவிர்த்த பிறயாவும் தான்கூறும் அடியார்களின் நிலை ஆகும். மிகவும் பெருமையுடைத்தாகிய திருத்தொண்டர் பெருமை கூறும் தன்னிலையைப்,

> ''பெருகு தென்கடல் ஊற்றுண் பெருநசை
> ஒருசு ணங்கனை ஒக்கும் தகைமையேன்''[142]

என்று வெள்ளத்தில் நீரை நக்கிக்குடிக்கும் நாயின் தன்மைக்கு ஒப்பிட்டுக் காட்டுகிறார். பிறயாவும் பிற அடியார்களின் நிலையாகும். மேலும் சுந்தரர் தன்னை நாயேன் என்றழைத்துக் கொள்வதாக, அவரின் பாத்திரப் படைப்பின் மூலம் காட்டுகிறார். சுந்தரரை இறைவன் தடுத்தாட் கொண்டபோது அவர் ஈன்ற ஆன் கனைப்புக்

கன்றுபோல் கதறினார்என்று அவரின் நிலைக் குறிப்பிடு கிறார். காவிரி ஆற்றைக் கடக்க இயலாமல் ஆற்றின் கரையிலேயே இருந்து இறைவனை நோக்கிக் கதறியபோது இறையருள் ஓலம் எனக் குரல் கொடுத்தது. அதை,

> "கன்று தடையுண் டெதிரழைக்கக் கதறிக்கனைக்கும் புனிற்றாப் போல"
> ஒன்றும் உணர்வால் சராசரங்கள் எல்லாம் கேட்க ஓலம் என மொழிந்தார்"[143]

எனக் குறிப்பிடுகிறார்.

ஆறு மேற்செல்லும் வெறியைத் தடுத்தது கண்டு சுந்தரர் இறைவனை அழைத்து நிலைக்குத்தடையுண்ட கன்று ஆவினை நோக்கிக் கதறும்காட்சியை ஒப்புமையாகக் காட்டுகிறார். கயிலையில் இறைவனைச் சென்றடைந்த சுந்தரரின் நிலையைக் கன்று கோவினைக் கண்டணைந்த நிலைக்கு ஒப்பாகக் காட்டுகிறார். இவர் சுந்தரருக்கு - சுந்தரரின் நிலைக்கு மிகுதியாக இவ்வுவமையைப் பயன் படுத்தியுள்ளார். பெரியபுராணமாகிய காப்பிய நூலுக்குப் பாட்டுடைத் தலைவன் சுந்தரராகையால் இவ்வகையில் பாடக் காணலாம். தனிமையாகச் சிவபெருமான் இருப்பதாக நினைத்து அவரைவிட்டு நீங்கக் கூடாது என்று நினைக்கும் கண்ணப்பரின் உள்ளநிலையை கன்றகல் புனிற்றாப் போல் வார் என்று கன்றை அகன்ற புனிற்றாவின் நிலையொடு ஒப்பிடுகிறார். திருஞானசம்பந்தர் திருகாட்டுப்பள்ளி அடைந்து இவ்விறைவரைப் போற்று நிலைக்குக் கன்றினை ஆவினைக் காட்டுகிறார். சேக்கிழார் கன்று ஆவின் உறவு நிலையை ஐந்திடங்களில் பாடியுள்ளார். பள்ளத்தை நோக்கி விரைந்துவரும் புனலை இரு இடங்களிலும் அணையை நோக்கி வரும் புனலை ஓரிடத்தும் முறையே சிறுத்தொண்டர் இறைவர்மேல் கொண்ட அன்புக்குத் திருஞானசம்பந்தர் திருக்கோயில் நோக்கிச் சென்ற

செயலுக்கும் திருஞானசம்பந்தரிடம் செல்லும் பாண்டிய மன்னன் ஆர்வநிலைக்கும் உவமைகளாயின. விரைவும் எதிரில் வருவனவற்றை நீக்கும் செயலும் பள்ளநீர்க்கும் அணையை நோக்கிவரும் நதிநீருக்கும் உவமையாயின.

கண்ணப்பர் சிவபெருமானுக்காக மருந்து செடிகள் தேடும் நிலைக்கு இனத்திடைப் பிரிந்த செங்கண் ஏறெனை வெருக் கொண்ட நிலையை ஒப்பாகக் காட்டுவார்.

பிற அடியார் கூற்றுக்களினின்றும் சேக்கிழாரின் இப்புனைவுகள் வேறுபட்டவை. திருநாவுக்கரசர் மாணிக்கவாசகர் முதலிய அடியார்கள் தன்னிலையை இயற்கைப் பழமொழிகள் உவமைகள் மூலம் கூறுகின்றனர். இவரோ ஓரிடத்தில் மட்டுமே கூறுகிறார். பிறயாவும் பிற அடியார்களின் நிலையாகவே காணப்பெறுகின்றன. சேக்கிழார் அறுபான்மும்மை நாயன்மார்களின் வரலாற்றைக் கூறுவதால் அவ்வடியார்களின் நிலையைக் கூறுதல் அவருக்கு அவசியமாயிற்று. காப்பிய மாந்தர்களின் நிலையைக்கூறல் காப்பியப் போக்காகும். எனவே அவர் குறிப்புகள் அவ்வாறமைந்தன.

மாணிக்கவாசகர் மட்டும் இறையருள் பெற்றுப் பொங்கும் உளநிலையையும் காட்டுகிறார். பிறர் உலகியல் அழுத்தினமையும் புலன்கள் அழித்தமையையும் கூற, இவர் அவர்களினின்று வேறுபடுகிறார். அழுதழுது அடியடைந்த அடியவராகையால் அவ்வருளின் அருமை அவருக்கு புலனாகியிருக்கும் அவ்வகையில் அவர் அவ்வருளைத் தன்னில் கண்டது பொருந்துவதே ஆகும்.

திருநாவுக்கரசர் பாடல்களில் மட்டும் புறமதம் சார்ந்து கழிந்ததற்கு இரங்குதலும் மிகையாகக் காணப் பெறுகின்றன. அவர் முதலில் சமணம் சார்ந்து பின் சைவத்தவராக மாறினவர். சமணசமயத்தின் தன்மையிலும்

சைவசமயம் உயர்ந்ததாக அவர் உணர்ந்தார். இவ்வுணர்வு களின் வெளிப்பாடே அவர் பாடல்களில் மட்டும் மிகையாகக் காணப்பெறுகின்றன.

## 3.11 இயற்கை ஒருகுறியீடு

இறைவனை ஐம்பூதமாகவும் இருசுடராகவும் மழையாகவும் மலையாகவும் கடலாகவும் ஆறாகவும் நிழலாகவும் காட்டுதல் அவனை உணர்த்தும் குறியீடுகளாகும். இயற் கையைப் பற்றி,

"இயற்கை ஒரு பெரிய குறியீடு. அதன் ஒவ்வொரு பொருட்களும் ஆவிக்குரிய ஓர் உண்மையை மறைத்து வைத்துள்ளது."[144] என்று குறிப்பிடுகிறார். இயற்கையை இறைவன் குறியீடுகளாகக் காட்டும் போக்கு சமய இலக்கியங்களில்தான் மிகையாகக் காணப்பெறுகின்றன. மெய்ம்மையுணரும் அறிவாளன் சமய அறிவாளனே, அவனுக்குதான் இயற்கை இறையை உணர்த்தும் குறியீடு களாகப் புலனாகும்.

"அருளியலாளர் கவிஞராக இருப்பின் தம்மனுபவத்தை எங்ஙனமேனும் வெளியிடவே விரும்புவர். அதற்குக் குறியீடுகள் [Symbolism] அவர்களுக்குக் கைகொடுக்கின்றன. குறியீடுகள் தாம் இயல்பாக உணர்த்தும் பொருளொடு மற்றும் பல பொருள்களையும் குறிப்பாக உணர்த்த வல்லனவாகும்."[145] என்ற கருத்து அருளியலாளன் குறியீடு களைப் பெரிதும் பயன்படுத்துவான் என்பதைப்புலப் படுத்தி நிற்கிறது.

"இறைவன் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளவே சிருட்டிகள் அனைத்தையும் படைத்தான். அதாவது சிருட்டிகள் அனைத்தும் இறைவனுடைய தன்மையையும் திறனையுமே வெளிப்படுத்தி நிற்கின்றது. ஆனால் அனைத்துச் சிருட்டிகளும் நிலம், நீர், நெருப்பு, காற்று,

விண் எனப்படும் பஞ்சபூதங்களால் ஆனவைஎன்பது தொன்மையான கருத்து. எனவே இவ்வைம்பெரும் பூதங்களின் மூலமாக இறைவன் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறான் என்பது பெறப்படும்''[146] என்ற கருத்து இறைவனே இயற்கைப்பொருள்களில் குறியீடுகளாக நின்று தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறான் என்பதைக் காட்டுகிறது. ஆனால் உணரும் ஆற்றல் அருளியலானுக்கு மட்டுமே உண்டு அவன். உணர்ந்ததைப் பிறர்க்கு உணர்த்துகிறான்.

''இறைவன் தன்படைப்பின் மூலமாகத்தன்னை வெளிப் படுத்துகிறான். அவன்படைப்பின் மூலம் அவனை அறிய முடியும். அவ்வறிவு மனிதனை அவனிடம் அழைத்துச் செல்கிறது.''[147] என்று ஹென்றிவாகன் கூறும் கருத்தும் மேலதை வலியுறுத்தக்காணலாம்.

''அருளியலில் குறியீடுகள் என்பன சிறந்த இடத்தைப் பெற்றுள்ளன. அருளியலாளன் வேறெந்த முறையிலும் வெளியிட இயலாத தன்னுணர்வுகளைத் தன் மெய்ம்மை யுணர்வுகளைக் குறியீடுகளின் மூலமாகவெளியிடுகிறான்.''[148] என்ற கருத்து அருளியலாளான் பாடல்களில் மிகுதியும் குறியீடுகள் பயன்படுவதைத் தெளிவுபடுத்துகின்றன. மேலும் அவன் பயன்படுத்த வேண்டிய நிலையையும் இது காட்டுகிறது.

''இவ்வகைக் குறியீடுகள் இந்தியாவில் இறைவனை உணரும், இறைநெறியை உணரும் முக்கியமான நெறியாக காணப்பெறுகின்றன''[149] என்ற கருத்து மேலைநாட்டிலும் இந்தியாவில் மிகுதியாகப் பயன்படுத்தப் பெறுவதைச் சுட்டுகிறது. அக்குறியீடுகளை மிகுதியான அளவில் திரு முறையாசிரியர்கள் பயன்படுத்தியுள்ளனர்.

இறைவனை ஐம்பூதங்களாகவும் மழையாகவும் மலையாகவும், ஆறாகவும் கடலாகவும் நிழலாகவும் மணியாகவும் காட்டுவனயாவும் குறியீடுகளாகக் கொள்வது பொருந்துவது. இறைவன் மலைமுதலியனவாக விளங்குதலை விளக்கமாக இறைவன் இயற்கையாக விளங்குதல் பகுதியில் வகைப் படுத்தப் பெற்றுள்ளது. எனவே கருத்துக்கள் மட்டுமே இங்கு ஆயப்பெறுகின்றன.

1. **மண்** உயிர்களையெல்லாம் தாங்குதல் அகழ்வாரைப் பொறுத்தல். உயிர்வாழ்விற்குரிய நீர்முதலியன கொடுத்தல் முதலான கூறுகளால் இறைவனுக்குக் குறியீடாக ஆனது.

2. **புனல்:** மக்களின் உயிர்வாழ்க்கைக்கு முக்கியமாக இருத்தல், மேலிருந்து கீழ்நோக்கி வருதல், தன்னைச் சேர்ந்தாரைத்தூய்மைப் படுத்தல் ஆகிய கூறுகளால் இறைவனைக் காட்டும் குறியீடாக ஆனது. இறைவனின் கருணைமக்களுக்கு அடியாரீக்குக் கிடைத்தல் மேலிருந்து கீழ்நோக்கி நீரின் குறியீட்டின் மூலம் உணர்த்தப் பெறுகிறது. தூய்மைப்படுத்தல் இறைவன் மலம் நீக்கலுக்குக் குறியீடானது.

3. **அனல்:** உயிர்வாழ்க்கைக்கு அவசியமாக இருத்தல், வெறுப்பு விருப்பின்றி யாவரையும் ஏற்றுக்கொள்ளல், தன்னைச் சேர்ந்தரைத் தூய்மைப்படுத்துதல், அழிவுக்கும் ஆக்கத்திற்கும் பயன்படுதல், மேல்நோக்கிய நெறியுடைத் தாதல் ஆகிய தன்மைகளால் அனலும் குறியீடாகியது. இறைவன் விருப்பு வெறுப்பின்றி ஏற்றுக் கொள்ளலும் தன்னைடைந்தவரின் வினைகளை, மலங்களை நீங்குதலும் தன்னில் எனச் சேர்ந்தாரை தன்னில் சேர்த்து மேல்நோக்கி அழைத்துக் கொள்ளுதல் என்பனவற்றை குறியீட்டுவகையில் அனல் இறைவனை உணர்த்துகிறது.

4. **வளி**—நீக்கமற எங்கும்பரவியித்தல். உயிர் வாழ்க்கைக்கு அவசியமாக இருத்தல். ஆற்றலுடைத்தாதல் ஆகிய தன்மைகளால் வளி இறைவனை உணர்த்தும் குறியீடாயிற்

5. வான் – பரந்திருத்தல், தன்னுள் யாவற்றையும் அடக்குதல், யாவர்க்கும் தெளிவாகத் தெரிதல், மறைவு படாதிருத்தல், மழை, மேகம் முதலியன தன்வழிச் செல்லினும் அவற்றால் மாசுபடாமை முதலிய தன்மை களால் இறையுணர்த்தும் குறியீடாகியது.

"பரந்த கடலும் விரிந்த வானமும் அகண்ட பரம் பொருளை நினைவூட்டுகின்றன. பரம்பொருள் அகண்டம், அகண்ட நினைவுக்கு உயர்ந்த மலை, நீண்ட ஆறு, பரந்த கடல், விரிந்தவானம் முதலியவற்றின், சிந்தனை தேவை"[150] என்ற திரு. வி. கலியாணசுந்தரனாரின் கருத்தும் அதை வலியுறுத்துகிறது.

6. கடல்–நிறைவுடையது, எடுக்க எடுக்கக் குறையாதது, தன்னில் பலஆறுகள் கலந்தாலும், தான் எம்மாற்றமும் அடையாதது, பரந்து விரிந்த பரப்பையுடையது, ஆழம் காணவியலாதது முதலான கூறுகளால் கடல் இறைவனாகக் காட்டும் குறியீடாக விளங்குகிறது. இவையாவும் இறைவன் இயல்புகளைத் தெளிவாக விளக்குகின்றன.

7. ஆறு–இவ்வுலகில் இடையறாத இயக்கத்தையும் உயிர்ப்புத்தன்மையும் ஆறுகாட்டி நிற்கிறது. மேலிருந்து கிழிறங்கி வருதலையும் இதற்குக் கூறலாம். பொருளியல் வாழ்வுக்கு மிக இன்றியமையாகத் தோன்றும் ஆறு, பரம்பொருளை உணர்த்தும் குறியீடாகக் காட்டப்பெறு கிறது. ஆனந்தவாரி, ஆனந்தவாறு என மாணிக்கவாசகர் குறிப்பதெல்லாம் இவ்வகைக் குறியீடுகளே ஆகும்.

8. மலை–வலிமை உயர்ந்த தோற்றம், பருமை முதலான இயல்புகளால் இறைவனை உணர்த்தும் குறியீடாக ஆனது.

"பருமை, உயர்வு, திண்மை இம்மூன்று பண்புகளே மலையைப் படிமங்களாகக் கையாளுவதில் முக்கிய

அடிப்படைகள். இப்பண்புகள் தனித்தனியாகவோ மூன்றும் கலந்த நிலையோ எப்படியும் வரலாம். எனவே, இம் மூன்றையும் முழுமையாகச் சேர்த்து வலிமை என்பதற்கு மலையைப் படிமமாகக் காண்கிறோம்'',[151] என்று கருத்து மலையின் இயல்புகளைத் தெளிவுபடுத்துகிறது. அவ்வியல்பு களால் மலை இறைவனை உணர்த்தும் குறியீடாகியது எனலாம்.

9. **மழை:** மழை மேலிருந்து கீழே பொழிதல், உயிர் வாழ்க்கைக்கு முக்கியமாக இருத்தல். அவற்றிலும் முக்கிய மாகக் கைமாறு கருதாத உலகுக்கு அருளல் ஆகியதன்மை களால் இறைவனை உணர்த்தும் குறியீடாகியது.

“திரும்பப்பெறும் உணர்வேதுமின்றி – பயன் ஏதும் கருதாது செய்யும் உதவிக்கு மேகம் குறியீடாக ஆளப் பெறுகிறது'' என்னும் கருத்து மேகத்திற்குக் கூறப் பெறினும் மழைக்கும் பொருந்துவதாகும்.

10. **நிழல்:** இது இறைவனருளுக்குக் குறியீடாகியது. வெப்பத்தால் துன்புற்றாரைக் குளிர்ச்சி செய்தல், தான் பிறரிடமிருந்து ஏதும் பெறாமை ஆகிய குணங்களால் இறையருளுக்குக் குறியீடாகியது.

மரத்தின் நிழல் அல்லது பொதுவாக நிழல் என்பது இறையருளுக்குக் குறியீடாகும். மேலை நாட்டார்க்கு வெயிலின் வெப்பம் இறையருளுக்கு உவமையாகக் காட்டப் பெறுதல்போல் தமிழகத்தில் இறையருளுக்கு உவமையாக நிழல் காட்டப்பெறுகிறது''[152] என்ற கருத்து தமிழகத்தில் நிழலின் அருமை இறையருளாகக் காட்டப்பெறுதலை உணர்த்துகிறது. இவ்வகைக் குறியீட்டை மிகவும் பயன் படுத்துகின்றனர்.

மேலும் இறைவன் அணிந்துள்ள மதி, பாம்பு, மான்தோல், புலித்தோல்,, யானைத்தோல், ஆமையோடு,

ஏனமருப்பு முதலியனவும் இறைவனாற்றலை உணர்த்தும் குறியீடுகளாக விளங்குகின்றன என்று கொள்ளலாம். இறைவன் தலையிலும், மார்பிலும், இடுப்பிலும், கையிலும் அணிந்துள்ள பலபொருள்களும் குறியீடுகளாகப் பல பொருள்களை உணர்த்துவதாகப் பட்டியலிட்டே-ஓரறிஞர் காட்டியுள்ளார்.[153]

"உண்மையான கலை என்பது தெளிவான உணர்ச்சிகளைக் காட்டுவதாகவும் குறியீடுகளை உடைத்ததாகவும் இருக்கவேண்டும்[154] என்ற கருத்திற்கேற்ப திருமுறையில் பலவகையிலும் குறியீடுகள் பயன்படுத்தப் பெற்றிருக்கின்றன.

இங்குக்குறியீடுகளாகக் காட்டப்பெற்ற யாவும் உய்த்துணரும் வகையில்தான் காட்டப்பெற்றுள்ளன. எவ்வாறு இவை இறைவனை உணர்த்தும் குறியீடுகளாக அமைந்தன என்று தெளிவாக ஆசிரியர்களால் புலப்படுத்தப் பெறவில்லை.

கவிஞன் தன் அனுபவங்களைக் குறியீடுகளால் உணர்த்துகையில் மக்கள் உய்த்துணருமாறே அவற்றைப் படைப்பான். அவற்றினைத் தெளிவாக விளக்க மாட்டான்.[155] என்ற கருத்தை அது தெளிவுபடுத்தப் பெறுகிறது. குறியீடுகளை அறிஞர் மூன்று வகையாக வகைப்படுத்தியுள்ளார். அவை,

1. உணர்ச்சிகளை மட்டும் தோற்றுவிக்கும் குறியீடுகள்

2. கருத்துக்களை மட்டும் புலப்படுத்தும் குறியீடுகள்

3. உணர்ச்சிகளையும் கருத்தையும் இணைத்தும் புலப்படுத்தும் குறியீடுகள் என்பன.[156]

அவற்றுள் திருமுறையில் இறுதி இரண்டு வகைமட்டுமே காணப்பெறுகின்றன. கடலோ, மலையோ, நிழலோ எது

வாயினும் கருத்துக்களைப் புலப்படுத்துவதோடு இறைவனை வணங்குதல்-இயற்கையின்-மூலமறிதல் வேண்டும் என்னும் உணர்வையும் ஊட்டுகிறது. அருளியலைப் பொறுத்த வரையில் வெறும் உணர்வுகளை மட்டும் தோற்றுவிக்கும் குறியீடுகள் அமைவது அரிது.

திருமுறையாசிரிகளில் தேவார மூவராகிய திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவரும் மாணிக்கவாசகரும் திருமூலரும் மிகையாக இக்குறியீட்டாட்சிகளைப் பயன்படுத்தியுள்ளனர். திருஞான சம்பந்தர் முதல் மாணிக்கவாசகர் வரையிலான ஆசிரியர்களின் நூல்கள் முழுக்க முழுக்க தோத்திர நூல்கள். இறைவன் புகழ்கிளத்தும் நூல்கள். இறைவன் இயல்புகளைப் புகலுதல் ஆகையால் அவர் பாடல்களில் அவை மிகையாக இடம் பெற்றிருக்கவே வாய்ப்புள்ளது. திருமூலர் இறைவன்/இறைமை இயல்புகளைத் தத்துவ நோக்கோடு உணர்த்துவர். ஆகையால் முன்னவர்களுக்கு அடுத்த நிலையில் மிகையாக இடம்பெற வாய்ப்புண்டு.

## 3.12 முடிபுகள்

இறைவன் மலரணிதல், விலங்கினங்களை அணிதல், திங்களணிதல், புனலணிதல், இயற்கையின் ஒரு கூற்றினை அணிதல் (யானை உரி முதலியன) முதலிய இறைவன் அழகைக் காட்டும் செய்திகளைக் கூறும் வகையிலும் இறைவன் இறைவியர் உறுப்புநல அழகினைக்காட்டும் இறைவனை இயற்கையோடு இணைத்துக்காணும் மரபிலும் இயற்கைப் பொருள்களால் வழிபடுவதாகக் காட்டும் பகுதிகளிலும், தன்னிலையைக் காட்டும் வகையிலும் குறியீடுகளைப் பயன்படுத்தும் வகையிலும் மிகுதியான குறிப்புகளைத் திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும், சுந்தரரும், மாணிக்கவாசகரும் காட்டுகின்றனர். அவர்கள் நூல் இறைவன் புகழ்கிளத்தும் நூல் என்பது அதற்குக்காரணம்.

அதுவன்றியும் திருஞானசம்பந்தர்க்கும் திருநாவுக்கரசருக்கும் காலச்சூழலும் முக்கியமானதாகக் கருதப்பெறுகிறது. அவர்கள் காலத்து இயற்கையையே இறைவனாக வழிபட்ட நிலைமாறி ஒவ்வொரு இயற்கையையும் ஒவ்வொரு தெய்வ மாக, வருணனாக, கதிரவனாக, சந்திரனாக உருவங் கொடுத்து வழிபடப்பெறும் பலதெய்வ வழிபாடு இருந்தது. அத்தெய்வங்கள் எல்லாவற்றிற்கும் மேலானவன் சிவபெருமான் என்பதை உணர்த்தவும் இவர்கள் மிகுதியாக இத்தகைய குறிப்புகள் தரவேண்டிய அவசியம் ஏற்பட்டது.

சுந்தரர் காலத்தில் ஓரளவு சிவபெருமான் முழுமுதற் கடவுளாக மக்களிடையில் ஏற்றுக்கொள்ளப் பெற்றதால் இறை இயற்கையைப் பற்றிய தொடர்புகளை அவர்களைக் காட்டிலும் குறைவாகத் தந்துள்ளார் என்பது பொருந்தும். பத்தாம் திருமுறையாசிரியர் தத்துவ விளக்கமாகத் தம் நூலையாத்தமையால் தேவாரமூவர் அளவுக்குக் கருத்துக் களைத் தந்துள்ளார்.

ஒன்பதாம் திருமுறையாசிரியர்கள் பதினொன்றாம் திருமுறையாசிரியர்களில் பெரும்பான்மையோரும், சிவ பெருமானைப் பரம்பொருளாக ஏற்றுக்கொண்ட காலத்தில் இறைவனைப் பாடியவராகையால் முன்னவர்களின் அளவுக்குக் கருத்துக்களை மிகுதியாகத் தரவேண்டிய அவசியமில்லாமற் போயிற்று.

சேக்கிழார் தம் நூலுள் அறுபத்துமூன்று நாயன்மார் களின் வரலாற்றைக் கூறுகின்றார். ஆகையால் அவர் அவர் களின் வரலாற்றுக்கே இன்றியமையாவிடத்தைத் தருகிறார். இருப்பினும் பாத்திரங்களின் மூலமாகவும் இயற்கைப் புனைவின் மூலமாகவும் (நாடுநகர) தன்கருத்தையும் தருகிறார். ஆகையால் இவரின் கருத்துக்கள் மிகையாகக் காணப்பெறவில்லை. அதுவன்றியும் இக்கவி, அடியார் பெருமை பாடுவார் என்பதும் கொள்ளலாம்.

# அடிக்குறிப்புகள்

## இயல்-1

1. அ.மு. பரமசிவானந்தம், சமுதாயமும் பண்பாடும், பக். 361.
2. அ.மு. பரமசிவானந்தம், எல்லோரும் வாழவேண்டும், பக். 142.
3. William Hillcourt, Field book of Nature activities and conservations, page, Introdution.
4. திரு. வி. கலியாணசுந்தரனார், உள்ளொளி, பக். 219.
5. இல. செ. கந்தசாமி, வேளாண்மையும் பண்பாடும், பக். 82.
6. Joseph Warren Beach, The concept of Nature in 19th cen. English poetry page. 113.
7. டாக்டர். ச.வே. சுப்பிரமணியன், மாந்தர் சிறப்பு, பக். 28.
8. அ.மு. பரமசிவானந்தம், சமுதாயமும் பண்பாடும், பக். 339.
9. அ.மு. பரமசிவானந்தம், சமுதாயமும் பண்பாடும், பக். 464.
10. ஜி. ஜான்சாமுவேல், பாரதியும் ஷெல்லியும், பக். 464.
11. ஜி. ஜான்சாமுவேல், பாரதியும் ஷெல்லியும், பக். 436.
12. ஜி. ஜான்சாமுவேல், பாரதியும் ஷெல்லியும், பக். 438.
13. அன்னிமிருதல குமாரி தாமசு பரிபாடலில் இயற்கை, பக். 23.
14. மேற்கோள், மா. காசிராசன், சுந்தரர் தேவாரத்தில் இயற்கை, பக். 120.
15. அன்னிமிருதலகுமாரி தாமசு, பரிபாடலில் இயற்கை, பக். 24.
16. Dr. C.P. Ramaswami Aiyar, Treatment of Landscape in Eastern and western poetry, page. 9.

17. அ.மா. பரிமணம், இயற்கை நாட்டியம், பக். 36.
18. புறநா-51.
19. புறநா-27.
20. சிலம்பு, மங்கலவாழ்த்து பாடல், வரி. 1-9.
21. சிலம்பு, மனையறம் படுத்தகாதை, வரி, 21-24.
22. சிலம்பு, அந்திமாலை சிறப்பு செய்காதை, வரி 18-20.
23. சிலம்பு, அந்திமாலை சிறப்பு செய்காதை, வரி 18-20.
24. சிலம்பு, அந்திமாலை சிறப்பு செய்காதை, வரி 18-20.
25. திருக்குறள், விருந்தோம்பல், 10.
26. திருக்குறள், இல்லறவியல், 8.
27. நாலடியார், 138.
28. அறநெறிச்சாரம், 148.
29. நீதிநூல், 32-6.
30 7-3-4.
31. 7-60-9.
32. திருக்குறள், நிலையாமை, 3.
33. 7-35-6, 10-213, 11-28-7, 12-13-8.
34. 7-35-6.
35. 10-213.
36. 11-28-7.
37. 12-13-8.
38. திருக்குறள், நிலையாமை, 6.
39. 7-60-3.
40. 11-26-20.
41. 10-221.
42. 10-229.
43. 12-18-22.
44. 4-79-2.
45. 8-10-6.
46. 4-79-10.
47. Swami Ramananda, The tortoise and the Jila, Saptha giri, Eeb'83, page, 32.

48. திருமந்திரம், 177.
49. திருக்குறள், 126.
50. 8–6–21.
51. 11–26–28.
52. 8–5–41.
53. 8–6–21.
54. 8-6-25.
55. 8-6-25.
56. 11–26–28.
57. 11–26–28.
58. 8–5-27, 8–24–4.
59. 8–41–1.
60 8–6–3.
61. 10–247.
62. 2-79–6.
63. 4–46-1.
64. 11–26-8.
65. 8–31–5.
66. 7–60 1, 8-51-8.
67. 10–1615.
68. திருக்குறள், பிறனில் விழையாமை, 8.
69. 10–244.
70. தாயுமானவர், பராபரக்கண்ணி, பா எ. 153.
71. திருக்குறள், இனியவை கூறல், பா. எ. 10.
72. பரிமேலழகர் உரை, குறள் – 100, பக் – 40. கழக வெளியீடு.
73. 4–5–2.
74. 11–14–வரி. 76–80
75. ஆண்டாள், திருப்பாவை, பா. எ. 3.
76. 4–5–7.
77. 4–5–10

78. ச. வே. சுப்பிரமணியன், "பறவையும் மனிதனும்" மாந்தர் சிறப்பு. பக். 41.
79. திருக்குறள், காலமறிதல், பா. எ. 10.
80. மூதுரை, பா. எ. 16.
81. ச,வே. சுப்பிரமணியன், மு. நூ., பக். 44.
82. 5-75-1.
83. 10-571.
84. 12-10-116.
85. ச.வே. சுப்பிரமணியன், விலங்கும் மனிதனும், மாந்தர் சிறப்பு, பக். 144.
86. 8-25-5.
87. 8-4-65, 66.
88. 8-5-87.
89. 7-5-93.
90. 11-6-25.
91. பெரிய புராணம், பாயிரம், 6.
92. 8-2-151-152.
93. 8-3-169.
94. 8-5-3.
95. 2-30-350
96. 11-26-28.
97. பெரியபுராணம், தடுத்தா., பா. எ. 68.
98. 11-18-வரி-30.
99. 10-2581.
100. 9-21-5.
101. 8-4- வரி 73-74.
102. 12-10-112.
103. 8-32-8.
104. 8-5-1, 8-23-4, 8-23-9.
105. 8-6-20.
106. 11-26-24.

107. 11-30-4.
108. 5-97-23.
109. திருமந்-164.
110. பிரபுலிங்கலீலை, கடவுள் வாழ்த்து.
111. 8-49-2.
112. 10-.
113. 10-1601.
114. 4-75-9.
115. 8-34-6.
116. 12-பாயி-10.
117. 11-14-94.
118. 1-22-2.
119. 10-121.
120. 10-117.

## இயல் - இரண்டு

1. தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான், தமிழ்க் கோயில்கள் தமிழர் பண்பாடு, பக். 2.
2. க.த. திருநாவுக்கரசு, தமிழர் நாகரிக வரலாறு, முதற் பகுதி, பக். 267.
3. ஆ.மு. பரமசிவானந்தம், "சமய உணர்வே வாழ்வின் அடிப்படை, எல்லோரும் வாழவேண்டும், பக். 64.
4. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை, "பழந்தமிழர் சமயநிலை," தமிழ்த் தாமரை, பக். 88, 89.
5. Quated, Dr. Braj Biharichaubey, Treatment of Nature in the RIG. Veda, pase. 49.
6. Quated, Dr. Braj Biharichaubey, Treatment of Nature in the RIG. Veda, Ibid, page 49.
7. ந.ரா. முருகவேள், சைவசித்தாந்தம், பக். 34.

8. பி.சி. கணேசன், அருளியலும் அறிவியலும், பக். 12.
9. சாமி சிதம்பரனார், தேவாரத் திருமொழிகள், பக். 79.
10. க. வெள்ளைவாரணன், "சிலம்பிற் சைவம்", சிலப்பதிகாரச் சிந்தனைகள், பக். 18.
11. டாக்டர். க.ப. அறவாணன், மரவழிபாடு – திராவிட ஆப்பிரிக்க ஒப்பீடு, பக். 17.
12. Dr. Braj Bihari Chaubey, Ibid, page–80.
13. திரு. வி. கலியாணசுந்தரனார், முருகன் அல்லது அழகு, பக். 28.
14. மா. காசிராசன், சுந்தரர் தேவாரத்தில் இயற்கை, பக். 44.
15. திரு. வி. கலியாணசுந்தரனார், முருகன் அல்லது அழகு, பக். 79.
16. மறைமலையடிகள், முல்லைப்பாட்டு ஆராய்ச்சி உரை, பக். 79.
17. ச. வே. சுப்பிரமணியன், இலக்கிய உணர்வுகள், பக். 15.
18. ஜி. ஜான்சாமுவேல், பாரதியும் ஷெல்லியும் ஓர் புதிய பார்வை, பக். 443.
19. Xavier S. Thani Nayakam, Landscape and poetry, page. 66.
20. ஜி. ஜான்சாமுவேல், பாரதியும் ஷெல்லியும் ஓர் புதிய பார்வை, பக். 428.
21. 9–23–1, 2–95–1, 4–72–8, 7–44–7, 12–28–441.
22. 1–5 9–6. 9–1–6, 12–28–188, 6–21–4, 7–83–8.
23. புறநா. 50.
24. 2–81–4, 7–38–1, 12–21–133, 2–68–3, 4–97–5.
25. 6–35–1, 1–130–2, 5–46–2, 7–28–5, 7–57–4, 12–27–16, 11–4–23.

26. 2-44-2. 6-22-8, 7-53-5, 9-15-3, 12-28-344.
27. 1-54-2. 12-28-143, 7-90-5, 4-19-6.
28. 5-71-2, 2-107-4, 7-57-11.
29. 2-2-4, 5-97-8, 7-10-1, 12-28-167.
30. 2-68-2, 4-58-8, 7-53-3, 9-1-2, 11-6-5, 12-19-12.
31. 2-11-9, 4-2-2, 7-38-6, 12-28-292.
32. 1-79-5, 5-36-2, 7-46-3.
33. 1-40-1. 7-23-4, 11-6-14.
34. 1-27-4, 2-28-5.
35. 6-3·-3, 6-6-4.
36. 7-43-2,
37. 11-33-78, 9-2-1, 9-11-8, 11-4-76, 12-பாயி 1,12-6 வை-19. 12-28-267, 12-21-222, 12-தரு-85.
38. 12-28-382, 12-69-11, 1-85-5, 1-79-1, 2-80-7, 6-9-5, 4-44-9, 11-4-22, 12-28-282.
39. 1-122-1, 1-168-1, 7-24-1, 6-77-2, 6-50-6, 11-6-26, 12-21-252
40. 1-70-11, 2-79-10, 2-82-9.
41. 1-77-2, 2-40-6.
42. 6-97-2, 4-74-3, 4-75-8.
43. 4-75-8.
44. 7-36-4, 7-96-2.
45. 7-91-6.
46. 8-27-8, 8-3 - வரி 125.
47. 11-13-2·3, 11-6-26, 11-3-11.
48. 2-105-9, 7-15-3, 5-9-6.
49. 4-84-10.
50. 1-136-6, 7-30-7.
51. 2-36-3, 5-46-4.
52. 7-80-2, 3-3-5.
53. 12-5-7, 7-25-5.
54. 1-24-10, 2-41-5.

55. 7-97-7.
56. 1-114-1, 2-5-2.
57. 7-33-4.
58. 1-136-6.
59. 1-30-4, 5-49-10.
60. 7-99-1, 1-126-2.
61. 2-49-10. 7-46-6.
62. 2-7-5.
63. 1-46-2, 4-19-1.
64. 6-19-1, 2-2-5, 3-92-4.
65. 1-51-6, 1-136-1.
66. 1-79-1,
67. 1-53-10, 1-80-6.
68. 6-1-1, 5-15-1, 1-77-2, 7-58-6, 6-54-3.
69. 6-99-2, 5-3-3, 7-67-8, 7-59-3.
70. 9-5-2, 9-13-11.
71. 11-24-1, 1-52-9, 4-48-1.
72. 6-80-3, 1-104-4, 6-29-8, 7-29-1, 7-52-5.
73. 1-12-1, 7-43-10.
74. 12-நாவு-7, 7-48-2.
75. 4-61-1.
76. 2-64-2, 1-3-5.
77. 3-26-1, 2-71-8.
78. 2-61-2, 12-21-160, 1-132-1.
79. 4-3-1- முதல் 11.
80. 6-12-21 384.
81. திரு.வி. கலியாணசுந்தரனார், உள்ளொளி, பக். 154.
82. 8-7-13.
83. 8-7-16.
84. 11-28-28, 20.
85. 11-28-148.

86. 12–21-132.
87. 12–நாடு-22
88. 2-88-2, 1-16-6.
89. 4-19-3.
90. 4-7-6, 4-36-4, 4-78-10, 6-34-7, 6-66-6.
91. 6-46-2, 6-94-4, 6-41-3.
92. 7-30-3.
93. 7-19-9, 7-59-3, 7-59-3.
94. 8-8-7, 8-5-76, 8-28-1.
95. 9-1-3.
96. 9-11-9.
97. 9-24-1.
98. 10-400, 869, 1326.
99. 10-401, 1141,
100. 11-4-20.
101. 11-6-15.
102. 11-14-வரி-61, 11-14-வரி58.
103. 11-21-24.
104. 11-23-73.
105. 11-30-6.
106. 1-132-4.
107. 1-76-7, 1-132-4.
108. 6-1-1, 6-8-5.
109. 8-4-137, 8-7-18.
110. 10-435, 2425.
111. சரவண ஆறுமுக முதலியார், திருநாவுக்கரசர், பக்.94.
112. 6-5-3, 1-7-4, 7-68-3.
113. 8-11-18.
114. 1-37-8, 3-57-3.
115. 4-49-8, 4-38-3, 5-16-3
116. 7-19-6.

117. 9-18-2.
118. 10-1851, 427.
119. 11-6-5.
120. 11-38-22.
121. 12-19-55, 12-19-60.
122. 1-11-2, 6-4-3, 9-1-3.
123. 4-74-3, 6-87-4, 7-30-3, 7-40-4
124 ஆ. வேலுப்பிள்ளை, "அப்பர் தேவாரத்துள் சிவசூரிய வழிபாடு", தமிழர் சமய வரலாறு, பக். 105.
125. ந.சி. கந்தையா பிள்ளை, தமிழ் இந்தியா, பக். 156.
126. 6-15-6, 6-76-8.
127. 7-76 8, 8-2-20.
128. 10-2959.
129. 5-16-3, 4-38-6.
130. 6-27-3, 11-23-88, 11-22-11.
131. Indu Inderjit, Sciencc of Symbol, Page. 52.
132. 4-23-3, 5-25-1, 1-50-2.
133. 3-115-7, 6-50-10, 9-28-9, 7-16-6.
134. ஆ. வேலுப்பிள்ளை, "அப்பர் தேவாரத்துள் சிவசூரிய வழிபாடு", தமிழர் சமய வரலாறு, பக். 109.
135. 1-120-9, 7-24-8, 6-90-2, 3-31-6.
136. 6-6-4, 6-6-8, 6-6-8, 4-17-9.
137. 3-83-3, 6-21-3, 7-96-2.
138. 10-361.
139. ஆ. வேலுப்பிள்ளை, மு.நூ. பக்.110.
140. 9-9-7.
141. 9-21-4.
142. 11-6-25, 12 பாயி. 6.
143. 12-தடு. 68.
144. மேற்கோள், அன்னிமிருதலகுமாரி தாமசு, பரிபாடலில் இயற்கை, பக். 23.

145. டாக்டர். இராதா தியாகராஜன், திருவாசகத்தில் அருளியல், பக். 10

146. மு.மு. இஸ்மாயில், "திருவாசகம்", சேலம் தமிழ்ச் சங்கக் கட்டிடத் திறப்பு விழா சிறப்பு மலர். பக்.51.

147. Irat Hussain, The Mystical element in the Metaphysical poets of the Seventeenth Centuary, Page–56.

148. Indu Inderjit, Ibid, Page-13.

149. Indu Inderjit, Ibid, Page–13.

150. திரு. வி. கலியாண சுந்தரனார், உள்ளொளி, பக். 117.

151. துரை. சீனிச்சாமி, கம்பராமாயணத்தில் இயற்கை, பக். 116.

152. M.A. Dorai Rangasamy. The Religion and philosophy of Tevaram xavier. Thani Nayakam, Lands cape and Poetry, Page-17.

153. Indu Inderjit, Ibid. Page. 50-66.

154. V.V. Jain, W.B. Yeats as a critic, Page, 130.

155. V.V. Jain, W.B. Yeats as a critic. Paege. 141.

156. V.V. Jain, W.B. Yeats as a critic. Page. 150.

## துணை நூற்பட்டியல்


1. அறவாணன், டாக்டர் க.ப., மரவழிபாடு – திராவிட ஆப்ரிக்க ஒப்பீடு, பாரிநிலையம், சென்னை, 1984.
2. அன்னி மிருதலகுமாரி தாமசு., பரிபாடலில் இயற்கை, ஜெயகுமாரி ஸ்டோர்ஸ், நாகர்கோவில், முதற்பதிப்பு, 1971.
3. ஆறுமுக முதலியார், சரவண., திருநாவுக்கரசர், சொர்ணம்மாள் நினைவுச் சொற்பொழிவுகள், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர், முதற்பதிப்பு, 1970.
4. காசிராசன், மா., சுந்தரர் தேவாரத்தில் இயற்கை, எம்ஃபில் பட்ட ஆய்வேடு, தமிழ்த்துறை, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை, 1980
5. கந்தசாமி, இல. செ., வேளாண்மையும் பண்பாடும், தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக் கழகம், கோயம்புத்தூர், 1974
6. கணேசன், பி.சி., அருளியலும் அறிவியலும், வானதி பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 1983.
7. கலியாணசுந்தரனார், திரு. வி., உள்ளொளி, அரசி புக் டெப்போ, சென்னை-4, ஆறாம் பதிப்பு, 1969.
8. கலியாணசுந்தரனார். திரு. வி, முருகன் அல்லது அழகு, அரசி புக் டெப்போ, சென்னை-4, 1968.
9. சிதம்பரனார், சாமி., தேவாரத் திருமொழிகள், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை-5, இரண்டாம் பதிப்பு, 1963.

10. சீனிச்சாமி, துரை., கம்பராமாயணத்தில் இயற்கை, முனைவர்பட்ட ஆய்வேடு, தமிழ்த்துறை, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை, 1974.

11. சுப்பிரமணியன், ச.வே., இலக்கிய உணர்வுகள், தமிழ்ப் பதிப்பகம், சென்னை 96, முதற்பதிப்பு, 1978.

12. சுப்பிரமணியன், ச.வே., மாந்தர் சிறப்பு, தமிழ்ப் பதிப்பகம், சென்னை-96, மூன்றாம் பதிப்பு, 1981.

13. ஜான் சாமுவேல், ஜி., பாரதியும் ஷெல்லியும், மணி பதிப்பகம், சென்னை-85, முதற்பதிப்பு, 1980.

14. திருநாவுக்கரசு, க.த., தமிழர் நாகரிக வரலாறு, முதற் பகுதி, தொல்காப்பியர் நூலகம், சென்னை-4, முதற்பதிப்பு, 1962.

15. துரைசாமி, ஔவை. சு., தமிழ்த்தாமரை, வள்ளுவர் பண்ணை, சென்னை, இரண்டாம் பதிப்பு, 1977.

16. பரமசிவானந்தம், அ.மு., எல்லோரும் வாழவேண்டும், தமிழ்க்கலைப் பதிப்பகம், சென்னை-30, 1962.

17. பரமசிவானந்தம், அ.மு., சமுதாயமும் பண்பாடும், தமிழ்க்கலைப் பதிப்பகம், சென்னை-30, முதற்பதிப்பு, 1962.

18. பரிமணம், அ.மா., இயற்கை நாட்டியம், குமரன் அச்சகம், பழனி, முதற்பதிப்பு, 1975.

19. பாஸ்கரத் தொண்டைமான், தொ.மு., தமிழ்க் கோயில்கள் தமிழர் பண்பாடு, எஸ்.ஆர். சுப்பிரமணிய பிள்ளை பப்ளிஷர்ஸ், திருநெல்வேலி, 1961.

20. மறைமலையடிகள், முல்லைப்பாட்டு ஆராய்ச்சியுரை, கழகவெளியீடு, சென்னை-1, முதற்பதிப்பு, 1903.

21. முருகவேள், ந.ரா., சைவசித்தாந்தம், சேக்கிழார் பதிப்பகம், சென்னை-69, முதற்பதிப்பு, 1984.

22. வெள்ளைவாரணன், க., சிலப்பதிகாரச் சிந்தனைகள் அண்ணாமலைப் பல்கலைக்கழகம், முதற்பதிப்பு, 1976.

23. வேலுப்பிள்ளை, ஆ., தமிழர் சமய வரலாறு பாரி புத்தகப் பண்ணை, சென்னை-5, முதற்பதிப்பு, 1980.

## ஆங்கில நூல்கள்

1. Braj Bihari Chaubey, Treatment of Nature in the Rg veda, Vedic Sahitya Sadan, Hoshiarpur, First Edition. 1970.
2. Dorai Rangaswamy, M.A., The Religion and Philosophy of Tevaram, Book I & II, University of Madras, 1959.
3. Inderjit, Indu , Science of Symbols, Deeper View of Indian Deities, Geetanjali Publications, New Delhi, First Edition, 1978.
4. Jain, V.V., W.B. Yeats As a Literary Critic, Atma Ram & Sons, Delhi-1980.
5. Joseph Warren Beach, The Concept of Nature in 19th Cent. Poetry, Pageant Book Company, New York, 1956,
6. Ramaswamy Aiyar, Dr. C.P., Treatment of landscape in Eastern and Western Poetry, The Maharaja Sayajirao Gaekwad Honoranium Lecturers] 1955-56. Baroda, First Edition, 1956.
7. Thani Nayakam, Xavier, s,, Landscape and Poetry, Asia Publishing house Madras, Second Edition 1966.
8. William Hillcourt, Field book of Nature activities and Conservations, G.P. Putnam's Sons, New York, 1961.

——x——